# செக்கிழுத்த செம்மல் சிதம்பரனார்





தி.நெ. வள்ளிநாயகம்

# செக்கிழுத்த செம்மல் சிதம்பரனார்

தி. நெ. வள்ளிநாயகம்

எம். ஏ. (ஆங்)., எம். ஏ. (தமிழ்)., பி. எல்., டி. எஸ். எல்




உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

டி. டி. டி. ஐ. (அஞ்சல்) தரமணி, சென்னை-600113

கப்பலோட்டிய தமிழன் வ. உ. சி. அறக்கட்டளைச் சொற்பொழிவு-1
Kappalottiya Tamilan V. O. C. Endowment Lecture-1
Endowment Lecture Publication Number-10

# BIBLIOGRAPHICAL DATA


| | |
|---|---|
| Title of the book | Cekkilutta Cemmal Citampar̲anār |
| Author | Thiru. T. N. Vallinayagam, M.A.(Eng); M.A. (Tamil)., B.L., D.S.L. |
| Publisher | International Institute of Tamil Studies, T. T. T. I (post) Taramani, Madras-600113. |
| Publication number | 119 |
| Language | Tamil |
| Edition | First |
| Date of Publication | October, 1985 |
| Paper used | White printing |
| Size of the book | 21×14 cms. |
| Printing type used | 10 point |
| Number of Copies printed | 1200 |
| Number of Pages | 6+160 |
| Price | Rupees fifteen only |
| Printer | Jayasree printers, No.1, Sundareswarar koil st, Royapettah, Madras-14. |
| Binding | Section binding |
| Artist | A. S. Velusamy |
| Subject | A Study on V. O. C. |

டாக்டர். ச. வே. சுப்பிரமணியன்
இயக்குநர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை-600113.

# பதிப்புரை

தமிழின் பல்வேறு துறைகளைத் தமிழருக்கும் உலகுக்கும் அறிமுகப்படுத்துவனவாக நிறுவன அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் திகழ்கின்றன. கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரனாரின் பெயரால் இயங்கும் அறக்கட்டளை, தேசிய நீரோட்டத்தில் தமிழின், தமிழரின் பங்கினை விளக்க முற்பட்டுள்ளது. அவ்வகையில் முதன் முதலாக, தேசிய விடுதலைக்கு உரமிட்ட அன்னாரின் வாழ்க்கை வரலாறே சொற்பொழிவாக அமைகிறது. 'செக்கிழுத்த செம்மல் சிதம்பரனார்' எனும் இந் நூல் விடுதலைப் போரில் இவ்வீரத் தமிழரின் ஈடுஇணையற்ற பங்கினையும், தமிழிலக்கிய உலகிற்கு ஆற்றியுள்ள அருந் தொண்டினையும் சிறப்புற எடுத்துக் காட்டுகிறது. நாட்டுப் பற்றும் தமிழ்ப்பற்றும் தம்மிரு கண்களாகக் கொண்ட வீர இளைஞரின் எழுச்சிமிகு வாழ்க்கையை, கற்பாருக்கு எழுச்சி தரும் வகையில் படைத்துள்ள திறம் பாராட்டற்குரியது. இந் நூலைச் சிறப்புற உருவாக்கித்தந்துள்ள வழக்கறிஞர் திரு. தி. நெ. வள்ளிநாயகம் அவர்களைப் பாராட்டி மகிழ்கின்றேன். இதுபோன்ற பல நல்ல நூல்களைத் தமிழுலகுக்குத்தரவேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன்.

அறக்கட்டளைச் சொற்பொழிவு நூல்களைப் பொறுமையுடனும், பொறுப்புடனும், செம்மையாகவும் உருவாக்கித் தருகின்ற டாக்டர் ச. சிவகாமிக்கு என் வாழ்த்துகள்.

நிறுவனப் பணிகள் அனைத்திற்கும் ஆக்கமும் ஊக்கமும் தருகின்ற மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்களுக்கு எங்கள் நன்றியும் வணக்கமும் உரித்தாகுக.

நூலை நல்ல முறையில், உரியகாலத்தில் சிறப்புற அச்சிட்டுத் தந்துள்ள ஜெயஸ்ரீ பிரிண்டர்ஸ் உரிமையாளர் பாலன் அவர்கட்கும் எங்கள் நன்றி.

சென்னை
10-10-'85

அன்பன்
ச. வே. சுப்பிரமணியம்

# முன்னுரை

'தமிழகம்'- இனிக்கும் இளங்குமரன் மணியாம் இன்பத் தமிழெடுத்துக் கோலோச்சும் இனிய உலகம். அந்தக் குமரனின் கொஞ்சுகின்ற சுந்தர வதனம் சொர்க்கத்தைச் சொக்கவைக்கும். முகிழ்ந்த முத்தமிழ் சேர, முக்கனிச் சுவையென வளம்கூட, தமிழ்ச்சோலை செழித்துக் கொழித்துத் திளைக்கிறது. அங்கோ மதி தன் ஒளிக்கிரணங்கள் பொழிய, இருள் நீங்கி, கண்கூசும் பிரகாசம் கண்ணைப்பறிக்கின்றது. பொன்னி ஓடுகின்ற நாடு. பொன்னியைச் சுற்றிப் பூக்களை நாடிவரும் வண்டினம் நாயக மாக அமர்ந்து கல்யாணி முதலாக இன்னிசைப் பண்களை இசைத்து இன்பத்திற்கு மகுடம் சூட்டும் நிலமிது. எனவேதான் வேங்கடம் எல்லையாகக்கொண்ட இந்நாட்டின் எழிலினைத் திருமலையில் தன் குடில் கொண்ட திருவேங்கடசலாபதிக் கண்டு கண்டு மகிழ்ந்து, தம்முன் அந்தத் தமிழக எழிலின்றி வேறு தோன்றவேண்டாமெனத் திரையிடுமுகமாகத் திருநாமத்தினைக் கண்மீது கூடக்கொண்டு நிற்கின்றார்.

தமிழ்மொழியைப்பற்றித் தெய்வத்தமிழென மூர்த்தி நாய னார் பாடி மகிழ்ந்தார்.

> ''மொய்வைத்த வண்டின் செறிசூழன் முரன்ற சந்தின்
> மைவைத்த சோலை மலையந்தர வந்த மந்த
> மெய்வைத்த காலுந் தருஞாலமளந்த மேன்மைத்
> தெய்வத் தமிழுந் தருஞ் செவ்வி மணஞ்செய் ஈரம்''
>
> —மூர்த்தி நாயனார் புராணம்:

மற்றும் நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் சம்பந்தரும் 'அசைவில் செழுந்தமிழ்' என்றே பாடுகின்றார்,

> ''திசையனைத்தின் பெருமையெலாம் தென்றிசையே வென்றேற
> மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனிவெல்ல
> அசைவில்செழுந் தமிழ்வழக்கே அயல் வழக்கின் துறை வெல்ல
> இசைமுழுது மெய்யறிவும் இடங்கொள்ளு நிலைபெருக''
>
> திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் புராணம்: 24

சேக்கிழாரடிகள் ஞாலம் அளந்த மேன்மைத் தமிழ் என்று அருளினார். பிற்காலம் பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்களும் தமது மனோன்மணீயம் தமிழ்க்கடவுள் வாழ்த்தில்,

"சதுர்மறையா ரியம்வருமுன் சகமுழுது நினதாயின்
முதுமொழிநீ அநாதியென மொழிவதும் வியப்பாமே"

என்று பாடுகிறார், அத்தகைய அருந்தமிழின் மக்களாகப் பிறந்திருந்ததால் பெருமை கண்டவர் பலர். பேரானந்தம் கொண்டவர் பலர். தெய்வத் தமிழோடு தம்மை இணைத்து, தேசத் தொண்டினில் தம்மைப் பிணைத்து நாட்டிற்காக வாழ்ந்த நல்லோர்களில் ஒருவர் வ. உ. சி.

"பழமை வாய்ந்த பழந்தமிழர் வாழ்க்கை, குறிக்கோளும் பண்பாடும் அமைந்த வாழ்க்கையாகும். பழந்தமிழர் வாழ்க்கைக் கலையில் வல்லவர்கள். நல்ல வாழ்க்கைக்கு அடிப்படைத் தேவைகள் அன்பும் பண்பும் அறவுணர்வும் பொருள் முயற்சியும் எனக் கண்டனர்," எனப் பேராசிரியர் டாக்டர். சி. பா. 'மலர் காட்டும் வாழ்க்கை'யில் குறிப்பிடுவது போல அந்தப் பழந்தமிழர் வாழ்க்கை நெறியினைத் தமது பாதையாக வகுத்து வாழ்ந்து வந்த பெரியார், செக்கிழுத்த சிதம்பரனார். இறைவனுக்கு ஒரு வண்ணமிட்டு, தமது எண்ணத்திற்கு ஏற்றபடி அவனை ஆடவிட்டு, இறை மொழி படைத்தோரெல்லாம், மக்களுக்குப் புரியும்படியாகத் தெய்வத்தை உணர்த்திடவே அவ்வாறு செய்தனர் என்பது வெளிப்படை. வீரக்கதைகளைத் தன் மகனுக்குப் பாலோடும், நிலாவில் பாற்சோற்றோடும் ஊட்டுகின்ற தாய், ஈன்ற பொழுதின் தான் உவக்க வேண்டி, அந்தக் கதைகளை மழலைக்குக் கூறுகிறாள். அவ்வழியே சான்றோர் சரிதம் தெரிதல் சமுதாயச் சிறார்களுக்குச் சகலமும் தருமே என்ற சிந்தனை வயப்பட்டுச் சிதம்பரனாரின் வாழ்க்கை வரலாற்றை வரைய முற்படுகின்றேன்.

திரு. தி. நெ. வள்ளிநாயகம்,
எம். ஏ., எம். ஏ., பி. எல்., டி. எஸ். எல்

# உள்ளுறை

# செக்கிழுத்த செம்மல்

## நாட்டுச் சிறப்பு

பெற்றதாயினும் பிறந்த பொன்னாட்டைப் போற்றி வளர்த்தல் பெருந்தகையான குணமாகும். நாட்டுப்பற்றுக் கொண்டு நானிலத்தில் வல்லவரான, கதிரவனே மறைதல் இல்லாத நாட்டில்பிறந்தஆங்கிலேயர்களின் அடிப்படையை அசைத்துவிட்ட உள்ளம் அல்லவா! எனவேதான் நாட்டுச் சிறப்பினை ஏட்டின் முதன்மையில் ஏற்றிவைப்பதில் நாட்டம் கண்டார் சிதம்பரனார்.

ஏழ்பெருங்கடல். அந்தக் கடல் அரவணைக்கின்ற ஏழ்பெரும் தீவினைக் கொண்டது இவ்வுலகம், என்றவர் பண்டைத் தமிழர். அந்த ஏழ்பெரும் தீவினிலே வாழ்பெரும் தீவு என வரலாறு உரைத்த தீவு ஆசியாக் கண்டமாகும். செல்வச் செழிப்பு அங்கே சிறந்திருந்தது.எனவே திருமகள் அங்கே உறைந்திருந்தாள்.வகையாக அமைந்த வானம் தழுவிடும் மேகம் முத்தமிடும் நன்மலைகள் துள்ளிவரும் மீனும், தவழ்ந்து வரும் நுரையும், தாவிவரும் புள்ளும் மேவிவர இருகரையும் தழுவிவரும் புனல்கள். மண்ணிலே மலர்கின்ற நகர்கள் பல உண்டு. எண்ணிலே ஏட்டிலே இடம்பெற்று ஏற்றமுற்ற நகரங்கள் சிலவே. அத்தகு ஆன்ற நன்னகர்கள் ஆயிரம் கொண்ட போதும், முல்லையும் மோகன மல்லியும் தொல்லைதரு அழகுடைய ரோஜாவும் இன்னும் எல்லையிலா எழிலூட்டும் இளங்காற்றில் நடனமிடும் வண்ணப் பூக்கள் பலவும் வாழுகின்ற வனங்கள் பல உண்டு. அரும்பொருள்கள் யாவும் தன்னகத்தே கொண்டு நிலைக்கனம் இல்லாது அகழ்வாரைத் தாங்கும் நிலமாக அமைந்த பூமியிலே;

சமரசம் உலாவும் இடமாக—சகலதரும நிலைக்களனாக—சான்றோர் வலம் வரும் நிலமாக—நிலைக்களம் பெற்ற ஆலயங்கள் பல ஆட்சி செய்கின்ற இடம் இது. பொன் விளைகின்ற

பூமியாக, மனத்தில், குணத்தில், கொடையில், ஆன்மீக நடையில் தாழ்விலாது உயர்ந்த செழுங்கிளை தாங்குகின்ற செல்வர் பலர் சிறந்திருக்கும் நாடு. மனிதர் என்ற நாமத்தின் முழுப்பொருளை முற்றும் உணர்ந்து, இறைதொழுது மறைவழுவாது வாழுகின்ற தக்கார் பலரும் திகழ்கிறார்கள் இங்கே.

மழித்தலும் நீட்டலுமின்றி உலகம் பழித்தது ஒழித்துவிட்டுத் தெய்வத் திருவடியைத் தினமும் நாடி வையத்து அறத்தினோங்கு தவம் செய்கின்ற தவத்தினர் பலரும் பார்க்கலாம்.

> ''வருந்தி அழைத்தாலும் வாராது வாரா
> பொருந்து வனபோயென் றால் போகா''

என்ற நற்கருத்தை நாளுமுணர்ந்து இறைவனை என்றும் இதயத்தில் ஏற்றி நிற்கும் குடிகள் கொண்டநாடு. ஆகக்காவலும், கல்வியும் நன்மையும் நிறைந்த நாவலம் தீவெனும் நற்பெரும் கண்டமாம் ஆசியாக் கண்டம். ''இந்தக் கண்டத்தில் எப்பொழுதும் இன்பம் தழைக்க எழுந்து நிற்பது பரத கண்டம்'', எனச் சிதம்பரனார் போற்றி மகிழ்கிறார்.

## நகரச் சிறப்பு

''தட்டுங்கள் திறக்கப்படும், கேளுங்கள் கொடுக்கப்படும்'' என்ற விவிலிய மொழிக்கு ஏற்ப, வேண்டியவெல்லாம் வேண்டியாங்களிக்கும் பாண்டிய நாடு. அந்நாட்டில் பண்டைய நாளில் ஆசைபற்றி அரசாண்டான், குபேரன் என்று சொல்லப்படுகின்ற அளகையம்பதியான். இது முன்னாள் பெயர். இந்நாளில் இது ஒட்டப்பிடாரம் என்று அழைக்கப்பட்டது. அந்தச் சிற்றூர்—வீரம் விளைகின்ற பூமிக்கு அடுத்து அமைந்த ஊர். ''வானம் பொழியுது பூமி விளையுது உனக்கெதற்கு வரிப்பணம்?'' என்ற வினா எழுப்பி அந்த வெள்ளையருக்கு விவேகம் கற்பித்த வீரபாண்டியக் கட்டபொம்மன்—பாஞ்சால தேசத்து அரசன்—வழியில் பிறந்தோன் பண்புடன் அமர்ந்த பாஞ்சால நகர்மதில் பக்கத்தே உள்ளது. அந்த ஊருக்கு வடக்கே உலகநாயகி உவந்து உறைகிறாள். கிழக்கே சில சிறு தேவர்கள் சிறந்து சீர்பெற்று அமைந்துள்ளனர். வினைதீர்க்கும் குணம்புரிந்த கணேசன் தெற்கே; மாலோடு தானாகி நின்ற சிவபிரான் மேற்கே எனத் தெய்வங்கள் நாற்றிசையும் சூழநின்று நலமுறக்காத்து, நுதலிய பொருளெல்லாம் இதமுற அளித்து, பண்பினைப் போற்றி, பகையினை ஒழித்து நட்பினை வளர்த்திடும் நல்லோர் நிறைந்த ஊர். நல்ல திறமெல்லாம் வளருதங்கே. வளர்கின்ற திறத்தாலே செல்வம் வளமாக நிறையுது. நிறைந்திட்ட செல்வத்தால் நிறை

அறம் தினம் செய்து தர்மதேவனைப் பூசை செய்கின்ற அழகிய நகர் அந்த ஒட்டப்பிடாரம்.

## நல்ல குடும்பம் ஒரு பல்கலைக்கழகம்

அன்றிருந்தோர் ஆய்வுலகில் நின்றமைந்த மக்கள் தம்மை, நாம் செய்கின்ற தொழில்வழி நால்வகையாய்ப் பிரித்தனர். வாளெடுத்துப் போர் புரிவது ஓரினம்; வளம் கொழிக்கத் தோளெடுத்து ஏர் ஓட்டுவது ஓரினம்; வணிகம் செய்து வாழ் வினுக்குப் பண்டமாற்றம் தருவது ஓரினம்; நூலெடுத்து நோன் புற்று ஈசனடி காணும் வழி காட்டி நிற்கும் ஓரினம்,......

இவ்வகையில் தாளால் வருவன தக்கார்க்கீந்து வேளாண்மை புரியும் சிறந்த குலம் வேளாண்குலம். "எங்கள் ஏரோட்டம் நின்று போனால் உங்கள் காரோட்டம் என்னவாகும்?" என்று தற்காலக் கவிஞனொருவன் திக்குமுக்காடும் நவநாகரிக மக்களைக் கண்டு இக்காலத்திலும் எழுப்புகின்ற வினா, அக் குலத்தின் பெருமையை எக்காலத்திலும் மறக்க முடியாது என் பதனை எடுத்துக்காட்டுக்கின்றது. அந்தக் குலத்தில் திருமக னாகப் பிறந்தவர் சிதம்பரனார்.

வேளாண் குலத்தில் விளங்கும் சீரோடும் சிறப்போடும் திரு வும் அன்பும் சிறக்கப் பெற்றுத் திகழ்ந்து, கற்பக மரம் பின்னிடும் வகையில் செல்வமும் கல்வியும் திரட்டி அளித்த கல்விச் சிதம்பரக் கவிஞன் (சிதம்பரனாரின் தாத்தா) தோன்றினார். பெற்றெடுத்த பெருஞ்செல்வக் குழந்தைகள் பேர் சொல்லப் பிறந்தவை. அவற்றுள் தக்க திறமையும் தகுதியும் மிகக் கொண்ட மக்களுள் மூத்தோன் வள்ளியப்பன் ஆவார். முதன் மனைவி சின்னாள் வாழ்ந்து சிவனடி சேர, செந்தமிழ் போற்றும் மதுரையம்பதி வாழ் மீனாட்சி என்ற திருநாமம்கொண்ட மெல்லியலாளை இரண்டாம் மணமாக ஏற்று, குலத்தினை வளர்த்திடும் கொழுந்தெனத் திகழ்ந்தார். அந்த இனிய தம்பதிகள் அளித்திட்ட செல்வர்கள் ஐவர். அவற்றுள் மூத்தோன் சிதம்பரம் என்ற தன் தாத்தா பெயரினைத் தகவுடன் ஏந்தி, முன்னோர் பொருள்களைஎல்லாம் முழுதும் கற்றுணர்ந்து, தகுதியும், வாய்மையும் தாங்கி வளர்ந்து வழக்கறிஞராய்ப் பணியேற்று, நீதிதேவனுக்கு நிறைந்த சேவை செய்து நீள் புகழ் பெற்ற தனது 28-ஆவது வயதில் இறைவனடி அழைத்துச் செல்லப்பட்டார். அவர்தான் வ. உ. சி. யின்தாத்தா, இனியவர்களை இளவயதிலேயே ஈர்ப்பது இறைவனின் திரு விளையாடல் அன்றோ? சிதம்பரத்தின் நேர் தம்பி உலகநாதன் தன் அண்ணனின் தொழிலே ஆசைப்பட்டு மேற்கொண்டார்.

நீதி நிலைத்திட நெடும்பயணம் வழக்கறிஞராக வாழ்க்கைப் பாதையிற் சென்று, வென்று சிறந்தார். ஈதல் அவர் உடன் பிறப்பாம். குணம் கொண்ட அவர் நன்னடைக்கு அமைத்திட்ட பாதை காதலுக்கு ஆதரவாய்க் காணும் வழி கணவனுக்கு ஏணி யாய்க் கண்டு நின்ற பிரமாயி அம்மாள் அவர் துணையாயினாள். உலகநாதன் உடன்பிறந்த உத்தமன் குமாரசாமி என்ற பெயரி னைக் கொண்டு குன்றா இளமை குறையு முன்னர் குமரனடி சேர்ந்து கொண்டான். அடுத்தவர் இருவர் அருமந்த பூவிளம் மங்கையர். கண்ணிறைந்த கணவன் கைப்பிடித்து நின்று வாழ்ந்து சிறந்தனர். இளைய நங்கை இட்டமுடன் பெற்றது ஏற்றமுடை இரண்டு ஆண்மக்கள். முன்னவன் நல்ல முத்துசுவாமி பின்னவன் சுப்பிரமணிபிள்ளை. இருவரும் நன்மகவீன்று, முந்திய ஒருவன் சென்றான்; பின்னவன் நன்கு வாழ்ந்திட்டான்.

## குடும்பம்

இன்னிசை சுரங்கள் ஏழு. இறைவன் இருப்பது ஏழுமலை இடையிட்டு ஏழுகடல் நடுவிட்டு. சிதம்பரனார் - நம் கதாநாயகர் உடன் பிறந்தோர் எழுவராவார். வள்ளியம்மை என்ற தமக் கையும், மற்றொரு தங்கையும், இளையவன் ஒருவனும் இளவய திலேயே இறைவனடி எய்தினர். அடுத்த தம்பி மீனாட்சிசுந்தரம் தங்கை மாலையம்மை சோமசுந்தரம் என்பவரைத் துணைவராக வரித்து வாழ்ந்தார். கடைசியிற் பிறந்த கல்யாணசுந்தரம்கல்வி கற்கின்ற காலையிலே தனது நாளை முடித்தவர். எழுவரோடு பிறந்த இனியவரான சிதம்பரனார் குடும்பம் ஒரு பல்கலைக் கழகம் என்று கொள்வதிலே மகிழ்வு கொள்கிறோம்.

## பிறப்பும் கல்வியும்

மாயிரு ஞாலம் வழங்கும் கொல்லம் ஆண்டு 1048. "ஆசைகள் நிறைந்திட ஆவணி பிறந்திட" என இளஞ் சிட்டுக்கள் இன்பச் சோலை நோக்கி ஏங்கிடும் ஏக்கம் தீரப்பிறக்கும் ஆவணித்திங்கள் அள்கையம்பதியில் பிறந்த திருவிழா பேணப்பட்டது. பிறந்த திருமகனார்க்கு குடும்பத்தில் உள்ள முன்னோர் மூத்தோர் திரு நாமம் இடல் என்பது பெயர்பெற்ற மரபு. மகன் இங்கே மண்ணில், 5-9-1872-ஆம் நாளன்று, தவழவர "என் நோற்றான் கொல் எனும் சொல்" பெற்ற தந்தை திருக்குற்றாலத்தில் இருந் திருந்தார். குழவி பிறக்கு முன்னர், மாய்ப் பிறப்பறுக்கும் மன்னனடி சேர்ந்திட்ட தன் அண்ணன் சிதம்பரம் பிரிவால் துய குற்றிருந்த பாட்டனும் பாட்டியும் பட்ட துயரினை ஓட்டிடக் கருதி, அன்னவர் திருநாமம் குழந்தைக்கு இட அவாக் கொண்டு

ஆன்றோர் சொல்லிட, மகன் சிதம்பரம் என்ற சீர் பெயர் ஏற்றான். ''விளையும் பயிர் முளையிலே'' என விளம்பும் அளவுக்கு, வியத்தகு மேன்மையுடன் வளர்த்தனர் வாரிசை. சீராம் கல்வி சிறந்து பெற்றிட ஆறாம் வயதில் ''தலைவாரிப்பூச்சூடி அவரைப் பள்ளிக்குச் சென்றுவா வென்று,' அன்னை அனுப்பிட அத்தன் சேர்த்திட்டான். பிழையின்றி நற்றமிழைப் பழைய நன் முறையில் விளங்கியே வழங்கிட, வித்தென ஊன்றிட, விளம்பினான்—ஆசான் பாண்டியன் எனும் ஒருவன். குறுக்குச்சாலை என்ற ஊருக்கு அருகிலுள்ள பாண்டியபுரம் என்ற கிராமத்தில் வேளாண்குலத்தில் விளங்கி நின்ற தகைசான்ற தமிழ்ப் பெரியோன் அவன்.

வாக்கினில் வாய்மை வயதோடு வளர்ந்தது. சிந்தையில் தூய்மை சிரத்தோடு உயர்ந்தது. விருப்பம்தரு நல் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்பட்டு உளத்தோடு ஒன்றாகியது. பொறுமை அணியாக, தகுதி துணையாக விருந்தோம்பல் உறவாகத் திருந்திய சொல் பேச்சு வழக்காக, செந்தமிழ் நூற்கள் சுவைதரு உணவாகச் சிதம்பரனார் இளமையிலே உருவானார். இறையுணர்வு குருதியுடன் கலந்து இயங்க, இறைதரிசனம் காணாது நீர்கூடப் பருகுதல் இல்லை என உறுதியோடு வளர்ந்தார். அவரது ஆசான் வீரப்பெருமாள் அண்ணாவி ''நீறில்லா நெற்றி பாழ்'' என்ற நேர்மொழி நிறைந்துணர்ந்து சுட்டிக்காட்டும் நெற்றியுடன் சைவத் தலைமுறையின் சந்திதானமென்பதைக் கழுத்தில் உருண்டாடும் உருத்திராட்சமணி உயர்த்திக் காட்டி நின்றவர். வெண்கலக் குரலுடன் வேண்டிய நாற்பதைத் தாண்டிய ஆசான் அடியினைச் சார்ந்து அரிச்சுவடி, ஆத்தி சூடி, எண்சுவடி, உலகநீதி. கொன்றைவேந்தன், கணித நூலாம் குழிப் பெருக்கம், நளவெண்பா, மூதுரை, வெற்றிவேற்கை இன்னோரன்ன நூற்கள் பலவும், எண்ணிய பொருளினை, எடுத்தோது உணர்ந்து, தெரிந்து, தெளிந்து தேர்ச்சியுற்றார். தெய்வத் திருமொழி தமிழ் தெளிந்த பின்னர் திகட்டா வணிகமொழி ஆங்கிலம்—அவனியிலே அன்றும் இன்றும் பவனி வருகின்ற—மொழியினையும் கற்றுத் தெரிய எண்ணி, பொன்னகரிலே வாழுகின்ற தாலுகா ஆபீசு கிருட்டிணனய்யர் என்பவரிடம் அப்பணியைத் தந்தனர், தந்தையார். அந்தணராம் அவரும் ஆங்கிலம் அவருக்கு அழகுறச் சொல்லி ஆரம்பம் செய்தனர். அக்காலையில் ஒட்டப்பிடாரத்தில் ஆங்கிலம் கற்பிப்பதற்கான பள்ளி இல்லை. அவருக்கு ஏற்கனவே ஆங்கிலமொழி கற்றுத் தந்த கிருட்டிணனய்யர் வேலை முறைமையில் வேற்றூர் சென்றார். மக்கள் யாவரும் மகிழ்ச்சியுடன், ஆங்கிலம், தக்க

இயலோடு சார்ந்து கற்க வேண்டும் என்ற தகைவான எண்ணங் கொண்ட தந்தையார் கலாசாலை ஒன்று ஒட்டப்பிடாரத்திலேயே அமைத்திட எண்ணம் கொண்டார். அதற்குத் தகுந்த ஆசிரியன் ஆக எட்டையபுரத்தில் இருந்த அறம் வளர்ந்த நாதன் என்பவரை அவ்வூருக்குக் கொணர்ந்தார். சிவபிரான் சன்னதித் தெருவில் இருந்த ஓர் நிலத்தில் கட்டிடம் ஒன்று கட்டிச் சிறுவர் யாவரும் சென்று அதில் சேர்ந்து ஆங்கில மொழியினை அழகுறக் கற்றிட ஆவன செய்து நின்றார். ஆங்கிலக் கல்வி பெருகிட மட்டுமே அதுவும் குறிப்பாகத் தன் அருமை மகனுக்காக அமைக்கப்பட்ட அந்தக் கல்விச்சாலை ஆலமரமெனத் தழைத்து நிற்க ஆசைகொண்ட தந்தையார் அதனை மேலும் வளர்த்திட, அடுத்து ஆகும் காரியங்கள் எடுத்து முடித்திடத் துணிவு கொண்டார். தட்டப்பாறை ஊருக்கு அருகில் உள்ள சிற்றூரினை அடுத்த புளியம்புத்தூர் என்ற ஊரில் இருந்து வந்தார்-ஆடம்சன் என்னும் ஆங்கிலப் பாதிரியார். அவர் விவிலியம் நாடும் நல்ல கிறித்தவர்; கிறித்தவருக்கே உண்டான தனி இயல்போடு மதத்தினை மக்களிடை பதத்தோடு விதைத்திடும் பண்புடையாளர்; இந்து அறநெறியில் ஈடுபாடுற்று இசைபட வாழ்ந்த இந்துக் குடும்பத்தின் இயல்புடையாராம் தந்தையார், திறமை இருக்குமிடம் தேடிச் சென்று, அதே சமயத்தில் அந்தத் திறமை மதத்தின் சார்பு அற்றதாக மலர வேண்டும் என்பதனைக் கருத்தில் கொண்டு, பாதிரியாரை அணுகினார். மதநூல் தவிர மற்றவை பயிற்றும்விதமாகப் பேசி வேலையை முடித்துப் பள்ளி மேற்பார்வையாளராகப் பாதிரியாரை அமர்த்தினார். கல்வியின் அடிப்படை ஒழுக்கம், அந்த ஒழுக்கம் இளம்பிஞ்சுகளின் பஞ்சு இதயத்தில் பசுமரத்தாணிபோலப் பதிதலே பயன்தரும் வழியாகும்.

கிறித்தவக் கல்வி நிலையங்கள் அன்றுதொட்டு இன்றுவரை இந்நாட்டிலே திண்ணைப் பள்ளி முதல் மேல்நிலைக் கல்வி வரை ஒழுக்கத்தினை ஊட்டி வளர்த்து இயங்குகின்றன என்பது காலம் அறிந்த உண்மை. பள்ளிக்குச் செல்கின்ற பாலர்களிடையே பாரம்பரியத்தின் பெருமையோ, செல்வத்தின் சிறப்போ, தலை தூக்கக் கூடாது என்ற எண்ணத்தின் அடிப்படையில் ஒரே சீருடைஅமைத்தது அந்தப்பள்ளியின் அடிப்படை ஒழுக்கத்திற்குக் கொடிகட்டும் எடுத்துக்காட்டு; ஏழையாயினும் செல்வப் பேழையின் பெருமகன் ஆயினும் எல்லோரும் ஒரே வகை ஆடையை அணிந்து நின்றால் அங்கு ஒருவருக்கொருவர் உள்ளப் பாகுபாடோ, மனவேறுபாடோ ஏற்பட வழி ஏதுமில்லை; எனவேதான் இந்நாட்டிலே கிறித்தவக் கல்விக்கூடங்கள் தலைமை

இடம் பெற்றுக் கோலோச்சி நிற்கின்றன. இதன் முன்னோடி தான் நம்நாட்டின் வடக்கேயிருந்த பண்டைய குருகுலவாசம். அந்தக் குருகுலத்திலே மன்னவனானாலும் அன்றி மாடோட்டும் சின்னவனானாலும் எல்லோரும் ஒரே முறையில் பஞ்சகச்சம் கட்டித் துண்டை இடுப்பில் அணிந்து வேதம், வில் வித்தை, வியாகரணம், விவேகக் கல்வி வேறுபல கற்றுத் தெளிந்தார்கள். இன்றைக்கு அதன் அருமை பெருமை உணராது அதனை ஏற்று நடத்துபவர்களின் மீது நம்மை அறியாதுகொண்ட காழ்ப்புணர்ச்சியால் அதனை வெறுத்து ஒதுக்குகின்றோம்.

> ''எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்ப தறிவு''

என்ற வள்ளுவரின் வாய்மொழியை மறந்து இன்றைக்குக் கல்விச் சீர்திருத்தம் பற்றிக் கூட்டங்கள் பல அமைத்துக் கரைகாண முடியாமல் கலங்கி நிற்கின்றோம். எனவேதான் அன்றைக்கு உலகநாதபிள்ளை அந்தக் கல்விச் சாலையைக் கடிதுநடத்த ஒரு கிறித்தவப் பாதிரியாரைத் தேர்ந்து நாடினார்.

பிள்ளை அவர்கள் சொன்ன வேலையைச் சிரமேற்கொண்டு தனக்குத் துணையாகச் சுவாமிநாதன் என்னும் நல்லவரை மேல் உபாத்தியாயராக அமர்த்தினார். தவிரச் சாலப்படித்த சண்முகம் பிள்ளை என்பவரையும் இந்துப் பள்ளிக்கு அழைத்து எழுத்து அறிவிக்கின்ற இறைவனாக்கினார்.

## கல்லூரிக் கல்வி

ஒட்டப்பிடாரத்தில் அடிப்படைக் கல்வியைக் கற்று முடித்த சிதம்பரனார், பதினான்கு வயதினைத் தாண்டினார். அதன் பின்பு மேலே கல்வி கற்கத் ''திருமந்திர நகர்'' என்று அவரால் அழைக்கப்பட்ட தூத்துக்குடி சென்றார். உரோமன் கத்தோலிக்கப் பள்ளியான சேவியர் உயர்நிலைப் பள்ளியில் மத்தியப் பள்ளி வகுப்புகள் (மிடில் ஸ்கூல் கிளாஸ்) படிப்பதற்காகச் சேர்ந்து பயின்றார். அங்கு மதுரநாயகம் என்ற ஆசிரியர் தன் பெயருக்கு ஒப்ப இனியமொழியில் கல்வி கற்றுத்தந்தபோதிலும் தமது கவனக்குறைவால் தேர்வில் வெற்றி பெறும் வாய்ப்பினை இழந்தார் சிதம்பரனார்.

## பள்ளி மாற்றம்

பின்னர் அந்நகரிலுள்ள கால்டுவெல் ஹைஸ்கூல் என்ற பிராட்டஸ்டண்டு பள்ளியில் படித்து, பரீட்சையில் தேறினார். எனினும் மெட்ரிகுலேஷன் மேலாம் வகுப்பினில் கற்றுத் தேர்ந்

இடத் திரும்பவும் கேத்தலிக் பள்ளியில் சேர்ந்து அங்கிருந்த ரெவெரண்ட் ஃபாதர் ஹௌசானல் என்பவரிடம் கற்றுத் தேர்ந்தார். அந்த ஹௌசானல் என்பவர் கற்கத் தகுதி இலாதவர்களைக்கூட விற்பன்னராகச் செய்யும் வித்தகம் தெரிந்தவர். அவர் தவிர அண்ணாதுரை என்ற பெயர் படைத்த ஆசிரியப் பெருமகனார் அருளும் திறனும் அமைந்திடப் பெற்றவர்; அவரைநாடி, சிதம்பரனாரை அவரது தந்தை, படித்திடச் சேர்த்தனர்; அன்னவர் சிதம்பரத்தைத்தான் பெற்ற மகனெனக் கருதி அவர் மனைமுன் நிறுத்தி தகவோடு கல் எனச்சொல்லி, கல்வி தந்தனன்.

சிதம்பரனாரும் தந்தை அவரெனத் தாய் அவர் மனையெனச் சிந்தையிற் கொண்டு சிரத்தையுடன் நின்று பகலிலும் இரவிலும் பள்ளியிலும் வீட்டிலும் கல்வியினைக் கற்றுக் களித்து நின்றிட்டார்.

## இந்துக் கல்லூரி

திக்கெலாம் புகழும் செல்வர் உறைகின்ற திருநெல்வேலிச் சீமையிலே தேன்நின்ற பூச்சிந்தும் தோட்டம் கரையகத்தே கொண்ட தாமிரபரணி ஆறு தழுவிச் செல்லும் சாலையிலே அகம் கண்டது இந்துக் கலாசாலை.

மதுரைத் திரவியம் தாயுமானவர் இந்துக் கல்லூரி என்ற முழுப்பெயர் பெற்ற அந்த மாபெரும் கல்லூரி, ஞானத்தின் தலைவனாம் சாலைக்குமரனின் கால் அடியிலே அமையப் பெற்றுள்ளது. நெல்லுக்கு வேலியிட்டு, நீரினின்றும் நெல் நனையாது காத்துநின்று, தன்னை நினைந்து வழிபட்ட தூய அந்தணர்க்கு நினைந்த அருள் நல்கிய நெல்லையப்பர் திருக்கோயில் அமைந்த சாலையிலே செழுங் கல்வியின் சிற்பக் கூடமாகச் சீராம் கலைவாணியின் உருவின் திருவாக எழுந்து நிற்பது இந்த இந்துக் கல்லூரி. பெயரின் முதல் எழுத்துக்களைச் சுருக்கி "ம. தி. தா" இந்துக் கல்லூரி என்று மக்கள் நாடி நிற்கின்ற கல்விக்கூடம். இந்தக் கல்விக் கூடத்திலே சிதம்பரனார் சென்றடைந்து சிலநாள் கல்வி கற்றுச் சிறப்படைந்தார்.

பின்னர் திருமந்திர நகர் திரும்ப அடைந்து அண்ணாதுரை ஐயர் சொல்லிதரக் கல்விப்பயணம் தொடர்ந்தது. அவருக்கு வாய்த்த மற்றோர் ஆசிரியர் திருமாலைத் தினம் வணங்கும் தூயவர் எனவும், மதி உயர்கல்வியை மாசறக்கற்றோர் எனவும், வல்லவை தன்னுள் வல்லவை சேரா நல்லவை தன்னுள் நல்லவை சொல்வார் எனவும் சிதம்பரனாரால் போற்றப்பட்ட கஸ்தூரி

ஐயங்கார் எனப்படுபவர். அண்ணாதுரையின் அருமந்த முசிறிய யால் சிதம்பரனார் ஆங்கிலத்தில் செறிவுற்றார். திருச்சி செயிண்ட் ஜோசப் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பண்டிதர் சவுரிராய பிள்ளை செந்தமிழ்ச் சிந்தனைக்கு இனித்தவண்ணம் தவறிலாது சிதம்பரனார் உரைதந்தார். இன்னவர்கள் பயிற்சி யால் தேர்வில் திறம்பெற்று வெற்றி பெற்றார் சிதம்பரனார். ஊக்கம்விடாது மறு ஆண்டும் மற்றவர்களிடத்திலும் கற்று, குறிப்பாகப் பெங்குசாமி என்ற மறையரிடம் நிறையக் கேட்டுத் தெரிந்து தன்னிடம் உள்ள குறையையெல்லாம் நிரப்பி முழு மனிதனாக மாறினார் மருவும் சிதம்பரனார்.

## படிப்புக்கு முற்றுப்புள்ளி

மேல்படிப்பினை விரும்பி திருமந்திர நகரிலுள்ள ''கால்டு வெல்'' கல்லூரியில் சிதம்பரத்தைச் சேர்த்தனர். கல்லூரிப் படிப்பிலே நாள் சென்றபோது, கண்போன போக்கிலே மனம் சென்று மனம் போன போக்கிலே (தன்) கால் சென்று - கடை வழி சென்று - காலம் கழித்த - சிதம்பரத்தின் போக்கினைச் செவ்வனே உணர்ந்த உலகநாதபிள்ளை அவரை ஒட்டப்பிடாரத் திற்கு அழைத்துச் சென்று நல்லுரை பல நல்கித் திரும்பவும் நல்ல வனாக நிலைநாட்டினார்.

அந்த இடைவேளையிலே, பணி ஒன்றில் பையனை இட்டு விடலாம் என்று திட்டமிட்டார் தந்தை. ''கல்வி கரையில கற் பவர் நாள்சில மெல்ல நினைக்கின் பிணிபல'' என்ற நல்லோர் உரையை உணர்ந்து பற்பல கற்றுயர்ந்து தாசில்தாராகப் பணி யாற்றி வந்த தாசில் நெல்லையப்பபிள்ளை என்பவர்' தன் அலுவலகத்தில் சிதம்பரனாரை எழுத்தராகப் பணியேற்கச் செய் தார். சில நாள் சிதம்பரத்தின் சிந்தை அரசியல் பணியில் சிக்கி யிருந்தது. எனினும் மனம் அதில் ஈடுபடவில்லை. அதனை நன்கு அறிந்திருந்த தந்தை, சட்டக்கல்வி பயில சிந்தனை கொள் ளெனக் கட்டளையிட்டுத் திருச்சிக்குச் சென்று தெளிவுபெறு என அனுப்பி வைத்தார். எனவே தாலுகா ஆபீஸ் குமாஸ்தா வேலை ஓரிரு திங்களில் முற்றுப்பெற்றது.

## சட்டப் படிப்பு

வேண்டிய மாம்பழத்தை அந்த வெள்ளிப் பணித் தலையூர் விரும்பிக் கொடுத்திடப் பெற்று வெற்றி உவகையுற்ற விநாயகர் மலை உச்சியில் மகிழ்ந்த திருக்கோலம் கொண்ட ஊர் திருச்சி. காவேரியும் கொள்ளிடமும் சேர்ந்திணைந்து பின்பு ஊடல் கொண்டு பிரிந்து கடல்கண்ட இடம் திருவரங்கம். கடல் காட்சியே

கண்டு மகிழ்ந்ததால் அகம் குளிர்ந்து அரங்கநாதனே பள்ளி கொண்ட திருவரங்கம் துணையாகக் கொண்ட நகரம் திருச்சி. அந்நகர் தன்னில் அமைந்துள்ள ஆண்டார் வீதியில் முதலில் இருந்து, பின்பு வசந்தம் தெருவில் சிலநாள் தங்கி அங்கிருந்த சட்ட வகுப்பில் சென்று சேர்ந்தார். தேர்ந்து தெளிவுறல் தெளிவுற்று ஆராய்தல், ஆராய்ந்து அறிவு பெறல், பெற்ற அறி வினைச் செயலாக்கல், செயலாக்கி நிலை நிறுத்தல் என்ற வழி முறைகளின் அடிப்படைதான் சட்டப்படிப்பு. அந்தமனப்பக்குவம் முளையிலேயே முகிழ்த்துவிட்ட சிதம்பரனார் சட்டக்கல்வி கற்கையிலே பொங்கிய உவகையில் பூரிப்புப் பெற்றார் என்பது வியத்தகு செய்தி அல்லவே! சட்ட நுட்பங்களில் சித்தி பெற்றவ ராகத் திகழ்ந்த கருணை நிறைந்த கணபதி ஐயர், ஹரிகர ஐயர் என்ற இரு சட்ட நிபுணர்களிடம், ஏகலைவன் கற்ற வில்வித்தை யெனச் சட்டக்கலையினைப் பயின்று தெளிந்தார். 1895-ஆம் ஆண்டில் சட்டத் தேர்வினில் வெற்றிபெற்று மன்றாடியான சிவ பெருமான் போலவே ஒரு சிறந்த வழக்கறிஞராகத் தனது வாழ்க்கைப் பயணத்தைத் துவங்கினார்- பிறந்த பொன்னகர மாம் ஒட்டப்பிடாரத்திலே தனது தொழிலினைத் தொடங் கினார்.

அந்த ஊரிலே குற்றயியல் நீதிமன்றம் ஒன்று இயங்கி வந்தது. சிதம்பரனாரின் பாட்டனார், பெரிய தந்தையார், தந்தையார் எல்லோருமே வழிவழியாக வாழையடி வாழையாக வழக்குரைஞ ராக வாழ்ந்து வந்ததால், சிதம்பனாரின் இல்லம் ''வக்கீல் ஐயா வீடு'' என்றும் சிறப்புத் திருநாமம் சேரப் பெற்றது.

### தொழில் முயற்சி

சட்டம் பொதுவாக உரிமையியல் (Civil), குற்றயியல் (Criminal)என்ற இருபெரும் பகுதியின் பாற்பட்டது. உரிமையியல் வழக்குகளில் உயர்வு பெறக் கடின உழைப்பும் கண்துஞ்சாக் கவனமும் தேவை. குற்றயியல் வழக்குகள் அறிவுக் கூர்மையின் ஆளுகைக்கு உட்பட்டவை. குறிப்பாகக் குற்றயியல் வழக்கிலே சாட்டப்படுகின்ற குற்றத்திலுள்ள ஓட்டைகளைச் சுட்டிக்காட்டி நேர்ந்த அறிவின் திறத்தால் சாட்சியைத் திக்குமுக்காடச் செய்து விட்டால் வெற்றிக்கனி தானே மடி மீது வந்துவிடும். அதற்குச் சட்டத்தின் சாரம் முழுதும் தெரிந்திட வேண்டும் என்கிற முனைப்பு இல்லை. சட்டத்தின் ஓரம் தெரிந்திருந்தால் வாதம் சிறந்து நின்று வெற்றி வாகைசூடி வர நாளும் வழியுண்டு. எனவே தான் குற்றயியல் வழக்கிலே விரைவில் கொட்டுகின்ற பணம் கிட்ட வழி உண்டு என்று சட்டம் கற்று முடித்த பின்பு வழக் குரைஞர் அனைவரும் அதனை நாடிச் செல்கிறார்கள்.

உரிமையியல் வழக்கு என்பது ஓராயிரம் சட்டத் தீர்வுகளால், ஏராளமான சட்டக் கோர்வுகளால் தொடுக்கப்பட்ட பெரிய வலை; சிக்கல்கள் பல நிறைந்தது;ஆமையின் வேகத்திலே மெல்ல மெல்ல நகர்வது. பள்ளி செல்லும் மாணவருக்கு ஆண்டிலே ஒரு முறை தான் தேர்வு வரும். அந்தத் தேர்விற்குக் கண்விழித்து அன்றைய நாளில் படித்தாலே போதுமானது. ஆனால் உள்ளத்தில் உரிமையியல் வழக்கினை நடத்த உறுதி கொண்ட வழக்கறிஞர் வாழ்விலே, தினம் ஒரு தேர்வுதான். இரவிலே பல மெழுகுவர்த்திகள் கரைய ''நடு இரவு எண்ணெய்'' எரியக் கண்ணுறக்கம் கொள்ளாது வழக்கினைப் படித்தால்தான் மறுநாள் நீதி மன்றத்திலே திருதிருவென விழிக்காது வழக்கினை நடத்திட முடியும்.

சிந்தனையில் சிறந்திருந்த சிதம்பரனார் சிவில், கிரிமினல் என்ற மேற்கூறிய இரு துறைகளிலும் ஈடுபட்டு இருந்தபோதும் குற்றயியல் துறையிலே பற்று அதிகம் கொண்டார். 1900 -ஆம் ஆண்டில் தூத்துக்குடிக்குச் சென்று தொழிலினைத் தொடர்ந்தார். மற்றோர் மயங்கும் வண்ணம், உடன் தொழில் கற்றோர் அழுக்காறு கொள்ளும் விதத்தில் செய்யும் தொழிலே தெய்வமெனச்சிறப்பாகத்தொழிலாற்றிச் செல்வமும் அதிகம் பெற்றார். யான்;எனது என்ற போலிச்சொற்களின் பொல்லாத பொருளைப் புரிந்தவர் சிதம்பரனார். எனவேதான் தனது தொழில் வெற்றிக்குக் காரணம் முதலில் தந்தை,அடுத்துப் பெரிய தந்தை, மூன்றாவது ஓங்கி நின்ற அன்னவர் புகழ், இறுதியாக, எனினும் உறுதியாகச் சேர்ந்துநின்ற தெய்வ நற்கிருபை என்று தன் தொழில் வெற்றியை எடுத்துக் கூறுகின்றார். ஏழை பணக்காரன் என்ற வேறுபாடின்றி எல்லோரையும் ஒரேவிதமாக மதிக்கும் இயல்பு உடையவர். இவரது நேர்மையும் கடமை உணர்வும், நிறைந்த தொழிலில் வாகைசூடிட உரமான தூண்களாக அமைந்தன.

## தமிழ்நாட்டு விளையாட்டுகள்

அங்கு இங்கு எனாதபடி எங்கும் நிறைந்திருக்கும், கங்கை முடிமேல் அணிந்த மங்கை பாதி உடலெனக் கொண்ட மகேசன் திருவிளையாடல்களில் திளைத்து நிற்பவன். அதனை உணர்ந்த பாரதியார்கூட, ''ஓடி விளையாடு பாப்பா'' - என்று ஒய்யாரத் தமிழில் பாடி மகிழ்ந்தார். விளையாட்டின் அடிப்படையே வாழ்வின் எந்த சூழ்நிலையையும் எதிர்நோக்கும் மனத்துணிவின் விளைவிடமாம். எனவேதான் விளையாட்டம் கண்டபோதுகூட விளையாட்டாய் எடுத்துக்கொள் (sportingly) எனக் கூறுவது

வாடிக்கை. அந்த மனப்பான்மை சிதம்பரனாருக்குச் சிறு வயதி லேயே ஏற்பட்டதற்குக் காரணம் அவர் தெரிந்திருந்த ஆயிரம் விளையாட்டுக்கள். தமிழருக்கே உரிய பல வீரவிளையாட்டுக் களைச் சிதம்பரனார் விரும்பிக் கற்றார். தமிழறிஞர் திரு.வி.க. கூறுவதுபோல் பீடுநடை நடந்து பள்ளியில் படிக்கும்போது கட்டுக் கடங்காத காளையாய்த் திரிந்து வந்திருந்தார்.

உடன்படிக்கின்ற சிறுவர்களோடு சுவர்மேல் நடத்தல், மரம் ஏறுதல், கவண் வைத்துக் கல்லெறி பழகுதல், கண்ணா மூச்சி விளையாடுதல், மூச்சுவிடாது ஒன்று இரண்டு என்று முடியும் வரை எண்ணுதல், குதிவிட்டு ஆடுதல், கோலி விளையா டுதல், குதிரை தாவுதல், கோல் மீது ஏறு நடத்தல், காற்றிரி ஏறி தல், கான்மாரி ஓடுதல், மற்றும் பந்து பற்றிய விளையாட்டுகள் பலப்பல அவருக்குக் கைவந்த விளையாட்டுகள். இவை தவிர சடுகுடு, கிளியந்தட்டு, பல்லி, நெடுகெடும் ஓட்டம், நீர் விளை யாடல், கம்பு சுற்றுதல், கத்தி வீசுதல், மூச்சினை அடக்கித் தலை கீழ் நடத்தல், கசரத்து, பல்லி, குஸ்தி, சண்டையில் நிற்கும் முறைகள் - இவை யாவும் கற்றுத் தேர்ந்தார். வெடி எடுத்துச் சுடுதல், வில் விளைத்து எறிதல் என்ற விளையாட்டுகளும் விளை யாடி நின்றார். வீட்டிற்குள்ளேயே விளையாடுகின்ற தாயம், சோவி, சதுரங்கம், சொக்காட்டன், காகிதச்சீட்டு அனைத்தும் அவருக்கு அத்துப்படி. இத்தனை விளையாட்டுகளும் அவருக்கு அத்துப்படியாய் இருந்தன. சித்தப்படி உடலை வளைத்துச் செயலாற்ற இவை மிகவும் துணையாய் இருந்தன.

விளையாட்டுகள் நிறையத் தெரிந்த காரணத்தால் நிறைய குறும்புகளுக்குப் பிறப்பிடமாய் அவர் இருந்தார். எனினும் பிள்ளை மீது கொண்ட பாசம் பற்றி அவர் செயல்களைப் பொறுத்திருந்தாலும், அளவுக்கு மீறினால் பொறுமையிழந்து அவர் தந்தை நன்றாக அடித்துவிடுவார். அச் சமயங்களில் தம்பரம் சொல்லாமல் கொள்ளாமல் வீட்டைவிட்டே ஓடி விடுவர்.

அந்த நாளையில் சிதம்பரனாரின் சிறிய அத்தை தன் மகன் நல்லமுத்துச்சாமிப் பிள்ளையுடன் சிதம்பரனாரின் இல்லம் வந்தி ருந்தார். அங்கிருந்த சுப்பிரமணிய பிள்ளை இளமையிலே சுப்பையன் என்று அழைக்கப்பட்டார். அவருடன் இருந்த அந்தச் சின்னச் சுப்பையனைத் தினமும் ஊட்டித் தன்னைவிடப் பாது காத்து அழகுற வளர்த்து வந்தார். சிதம்பரனாரின் தந்தையின் தமக்கை மனவேறுபாடு காரணமாகத் தன் கணவனாகிய முத்துக்

குமாரசாமிபிள்ளையைப்பிரிந்து சிதம்பரனார் வீட்டில் இருந்தார் பொறாமை மேற்கொண்டு சிதம்பரனாரின் மேல் புறங்கூறப் பட்டதால் அவர் தந்தை அவரைத் தாறுமாறாக அடித்து மிதித்து விட்டார். எத்தனையோ முறை தந்தையினிடம் அடிபெற்றவர் வீட்டைவிட்டு ஓடிவிடுவார். ஓடியவரைத் திரும்பக் கொணர்ந்து வீட்டிலே இருத்தி வைப்பர். கணநேர வெறுப்பினை மறந்து விருப்பினைக் கொண்ட தந்தை ஒருமுறை சினம் பொங்கி எழ, சிதம்பரனார் செய்த தவற்றிற்காகக் கண்ணிலாது, கணக்கிலாது தந்தை அடித்துவிட, அதனைப் பொறுக்க முடியாமல் மனம் துன்புற்றுத் துறவுகொள்ள முடிவு செய்தார். "சட்டி சுட்டதடா, கை விட்டதடா" எனப்பட்டினத்தார் போல மொட்டையடித்துக் கொண்டு பருத்தி ஆடைக் கோவணத்துடன் கிளம்பி விட்டார். அவ்வாறே பல நாட்கள் உணவின்றி, உறக்கமின்றி ஊர் ஊராகச் சுற்றினார். கடைசியில் மதுரை வந்து சேர்ந்தார். பட்ட துன்பங்கள் எண்ணி வீடு திரும்ப நினைத்தார். ஒட்டப்பிடாரத்திலுள்ள ஒரு நண்பருக்குக் கடிதம் எழுதினார். அது பற்றி அறிந்த அவர் தந்தையார் மதுரைக்கு ஓடோடியும்வந்தார். அவரை மார்புறத் தழுவிக் கொண்டு அழுதார். பிறகு சிதம்பரத்திற்குப் பல புத்திமதிகள் கூறி அழைத்துச் சென்றார். சொக்கநாதரின் ஈடில்லா இணையடி நிழலினைத் தொழுது பின் சிறப்பெல்லாம் நோக்கி அழகியம்பதியினை அடைந்தார்.

சிலநாள் சென்றன. சித்திரம்போலச் சிலம்பினைக் கைப் பழக்கமாகப் பயிற்றுவித்தவரான ஜலால்கான் என்பவருடன் சேர்ந்து தருமமிகு சென்னையினைத் தழுவிடப் புறப்பட்டுச் சென்றார். அங்கும் தந்தையின் ஆதிக்கம் அவரைத் தூத்துக்குடிக்குத் திரும்ப அனுப்பியது. இவ்வாறு மறுபடியும் சென்னை, அதன்பின் அழகியம்பதி, திரும்ப வேறு நகரமாம் திருவனந்தபுரம் என்று சென்றார். தவம் பல தழுவி நின்றபின் தந்தையின் விழைவால் தக்க நல் முயற்சியால், சிந்தை திரும்ப, திரும்பி வந்தார்.

வாழ்வு ஒரு சக்கரம். அது என்றும் ஓர் நிலையில் நில்லாது. உறவினை விட்டு ஓடுதலும் கரவினை ஒழிக்க, பிறவினை பெயர்த்தபின்பு மறுபடி உறவினை நாடுதலும் உலகத்து நியதி என்பதனை உணராதவரும் உணரும் வண்ணம் உதாரணப் படுகிறது இந்தச் சிறு நிகழ்ச்சி.

## இறைவன் கொடுத்தவரம்

"மனைவி அமைவதெல்லாம் இறைவன் கொடுத்தவரம்" என்ற கவிஞரின் கூற்றுக்கு ஏற்ப நல்லதொரு இல்லாளை நயந்து

மணந்தார் சிதம்பரனார். கத்துத்தரங்கம் விளையாடும் கலைகள் பலவும் உருவாகும் அலைகள் அருகில் எழுந்தருளிய இறைவன் முருகன் உறையும் திருவூர் செந்தூரில், சிறந்து நின்ற சுப்பிரமணிய பிள்ளைக்கு மகளாய்ப் பிறந்து மாண்பெலாம் தோன்ற நின்ற மகராசி என்னும் வள்ளியம்மையைத் தனது இருபத்து மூன்றாவது வயதில் வாழ்க்கைத் துணைவியாக வரித்துக்கொண்டார். அன்னம் ஊட்டுகையிலே அன்னையாக, அறிவுரை சொல்வதில் அமைச்சராக, உருவத்தில் இலக்குமியாக அந்த அம்மையார் வாழ்ந்து வந்தார். நல்லவர் செயல்கள் நானிலமெங்கும் நிற்கும்; நல்லவர் சரிதங்கள் பொன்னேடுகளில் பொறிக்கப் படும்; என்பதற்கொப்ப அந்த அம்மையாரின் வரலாற்றைச் சிதம்பரனார்—''வள்ளியம்மை சரித்திரம்'' என்ற நூலில் படைத்து மகிழ்ந்தார்.

தென்னம்பிள்ளை போல நன்றியினை மறவாத இதய முடையவர். அன்னார் குணம் இயம்புதல் நன்று என்று முன்னோர் மொழிந்ததை முறையாக உணர்ந்து சிதம்பரனார் தன் முதல் மனைவியின் குணங்களை வரிசைப்படுத்துகிறார். என்றும் நெஞ்சகலா முகமும், துஞ்சுகையிலும் தொல்லை சொலா அகமும் கொண்டு மலர்ந்தவள். கணவனை அவனது தேசத் தொண்டினைக் கனவிலும் நினைவிலும் கண்டுகொண்டு நின்றவள். கணவர் என்பவர் தனி ஒரு மலரல்ல. ஒரு கொடியில் மலர்ந்த மலர். அந்த மலரினை இதுவரைத் தாங்கி நின்ற கொடி செடி, இலை, தளிர் போன்ற அவரது உடன்பிறந்தோர், உற்றார் உறவினர்களையும் தன்னுடைய உயிரெனக் கருதிச் செய்கின்ற பணியிலே செம்மை கண்டாள். இறையருளோ இவளோ, மறைபொருளோ மலரோ, நிறைமகளோ நிலமோ, கரை விளக்கமோ இலக்கமோ என உறவினர் பலரும் உணர்ந்து மகிழும் வண்ணம் உலவிநின்ற உத்தமி அவள். வள்ளுவர் குறளை வளமுறப் படித்து வாழ்வினில் வளர்ந்த வள்ளியாய் நின்றனள்.

''சாதிகள் இல்லையடி பாப்பா'' என்று சாற்றிய சரித்திரக் கவிஞனின் சிந்தையைப் பெற்றவரன்றோ சிதம்பரனார். எனவே தான் குலத்தில் குறைந்தவன் என்று தரத்தினில் உள்ளோர் குற்றம் சாட்டிய விருதுநகர் ஸ்ரீராமிய தேசிகர் என்பவரைத் தம் இல்லத்தில் வைத்துக் காப்பாற்றியது தனது தவப்பயனே என்று துணிந்து கூறி மகிழ்கிறார். அந்தத் தேசிகர் ஊனக் கண்ணிரண்டும் ஒழிந்து நின்றவர். ஆனால் ஞானக் கண்ணினை நலமாய்ப் பெற்றவர். அவர் ஓர் ஆத்மஞானி. வள்ளியம்மையார் வானத்தவருக்கு நல்விருந்து ஆனவர். எனவேதான் அந்தத்

தேசிகருக்கு அமுதூட்டி உபசரித்து வந்தார். ''இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர் பட்டாங்கில் உள்ளபடி'' என்பதனை ஏட்டளவில் மட்டுமே ஏற்றிவைத்த இவ்வுலகம், இழிகுலத்தோனை வீட்டில் வைத்து உணவளித்து வருகிறார் எனப் பழி சுமத்தியது. இதுபற்றிச் சொல்லிச் சென்றார் மனைவியிடம். கணவன் கூறும்முன்பு அவர் கருத்தினை உணர்வால் தெரிகின்ற உத்தமியல்லவா அவள். எனவே, ''உயிர் தோறும் இறைவன் வீற்றிருக்கிறான். உருவம் பற்றி ஒன்றிலும் பேதத்தால் மனம் மருவுதல் இலாமை வேண்டும் என்று சொன்னவர் நீரன்றோ! முற்றும் துறந்தவருக்குக் குலம் ஏது. போற்றுவோர்போற்றட்டும்;புறம் கூறுபவர்கூற்றினைப் பேதைமை என ஏற்று நாம் நம் மனவழி நடப்போம்'' என்று இனிது மறுமொழி மொழிந்தனள்.

## இல்லாளோ இனியவளோ

திருமந்திர நகர் சேர்ந்தபின்பு தொழில் முறையில் தனக்கு இலாபம் சேர வேண்டும் என்ற எண்ணமுடன் வழக்குகளைக் கொண்டு வந்தால் வாடிக்கையாக வழங்க வேண்டும் கமிஷன் என்று விவகாரம் பேசி வந்தனன் ஒருவன். அருமை மனைவி ''ஆலோசனைக்கு நல்லமைச்சு'' என்ற வேதமொழி விளக்கமுடன் தேர்ந்திருந்த சிதம்பரனார் தனது மனைவியிடம் இது பற்றிக் கேட்டார். ''வாழ்ந்தால் உன்னோடு வாழ்வேன்'' என்று வனம்புகுந்த சீதைக்கு வழிகாட்டிய வாழ்வரசி ''வளைந்திட வேண்டாம்; வரும்பொருள் தானே வரும். வடுகொண்டு வரும் செல்வம் வாழ்விற்கு ஒவ்வாது. எனவே உரிய கமிஷனை உதவுக என்றவனைக் கொள்ளற்க'' என நல்லுரை நல்கினாள் இத்தகைய பண்பினள் அவள். தன்னை வரிந்தவன் செய்கின்ற செயல்களை எத்தகைய பெரியவர் பிழையென்று எடுத்து ஓதினும், தானே நேரடியாகக்காண நேரினும் ''அவை யாவும் பிழையல்ல. பிழையென்று பெரியோர் சொல்வதெல்லாம் பொய்'' என்று பேருரம் கொண்டு பொன்மகனாம் கணவனின் மேன்மை ஒன்றையே மேதினியில் கண்டிட்ட மாதரசியாகச் சிறப்புற நின்றவர் அந்தச் சிதம்பரனார் துணைவி.

இறைவனால் இணைக்கப்பட்ட மனங்கள் திருமணத்தில் இணைந்தபின்பு ஒருமனமாக வாழ்வதே புனிதம் என்று புராணம் முதல் புதிய பெருங்கதை வரை இந்து சமுதாயம் ஏற்றிப்போற்றி வந்தது. இந்தியத் திருமணச்சட்டம் 1955-இல் சட்டவரிசையில் இடம்பெற்ற பின்பு ''மணவிலக்கு'' வந்து அந்தத் தூய்மையை, புனிதத்தை அழுக்காக்கும் பெரும் சக்தி பெற்றது. எனவேதான்

எடுத்ததெற்கெல்லாம் நீதிமன்றம் சென்று விவாகரத்து வேண்டு மென்று வழக்காடுவோர் ''வாரணம் ஆயிரம் காணாதோர்'' ஆயினர். ஏறுக்கு மாறாக எதிர்வாதம் சொல்வாளேயானால் கூறாமல் சந்நியாசம் கொள் என்ற கூற்றினை மறந்து உலகில் கொடிகட்டி வாழ்கின்ற—இல்லை இல்லை சேலைகட்டி வாழ் கின்ற ஆண்மக்கள் ஆயிரமுண்டு. அப்படிப்பட்ட நிலை உருவான இந்த இருபதாம் நூற்றாண்டிலே கணவன் பிழைகளை உலகமே சொல்லினும் 'பொய்தானே' என்று இதயத்தில் ஏற்றிநின்ற வள்ளியம்மையைச் சிதம்பரனார் சிறப்பாகச் செப்புவதில் வியப்பில்லையே! அவையத்து முந்தியிருப்பச் செய்த தந்தை மேலும் முந்திநிற்க வேண்டுமென்று தன் மகனை மேலும் திட்டு தல் இயற்கையே! அப்படித் தந்தை திட்டிய போதெல்லாம் மனம் பொறுக்காது மாற்றுரை பகர்ந்த சிதம்பரனாரின் சீற்றம் ஆற்றிட அன்னம்போல வந்து நிற்பாள் அவர் மனைவி.

எத்தனை நண்பர்கள் இட்டுவருவராயினும் அத்தனை பேருக்கும் அறுசீர் உணவைப் படைக்கின்ற மாண்புடையவள் அம்மங்கை. ''அருகிலே உளது அறுசுவைச் சிற்றுண்டி விடுதி. விரும்பியே அங்குச்சென்று வேண்டியன அனைவர்க்கும் தந்து— ஏன் எனக்குங்கூட வாய்க்கு ருசியாக வாங்கி வந்து—செயல் படுவதே ஆண்மையின் தர்மம்''—என்று அவரோகணம் பாடுகின்ற மனைவியர் மலிந்தது இந்நாடு. இந்நிலை ஏற்படுங் காலத்தும் எந்தவித முன்னறிவிப்பும் இன்றி எண்ணிலா நண்பரை அழைத்துக்கொண்டு சிதம்பரனார் உண்ணச் சென்றபோதும், அறுசுவை அடிசில் அன்போடு படைத்து மகிழ்வாள் அந்த பண்புப் பைங்கிளி. பெண்மை என்ற சொல்லுக்கு இலக்கணம் ''துன்பம் நேர்கையில் யாழெடுத்து நீ இன்பம் சேர்க்க மாட்டாயா'' என்று இன்று ஒரு கவிஞன் பாட அறிகிறோம். அவ்வழி, தான் முன்னோடியாக நின்று, தன் கணவனைப் பாட்டால் மகிழ்விப்பாள் அந்தப் பாவை. இறைவன் முருகனின் இளம்பஞ்சுக் காலடிகள் முறைமன்னர் மணிமுடி ரத்தினங்கள் பட்டுக் கன்னிவிட்டது என்பர். அந்தக் காலடியின், துன்பம்தீர மென்மையான பூக்களை அருச்சித்து அந்தப் பூக்களால் சின்னஞ் சிறு காலின் துன்பத்தினை வருடிக்கொடுத்துப் பாடி நிற்பதில் பக்தர்களுக்குக் கோடி இன்பம். அவ்வழியே கணவனின் கால்கள் நடையினால் வருத்தமுற, அந்த வருத்தம் துவைய வருடி நின்றாள் வனிதை வள்ளியம்மை. கைப்பிடித்தவளின் கால் பிடிப்பதே கணவனின் லட்சியம் என்கின்ற இந்தக் கலிகாலத்தில் கிடைத்திட்ட பத்தினிப்பெண் அந்த வள்ளியம்மை, வள்ளுவ னின் வாய்மொழி வளமுற ஓதி உணர்ந்தவள். எனவேதான்

வள்ளுவரின் இன்பத்துப்பாலுக்கும் ஓர் எடுத்துக்காட்டாக இயங்கினாள் எனச் சிதம்பரனாரே மயங்கி மொழிகிறார். "உன் தேவையையெல்லாம் தினையணை கூடும்பொழுதும் கட்டில்கள் ஆடும்பொழுதும் கணவனிடம் கேட்டு நீ பெற்றிடுக" என்பது பரம்பரையாக வழிநடந்த சொல். ஆனால் வள்ளியம்மையோ "கூறெனக் கூறிய பொழுதும்கூட உடையோ நகையோ ஒன்று என்றும் தா எனக் கேட்டிலள்; பண்பெலாஞ் செய்தனள்" என்று அவளைப்பாடி மகிழ்கிறார் சிதம்பரனார்.

திடீரெனக் காலன் வந்து அவளைக் கொண்டு சென்றான். தொள்ளாயிரத்தில் சுவாமி நாயகமும் "கள்வீனம் இனிமையவன் கணவாச் சென்றனள்" என உரைத்திட்டார். உடல் நோயுற்ற போது இரவினில் விழித்திருந்தது, இதய அன்பினை அவள்மீது வடித்திருந்து, மருந்தினை வழங்கியும்கூட மாதரசி சிதம்பரனாரைவிட்டு மறைந்துவிட்டாள், 1901-ஆம் ஆண்டு.

எல்லோர்க்கும் நல்லவராய் வாழ்பவர்கள் எல்லோர் உள்ளங்களிலும் விரைவில் குடிபுகுவது இயற்கை. இவ்வுலகம் அவர்மீது ஆசைப்படுதல் வியப்பில்லை! எனவேதான் இறைவன் கூட அவர்கள் மீது ஆசைப்பட்டு விரைவிலேயே அவர்களைத் தன்னகம் ஏற்றுக்கொள்கிறான் போலும்! வள்ளியம்மை தனது இளவயதினில் இறைவனடி சேர்ந்ததை எண்ணி இப்படித்தான் ஆறுதல் தேடிக்கொள்ளலாம்.

### இறைவன் கொடுத்த இரண்டாவது வரம்

முதல் மனைவி முருகனடி மேவிய பின்பு பிள்ளை அவர்கள் பிரிவால் பெருங்கவலை அடைந்தார். மறுமணம் வேண்டாமென்று மனவுறுதி கொண்டபோதிலும் முதல் மனைவியாரின் குடும்பத்திலேயே வள்ளியம்மையின் இளைய பாட்டன் தன் பேத்தி மீனாட்சியை மணம்புரிந்து கொண்டார். "ஒரு நற்குண மங்கை நாயகனுக்கு நல்ல மகுடம் போன்றவள்" (A virtuous woman is a crown to her husband) என்றபடி வாழ்ந்துவந்தார் அந்த மீனாட்சி அம்மையார்.

### குணத்தின் குன்றம்

குணமென்னும் குன்று ஏறிநின்று குவலயத்தில் மக்கள் வாழ வேண்டும் என்பது வள்ளுவரின் வேணவா. "செல்வம் குறைந்து விட்டால் சென்றதொன்றும் இலையே! உடல்நலம் குன்றி விட்டால் இழந்தது சிலவே. ஆனால் குணம் கேடானால் எல்லாமே இழப்பே."

"If wealth is lost nothing is lost;
If health is lost something is lost;
If character is lost everything is lost."

என்ற மொழிக்கு ஒப்ப வாழுகின்ற மனிதனுக்கு வேண்டியது வரையற்ற செல்வமல்ல. நோயற்ற வாழ்வு மட்டுமல்ல. கோடாத குணம் ஒன்றே. இவ்வுலகில் இதனை உணர்ந்தோர் உதயசூரியன் உச்சிக்கு எழுவதுபோல, உயர உயர உயர்ந்து சிறக்கின்றனர். அது அற்றோர், உச்சிசூரியன் இறங்கி இறங்கி மாலை மறைதல் போல், மண்ணில் உயராது, மனிதனாக வாழாது மறைந்து விடுகின்றனர். சிதம்பரனார் குணத்தின் குன்றாக வாழ்ந்தார். அவரது வாழ்க்கை மன்றில் வெற்றிக் குழந்தைகள் எப்பொழுதும் ஓய்வற்று விளையாடிக் கொண்டிருந்தன. களங்கம் உள்ள நிலவு வாழ்கின்ற இவ்வுலகில் மருவற்ற மனம் கொண்டிருந்தார். எனினும் வெகுளிக்குச் சற்றே அதிக இடம் கொடுத்திருந்தார். தான் என்கின்ற தருக்கினை அடக்கி இதம் பல புரிகின்ற இயல்பினை உடையோராய்த் திகழ்ந்தார். பரிவு பாசம், பற்று கண்டு கொண்ட உள்ளமது எனினும் அதில் கலந்து கரையாத தன்மை உடையதாய் இருந்தது. வெட்டிப் பேச்சுக்கும் வெற்றுரைக்கும் வரவேற்பு அவரிடமில்லை. அழுக்காற்றினை ஒழித்து அறத்தினை அந்த வள்ளுவன் சொற்படி அறிந்திருந்தார். உயிரினும் ஓம்பப் படும் ஒழுக்கம் என்னும் ஆற்றிலே அவர் தினம் குளித்து வந்தார். உலகமே பெறினும் உரையற்க பொய்யுரை என்பதை உணர்ந்து உடன்பட்டார். எனினும் சுகம் தராத வாய்மையினைச் சொல்லவும் துணிந்திட்டார். அறிவெனும்அழகிமீது ஆசை கொண்டார். அன்பெனும் பெண்மைமீது காதல் கொண்டார். பழமை நூல்களைப் பழச்சாறாகப் பருகி மகிழ்ந்தார். பழமை நெறியினை, தினம் தினம் தன் நடையினில் ஏற்றுமகிழ்ந்தார். தன்னால் இயன்றவரை இல்லை என்ற சொல்லை எவர்க்கும் உரைத்தார் இல்லை. கனி இருப்பக் காய் கவராது இன்சொல்லின் அமுதினை எவர்க்கும் எக்காலத்தும் எங்கும் வழங்கும் பண்பு அவரது உறைவிடம். இன்னாது சொல்லாமல் இனிய வாழ்வு வாழ்ந்தார். தீயினும் சுடக்கூடிய தீவினையைப் புரிதல் பற்றி தீவினை என்று இடித்துக் காட்டுவார். எந்த ஓர் உயிர்க்கும் சின்ன ஒரு துன்பம்கூடச் சொல்மூலமாகவோ செயல் மூலமாகவோசெய்வது பாவமென்று சிந்தையில் கொண்டு செயலில் வடித்து நின்றார். "அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்" என்ற அடியினை மனத்தில் பதித்து அளவிலா அன்பு உளமதில் கொண்டார். அதன் வழியால் கடலென அருள் கொண்டார்.

இன்பம் வரும்போது அதனைச் சுவைக்கத் தெரிந்தவனே உண்மை மனிதன். எந்த ஒரு செயலிலும் எந்த ஒரு பொருளிலும் இன்பத்தைக் காண்பவன்தான் மனிதனாக வாழத்தகுதி பெற்றவன்.

''இன்பத்துள் இன்பம் வேண்டாதான் துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன்''

''துன்பம் நேர்கையில் யாழெடுத்து நீ இன்பம் சேர்க்க மாட்டாயா, என்று ஏங்குகின்ற மனிதன், அந்த இசையினைக் காற்றுத் தாங்கத் தொடங்கியதும், துன்பம் தூங்க, இன்பத்தின் சூழல் அவனை வாங்கி நிற்க, தன்னை மறக்கின்ற மனப்பான்மை பெற்று மனிதன் என்கிற தகுதி பெற்றவனாக ஆகின்றான். துன்பம் இல்லாத இடமில்லை. ஆனால் துன்பத்தின் விளிம்பிலே தான் இன்பம் இருக்கின்றது. கசப்பு மாத்திரைகளுக்கு மேலாடையாக இருக்கின்ற இனிப்பு ஏடுபோல இரண்டும் மாறிமாறி உளதென்பதை உணருதல் வேண்டும். பழச்சாறு பருகிட ஆசைப் படுகின்ற உள்ளம் அந்தப் பழச்சாறு எடுப்பதற்கு முன்பு பழத்தினை எவ்வாறெல்லாம் கசக்கிப் பிழிய வேண்டியிருக்கின்றது என்று கவலைப்பட்டால் பழச்சாறு பருகுகின்ற இன்பம் பாவிகள் நிறைந்த நரக வாயிலில் நுழைகின்ற அனுபவத்திற்கு ஒப்பாகி நிற்கும். எனவே இன்பம் வரும்போது அநுபவிக்கும் மனம் இன்றியமையாத ஒரு கருவூலம். வீட்டுக்கு வீடு வாசற்படி என்று பறைசாற்றும் தொல்சான்றோர் தெரிவித்த பின்பும் இன்பம் வரும்பொழுது அதனுடன் கலக்காமல் தாமரை இலைத் தண்ணீராக எதையோ நினைந்து, இருக்கின்ற இன்பத்தைக் கைநழுவ விடுபவர்களைக் கண்டு இறைவன் கைகொட்டிச் சிரிக்கின்றான். எனவேதான் சிதம்பரனார் ''இன்பினும் மகிழ்விலும் இயல்பு கடந்தோன்'' என்று உய்த்து உயர்ந்து உரைத்து மகிழ்கிறார்.

அறவழி நின்று செயலினை ஆற்றி அறத்தின் பெருமையை ஊருக்குச் சொல்லித் தரத்தில் உயர்ந்து தரணியில் வாழ்ந்தார். புறங்கூறிப் பொய்த்து உயிர்வாழ்தல் ஒழித்ததோடன்றிப் புறத்தினில் ஒன்றும் கேட்காமலும் வாழ்ந்தார். ''மனம் போன போக்கிலே கால் போகலாமா'' என்ற மூதுரையை உணர்ந்து சிந்தித்துத் தெளிந்து செயல்பட்டுச் சிந்தனை, செவ்வழிகாட்ட மறுத்த காலத்தில், அதனைத் திருப்பி அதற்கு நல்வழி ஊட்டிச் செயலாற்றினார். முந்தையர் மூதுரை சிந்தை தெளிவுறச் செய்த காலத்தில் அந்தச் சிந்தையின் வழி, செவ்வனே நடந்தார். எளிய மனத்தோடு வாழ்ந்து பெருமிதம் இன்மையைத் தமக்குப் பெருமையென அணிந்தார். செய்கின்ற செயலிலே

அருமை, அமைதி, ஆழ்ந்த சிந்தனை அடிக்கோடிட்டிருக்கும். "நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே" என்று நீதி நிலைநிறுத்துவதில் நிமிர்ந்து நிற்கும் நெறிபெற்றார். அகரமுதல எழுத்துப்போல உலகம் முதற்றாயான ஆதி பகவனை அன்பொடு போற்றி அணைந்தார். "சாதி இரண்டொழிய வேறில்லை எனச் சாற்றுகின்ற சாத்திரத்தின் சான்றினைப் பருகி நின்று, ஆண் சாதி பெண்சாதி என்ற இரு சாதிதான் உண்டு என உறுதியுடன் நின்று, மத குல வேற்றுமை, மனத்தினில் கொள்ளாது வாழ்ந் திருந்தார். கரையிலாக் கல்வியின் உரைகல்லாம் தத்துவ நூலி லும் உன்னத தமிழின் உயர் நூலிலும் தன்னைமறந்து அதனோடு கலந்து நிறைந்திருந்தார்.

பாவலரும் நாவலரும் புலவர் பலரும் இதுவரை, தெளிவாகச் சொல்லாத பொற்புறு கவிதைகளில் பல்வேறு பொருள்களைப் புரிந்து கொண்டு பாருக்குக் காட்டி நின்றார். தன்னை உணர்ந்து தன் குற்றம் தானுணர்ந்து செறிந்தார். சிறியவர் செப்புகின்ற மொழியிலும் செழுமைக் கருத்து சிதறிடக் கண்டார். நல்ல கனி மரத்தை நாடும் பூப்பறவைபோல, நானிலத்து அறிந்தோர் இவரின் பண்பும் ஆர்வமும் பலமுறச் செய்ததால் நண்பராயினர். மகரந்தம் உள்ள பூக்களை நாடுகின்ற வண்டுகள் போலப் படித் துச் சிறந்திருந்த பிள்ளை அவர்கள் மாட்டுக் காமுற்று வந்தோர் கணக்கற்றோர். அவர்களில் மெய்ப்பொருள் உணர்ந்தோர், மேலறிவாளர், பொய்ப்பொருள் விடுத்தோர், புலவர், பழமை போற்றுவோர், புதுமை விரும்புவோர் போன்றோரின் கூட்டம் விரவிக் கலந்திருந்தது. அன்னாரின் அன்புக்கும், அணைக்கின்ற நட்புக்கும் பண்புக்கும் உரிமையாகி அடிமையானேன் என்று ஆனந்தம் கொள்கிறார் சிதம்பரனார்.

பழமையில் பதிந்தோர் அதனை மறந்து பிழை செய்த காலத்து அவரை அரவணைத்து நயம்பட எடுத்துச் சொல்லித் திருத்தியும் நிலையினில் திரிந்தபோது இடித்துக் காட்டியும் நல் லியல் நெறிகளை நயந்து மொழிந்தும் நட்பினை வளர்ப்பதில் நளினம் கொண்டு,

> "நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
> மேற்சென்று இடித்தற் பொருட்டு"

என்ற உத்தரவேதத்துக்கு ஒளிர்ந்தார். எழுமை எழுபிறப்பும் ஏந்திவருகின்ற நட்பின் அதிகாரத்தை அறிந்திட்ட சிதம்பரனார் நண்பர்கள் அனைவரையும் அவர்தம் அகலா உயிரென அகத்தில் கொண்டார். எளியோராயினும் எந்தவிதப் பாகுபாடுமின்றித் தமது உதவிக்கரங்களை இயன்றவரை நீட்டி இன்பொடு வேண்டு

வன செய்வதில் பாரதியின் "கண்ணன் என் சேவகன்" என்ற பாத்திரத்தை நினைவூட்டினார். நதிகளும் மலைகளும் நாற் கூறுகளை நிலங்களும் நாடுகளைத் தூரத்தின் பாற்பட்டுப் பிரித்து விடலாம். ஆனால் பிசிராந்தையார் கோப்பெருஞ்சோழன் போல அன்பின்பாற்பட்டு இணைந்த மக்கள் தூரத்தைப்பொடிப் பொடியாக்கிவிட்ட கதை கற்றவர் அவர். அவ்வழியே எவரை யும் அயலார் என எண்ணாமல் அன்பின் பெருக்கால் தன்னவர் என்று எண்ணித் தேவைக்கேற்ற தொண்டு செய்து வந்தார்.

கிறித்தவர்கள் குறைந்தது வாரம் ஒருமுறை கூட்டுப்பிரார்த் தனை என்று தேவன் ஆலயத்தில் கூடிநின்று ஒன்றாகக்கூடி மகிழ்ந்து இறைவனோடு கலக்கும் தனிச்சுகம் பெறுகின்றனர். நபிகள் நாயகத்தின் நடையினைத் தனது உளமாகக் கொண்ட முசுலீம் பெருமக்கள் ஒரு நாளில் குறைந்தது ஐந்துமுறை ஒன்றா கக் கூடி மசூதியில் மண்டியிட்டு அல்லாவின் அருள்நாடி ஒருசேர "நமாஸ்" செய்து நலம் பல நாடுகின்றனர். ஆனால் ஓர் இந்துவோ, தானோ அல்லது தன் குடும்பத்தினரையோ மட்டும் கூட்டிச் சென்று தன் தகுதியால் பதவியின் பரிந்துரையால், எல்லோரும் வரிசையில் மேனிவருந்த நின்று கொண்டிருக்கையில், இறைஉருவின் அருகில் சென்று "இறைவா! என்னைக் காப்பாற்று" என்று தன்னலம் மட்டும் போற்றித் தரணியில் வாழ்ந்துவரும் முறை தினம் நாம் காணும்காட்சி. இதனை நன்கு உணர்ந்ததாலோ என்னவோ, சிதம்பரனார் தம்மை மட்டும் பேணாது, தெரிந்தோர் தெரியாதோர், அறிந்தோர், அறியா தோர். வலிந்தோர், மெலிந்தோர் அனைவரையும் ஒருசேர அணைத்துப் பாவித்துக் கூட்டுப் பிரார்த்தனைபோல அவர்களை அரவணைத்து ஆதரிக்கும் அரிய பண்பு பெற்றவராய்த் திகழ்ந் தார். இந்தப் பண்புதான் பின்னாளில் ஒரு பெரிய ஏகாதிபத்தி யத்தை எதிர்த்துநின்று செயலாற்றும் ஆற்றலை அவருக்கு அளித்தது. இத்தகு குணநலன் பல பெற்றோர் கொள்கைப் பெரியாராய் உலக வரலாற்றின் ஒளிமிகுந்த ஓரிடம் பெற்றார் என்பது வியத்தகு செய்தி அல்ல.

## மாண்பு நிறைந்த நண்பர்கள்

"முன்னம் அவனது நாமம் கேட்டாள்" என்ற அப்பர் தம் தேவாரப் பாடலடிக்கு ஏற்ப நண்பர்களின் பெயர்களைத் தனது சுய சரிதையிலே சொல்லி மகிழ்கிறார் சிதம்பரனார். "அஞ்சாமை, கல்வி, அடக்கம், கருணை எஞ்சாமல் நிரம்பிடும் என் வள்ளி நாயகம்" என்று தன் நண்பரை ஏற்றி மகிழ்கிறார். அவரது நண்பர் பட்டியலிலே நாட்டுக்கு உழைத்து நம் தேயம்

இன்புறத் தாம் நவிந்த பால கங்காதரதிலகர் மற்றும் பகவான் அரவிந்தகோஷ், மண்டையன் ஸ்ரீனிவாசாச்சாரியார், பம்பாய் தேசியத் தலைவர் காப்பர்தே, "தாலாட்ட மறந்த தமிழ்க் கவிஞன்" பாரதி, மற்றும் பலர் இடம் பெற்றனர். இவர் யாவரும் சிதம்பரனார் உணர்ச்சியால் நட்ட நண்பினர். சிதம்பரனார் போலத் தமிழ்மறையில் தெளிவுற்ற திறம் படைத்தோர் இல்லை. எனவேதான் அவரது சுயசரிதையில் ஒவ்வொரு அடியிலும் குறளின் வண்ணம் கொட்டிக் கிடப்பதைக் காண்கிறோம்.

"புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்"

என்ற குறளின் பொருளினை நினைந்து, நண்பர்களைப் பற்றி நவிலும் நேரத்தில் "உணர்ச்சி யொன்றும் உடன்பாடிலாது புணர்ச்சி யொன்றால் பொருந்தினோர் அனேகர்" என்று குறிப்பிடுகிறார். அவரோடு பின்னால் நெருங்கிப் பழகிய நண்பினர் வள்ளிநாயகம் தவிர அறுவர். அவருள் மங்கையர் இருவர். மற்றையோர் திருநெல்வேலிச் சிதம்பரம்பிள்ளை, கந்தசாமிக் கவிராயர், "வந்தே மாதரம்" பிள்ளை என்று வரலாற்றில் இடம்பெற்ற சண்முக சுந்தரம் பிள்ளை, தமிழ்ப் பண்டிதர் கந்தசாமி ஐயர் ஆகியோர். உயிருள்ள ஜீவன்கள் அனைத்தின்மீதும் அன்புகொள்ள வேண்டும் என்ற உத்தமர் புத்தரின் நெறிப்படி, சிதம்பரனார் தன்னோடு பழகிய நண்பர்களை மட்டுமன்றி அவர் வீட்டு நாயின்மீதும் பரிவுகொண்டு அதற்கும் அமுதூட்டி, அதனோடும் கொஞ்சிக் குலவி விளையாடி மகிழ்வார். நண்பர்கள் செய்கின்ற நல்ல செயல்களை நாடறிய நினைவுகூர்வதில் அவருக்கு நிகர் அவரே! ஈருடல் ஓருயிரான இணையற்ற நட்பினை எடுத்துக்காட்ட நண்பரின் உடையினைத் தாம் உடுத்தி மகிழ்வார். "என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற அப்பர் அருளுரைப்படி நண்பரின் இடுக்கண் களைய ஊழியம் ஏற்று உதவிட வருவார். முகம் மலர்ந்து நட்பதினினும் அகம் மலர்ந்து நட்பதே நயமென்று அவர் நடையுடை கண்டு நயந்து மகிழ்ந்திடுவார். அவரது உயிருக்கு உயிரான, அமுதத் தமிழ்மொழியை அள்ளித் தெரிந்து தெளிந்து தேர்ந்த வள்ளி நாயகம் எனும் மாணிறைத் துறவியால் தெள்ளிய பற்பல நூற்கதை பல, சிதம்பரனார் சிறப்புற அறிந்தார். "கைவல்லியம்" எனும் கருத்துயர் நூலும் "விசார சாகரம்" என்ற நூலும் விவரமாகப் புரிந்து மெய்ப்பொருள் கண்டு துன்பமும் இன்பமும் துலையெனக் காணும் நன்பதம் தெரிந்தார்.

ஒரு மனிதனின் குணங்கள் இயல்பிலே உருவாகின்றனவா? அன்றி வளரும் சூழலின்வழி வடிக்கப்படுகின்றனவா? என்ற வினாவிற்கு விடைகூறும் வகையாக "குலத்தளவேயாம் குணம்" என மூதுரை மொழிகின்றது. ஆனால் பழையன கழிதலும் புதியன புகுதலும் இயல்பான கால வெள்ளோட்டத்தில் சேற்றில் முளைக்கின்ற செந்தாமரைகளையும் சொக்கத் தங்கத்தில் பிறக்கின்ற சொத்தைகளையும் இந்த உலகம் சந்தித்து வருகின்றது. "உனது நண்பனின் பெயரைச்சொல். உனது குண நலன்கள் என்னவென்று உரைக்கின்றேன்" என்று ஓதுகின்ற ஆங்கிலப் பழமொழிக்கு ஒப்ப நாடும் நண்பர்களால் ஒரு மனிதனின் குணநலன்கள் சமைக்கப்படுகின்றன. எனவேதான் "பூவுடன் சேர்ந்த நாறும் மணம்பெறும்" "பன்றியுடன் சேர்ந்த கன்றும் கெடும்" என்கின்ற மொழிகள் உலாவந்தன. சிதம்பரனாரின் சீரிய குணங்களைச் செதுக்கிவைத்த சிற்பிகள், அவர் சூடிக்கொண்ட நண்பர்கள். அந்நன்றி மறவாது அந்த நண்பர்களின் நாமமதனை நாட்டு மக்களுக்கு நினைவுகூறும் தம் சுயசரிதையிலே நயந்து குறிப்பிட்டுள்ளார்.

## குலம் ஒரு குறையல்ல

> "இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
> பட்டாங்கில் உள்ளபடி"

என்பதனை முழுதும் உணர்ந்த பிள்ளை அவர்கள் மனிதனுக்கு மனிதன் உயர்வு தாழ்வு என உரைப்பதையும் கற்பிப்பதையும் அடியோடு வெறுத்தார். பிரம்மாவின் படைப்பிலே பேதமே கிடையாது—என்பது அவர் பயின்ற பெரும் பாடம். சிதம்பரனார் சிலகாலம் சென்னையில் வசிக்கையிலே ஒருநாள் ரிப்பன் அச்சு இயந்திர சாலையில் சுவாமி சகஜானந்தரைச் சந்திக்க நேர்ந்தது. "நான் அந்தணர் வகுப்புப் பிள்ளை" என்று சகஜானந்தர் சாற்றி நிற்க, சீருண்மை செப்பியதால் சிறந்த அந்தணர் நீரே எனச் சிறப்பித்து இல்லத்துக்கு அழைத்துச் சென்றார் சிதம்பரனார். கற்றவர் காமுறும் வண்ணம் தான் கற்றதை மற்றையோர்க்குப் பரிந்து ஊட்டுவதில் மாசற்று விளங்கினார். சுவாமிக்குத் தொல்காப்பியம், திருக்குறள் போன்ற சிறந்த நூல்களைத் தேர்ந்து கற்றுத் தந்தார். சிதம்பரனார் வழங்கிய கல்வி அமுதத்தைப் பாரில் பருகிப் பயன்பெற்றோர் பலப்பலர். தொல்காப்பியம் கற்ற தமிழன் என்பதால் மாணவன் எப்படிக் கற்க வேண்டும் என்பதனைச் சுட்டிக்காட்டுவதில் அந்தச் சுவாமி நாதனாகத் திகழ்ந்தார். "நேற்றைக்குப் படித்தது காற்றோடு சென்றது. நினைவென்னும் ஏட்டினில் நின்றது இல்லை"

என்கின்ற மொழி அவருக்குப் பகைவன். பாரதத்தில் முதன் முதலில் மிகப் பெரிய பதவிவகித்த இந்தியராகத் திகழ்ந்த, ''வியாசர் விருந்து'' படைத்த ராஜாஜி அவர்கள் ''எனக்குப் பாடம் சொல்லித்தரும் பொறுமை தங்களுக்கு இல்லை. தங்களிடம் பாடம் கேட்கும் பொறுமை எனக்குமில்லை'', என்று கூறினாராம். நோய்க்கு மருந்தினைச் சேய்க்கு ஊட்டுங்கால் தாய் ஏந்திடும் கண்டிப்பு இந்த நாவாய் மன்னரிடம் நல்ல பாடம் சொல்லித் தருகையிலே நிலவியதைக் காண்கின்றோம்.

சென்னையிலிருந்து ஒட்டப்பிடாரம் திரும்புகின்ற காலத்தில் தன்னுடன் சகஜானந்தரையும் விரும்பி அழைத்துச் சென்றார். எப்பொழுதும் உடனிருக்கும் சகஜானந்தரிடம் யாராவது சென்று குல விசாரணை செய்தால், ''வாழ்வின் நிலை பல கடந்த துறவிகளுக்குச் சாதி சமயம் என்ற வேறுபாடு கிடையாது'' என்று விரைந்து மொழிவார் சிதம்பரனார். பிள்ளை அவர்களின் அன்பினைப் பற்றிப் பேசுகின்ற பெருமான் சகஜானந்தர் "தமது பிள்ளை போன்று என்னை வளர்த்தார் அப்பெருந்தகையார்'' எனப் போற்றி மகிழ்ந்தார்.

## பத்திரிகைப் பணி

சிதம்பரனார் தமிழ் மாத சஞ்சிகையாக ''விவேகபானு'' என்ற பத்திரிகை நடத்தி வந்தார். அதன் விளைவாக உண்முகம் நோக்கும் உபாயம் தெரிந்தார். பாளையங்கோட்டையில் இருந்து வந்த சண்முகம் பிள்ளை என்பவரின் சீரிய நட்பினைப் பெற்றார். ''கண்டேன் சீதையை'' என்று சுருங்க உரைத்துச் சுகந்தந்த வாயுமைந்தன் அனுமனின்வழி, சுருக்கி உரைத்தல்,— இருகாதினைப் பெற்றதால் இவ்வுலகோர் இயம்புவது அனைத்தையும் கேட்டல் இரண்டையும் தனதாக்கி, அதன்மூலமாக அறிவினைப் பெருக்கி ஆனந்த வெற்றியினைக் கொண்டு நின்றார் சிதம்பரனார்.

## சுதேசியம் வளர்த்தமை

''வரப்புயர'' என வாழ்த்திய ஔவைப்பாட்டியின் அடிப்படையில் தம்மைப் போற்றி வளர்த்து, பின்னர் உடன்பிறந்தோர் அதற்கும் அப்பால் சுற்றத்தார், அதன்பின்னர் தரணிவாழ் மக்கள் எனப் படிப்படியாகப் போற்றி வளர்க்கும் உணர்வினை வளர்த்தால் நாடு உயரும் என்ற நற்கருத்தை நவின்று நின்றார். அதுவழி சுதேசியம் அல்லது நாட்டுப்பற்றினை நாடிவளர்த்த பிள்ளை அவர்கள் அதனைச் சொல்ல வருகையில் ''என்னுடைப் பற்றினை இணையறக் கொண்டதால், என்னுடைய மனைமுதல்

இணைவுறக் கொண்டேன்; புகழினில் விருப்பம் பொருந்திட நேர்ந்தேன்; அகமதை அகற்றி அன்பினை வளர்த்தேன்'' எனச் சொல்லுகின்றார்.

''தோன்றிற் புகழோடு தோன்றுக'' என்ற பொய்யா மொழியினைப் புரிந்து கற்றவரன்றோ! எனவேதான் 'புகழினில் விருப்பம் பொருந்திட நேர்ந்தேன்' என்றார். சைவ சித்தாந்த சபை, சைவத்தின் சித்தாந்தத்தைத் தொல்லுலகும் தெரிந்து கொள்ளத் தோன்றிய சபை. தெய்வக் கருத்துகளைத் தெளிவாகத் தேர்ந்துரைத்து மனிதப் பிறவிக்குத் தேர்ச்சி தருவதில் திறம்பெற்ற கருத்தினைச் செறிவாகச் செப்பும் சிறப்பு சேரப்பட்ட சபை என்றதாலேயே சிதம்பரனார் அச்சபையில் சேர்ந்தார். சபையால் இவர்பெற்ற பலன்—கருத்தினைப் பொருத்தமுற இனிமையாக உரைக்கின்ற கலை இவரிடம் வரவு கொண்டது.

கூடல் மாநகர் கொஞ்சுதமிழ் கோலோச்சும் தமிழ்ச் சங்கம் கொண்டது. அந்த மதுரைத் தமிழ்ச்சங்கம் மருவிநின்று மதுரத் தமிழினில் மனம் கொண்டு மாண்புற்றார். இவையன்றி வாலிபர் சங்கம், மாண்பிரமசங்கம் போன்ற நான்கைந்து சங்கங்களில் உறுப்பினரானார்.

ஆழக்கடலில் அமைதிகொண்டு உறங்குகின்ற சிப்பிக்குள் அடங்கியுள்ள முத்து, கடலினின்று வெளிவந்து கடைகளில் உலாவந்து கவர்ச்சி பெறப் பூசனை பெற்றுத் திகழ்கையில்தான் அதனை மற்றோர் உணருகின்றனர். பார்க்க, பெற்றுக்கொள்ள ஆசைப்படுகின்றனர். அதுபோலத் தனியனாக வாழ்ந்து கொண்டிருந்த சிதம்பரனார் நண்பர்களுக்கு இனியராக வாழ்வதோடன்றிப் புனிதப் பண்புடைய கூட்டங்கள் பலவற்றில் சங்கங்களின் மன்றங்களில் மனிதனாக உலவத் தொடங்கிய பொழுதுதான் இந்த மாநிலம் அவரது மதிப்பினை அறிய ஆரம்பித்தது. சொற்பொழிவுகள் பல கேட்டார். கேட்டார்ப்பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிந்தார். இவர் ஒரு ''அந்தோணி'' (கிரேக்க இலக்கிய வீரர்) என்றொரு சிறப்பும் கொண்டார். அவர் பேச்சிலே எட்டுத்திசையிலும் நடைபெறுகின்ற நிகழ்ச்சிகள் அத்தனையும் இடம்பெற்றன. அந்தச் சேதிகள் பலவற்றைப் பத்திரிகையின் மூலமாகப் படித்துத் தெரிந்தார். தாம் தெரிந்தவையை மற்றவர்க்குப் புரியும் வண்ணம் அறிவித்தார். சிதம்பரனாரின் மைத்துனரான முடிமன் முத்துசாமிப்பிள்ளை சிதம்பரனாரின் முதல் மனைவியான வள்ளியம்மை மீது கவிதை ஒன்றும் வெண்பாவில் புனைந்திருந்தார். அவர் பாடியது வள்ளியம்மையின் முழுவரலாறு

மைத்துனர் வழியில் சிந்தனை செலுத்தித் தாமும் சில கவிதைகள் வடித்துத் தாம் சொல்ல விரும்பியதைத் தரணிக்குத் தெரிவித்தார். அந்தக் கவிகளின் உருவினை தமிழ்ப்பண்டிதர் கந்தசாமி ஐயரும் மைத்துனர் முத்துசாமியும் பொருத்தமுறத் திருத்தி, சந்தம் அக்கவிகளுக்குச் சொந்தமாகச் சேர்த்திட, அவை ''விவேகபானு'' என்ற திங்கள் இதழில் வெளி வந்தது. தமிழ் மாநிலம் அந்தக் கவிதைகளை ஏற்று மகிழ்ந்தது. சுவாமி வள்ளிநாயகம் சொல்லித் தந்த பல நூல்கள் தவிர அவர் உள்ளம் கனிந்து உரைந்திட உணர்த்திட்ட, திருவள்ளுவரின் தெய்வ மறையின் பெருவளக் குறள் சில பேணிப் படித்தார், பிள்ளை அவர்கள். ''கல்வி கரையில; கற்பவர் நாள்சில; மெல்ல நினைக்கின் பிணிபல'' என்ற சொல்லை உணர்ந்த சிதம்பரனார் தங்கத் தமிழ் நூல்களுள் தலைசிறந்த காவியங்களான சிலப்பதிகாரமும், மணிமேகலையும், சிந்தாமணியும் கற்கத் தொடங்கினார். எனினும் முழுதும் முடிக்க இயலவில்லை, என்று அவரே மொழிகிறார். அதுபோலவே தொல்காப்பியம் கற்றிட வேண்டுமென்று சோழவந்தரன் அரசஞ்சண்முகனாரை அணுகினார். ஆய்வுரை கொண்டு அறிந்திட ஆசைப்பட்டார். எனினும் அதனைப் பூரணமாகப் புரியும் முன்னர் அரசஞ்சண்முகனார் தனது ஊர் சென்று விட்டார்.

## இராமகிருட்டிணானந்தர் சந்திப்பு

பற்பல கற்று உலகியல் சிறிது சிறிதாக உணர்ந்து வளர்கின்ற காலத்தில் தம் பெரிய அத்தையோடு சிதம்பரனார் சென்னைக்கு வந்தார். அங்கு விவேகானந்தர் மடத்தைச் சேர்ந்த இராம கிருஷ்ணானந்தர் என்பாரைச் சந்தித்தார். சுதேசியத்தில் திளைத்து ஊறிச் சிறந்திருந்த அவர், ''சிதம்பரனாரைப் பார்த்து, சுதேசியக் கைத்தொழில் வளர்க்கவும், கைத்தொழில் கொள்ளவும் எத்தகைய முயற்சி இயற்றினை?'' என்று கேள்விக் கணை தொடுத்தார். அதற்கு விடையாகச் சிதம்பரனார் செப்பியது சிறப்பான மொழியாகும். ''கனவிலே மயங்குகின்ற இந்தக் கனத்தில் நினைவினில் எதைத்தான் கொண்டு என்ன பயன்? நீள்வினை ஆற்றி என்ன பயன்? மலைமடுவாக, மடுமலையாக மாறித்தான் என்னபயன்? உயர்வினைத் தருகின்ற வாழ்வும் அயர்வினைத் தருகின்ற தாழ்வும் எல்லாமே மாயையே'' என்று மறுமொழி தந்தார். மயக்கம்தரும் கருத்தினை மனத்தில் கொண்டு மாயை என மயங்கி நின்ற சிதம்பரனாரை உணர்ந்துகொண்ட இராமகிருட்டிணானந்தர் கடைத்தேறும் வழி ஒன்று சொன்னார். ''சுதேசியம் ஒன்றே

சுகம்பல அளிக்கும்'' என்று சொன்ன சொல் வளமான நிலத்தில் விழுந்த வித்தெனச் சிதம்பரனார் சிந்தையிலே விழுந்தது. அவரது சித்தம் அதனைச் சிதறிப்போகாது சேர்த்துவைத்தது.

அடுத்து வந்த கார்த்திகையில் ஜப்பான் செல்லுகின்ற வழியில் வங்காள வீரர்கள் மேகமும் மின்னலும் வேண்டவந்தது போல் சிதம்பரனாரைக் காண வந்தனர். எவ்வாறு சுதேசியம் வங்கத்தில் தோன்றி வளர்ந்தது என்ற உபதேச மந்திரத்தை அவர்கள் இன்மழைபோலப் பொழிந்து சிதம்பரனாரின் இதயத்தை நனைத்தனர்.

### வந்தே மாதரம்: வாழ்க சுதேசியம்

சுதேசியம் என்ற வித்து சிதம்பரனாரின் சிறந்த இதயத்தில் இராமகிருட்டிணானந்தர் ஊன்றிவிட அது மெல்ல மெல்ல, ஆனால் மேலும் வலுவுடன் வளரத் தொடங்கியது. இந்தச் செடியில் சுதேசியம் என்ற அந்த வித்து இரண்டு இலை முதலில் விட்டு மண்ணில் உலவும் காற்றை உணவாக ஏற்க விளைந்தது. அந்த இலையில் ஒன்று தூத்துக்குடி—கைத்தொழில் வளச்சங்கம் மற்றொன்று தரும சங்கம். தினமும் அச்செடியில் சிந்தை கொண்டு அதனை வளர்க்கப் பாடுபட்டார். ''வந்தே மாதரம்'' ''வாழ்க சுதேசியம்'', ''சொந்தத் தேசம் சுகம்பெற'' என்று வீடுதோறும் வேலியாக நிற்கப் பயிரைக் காத்தார். அந்தப் பயிரினைப் பதம் பார்க்கப் போலிச் சுதேசி கொண்ட பொய்யுரை மிருகங்கள் தினம் வலம் வந்தன. அந்த மிருகங்கள் நெருங்கவிடாது தினமும் காத்து நின்றார். நெருங்கிய நண்பர்களை நிதமும் சேர்த்து ஆய்வுரைகள் பல செய்து அந்த ஆராய்ச்சி எனும் அருமாந்த மண்வெட்டியால் அந்தச் செடிக்கு வரிசை வரிசையாகப் பாத்திவடித்தார். உலகத்தினைத் தன்வசப் படுத்த உள்ளம் சிறந்திருந்தால்போதும் என்ற வள்ளுவரின் வாய்மொழிப்படி அமைந்த அந்த உள்ளத்தினைக் கேணியாக்கி அந்தக் கேணியில் நிலைநின்ற நீரை நலமே மொழிகின்ற நாக்கு என்னும் துலாவால் நாளும் இறைத்து அந்தப் பயிருக்கு நீர் பாய்ச்சினார். ''தா'' எனும் இன்சொலினைத் தகளியால் வார்த்துப் பற்பல சங்கக் கிளையுடன் அச்செடி வளமை பெற்றிட வளர்மதி கொண்டு வளர்த்தே மகிழ்ந்தார். விவேகானந்தர் மடத்தைச் சேர்ந்த அபேதானந்த ஸ்வாமி என்பவரும் பாய்பர மானந்தரும் அந்தச் செடியைத் தழுவுகின்ற தென்றலாக, அந்தச் செடி வளருகின்ற காலகட்டத்துக்கு இளவேனிலாக வந்தனர்.

ஆழ ஏரிட்டு நிறைந்த நல்வயல் அறுவடையின்போது பெறுகின்ற இன்பம்போல லாபம் பலவும் நலங்கள் பலவும் நல்கு-

கின்றதைக் கண்டு இன்புற்றார், சிதம்பரனார். கனிதரும் மலர்கள் மூன்று தந்து மகிழ்ந்தது அந்தச்செடி, அவை தரும் சங்க நெசவுச்சாலை, சுதேசிய நாவாய்ச் சங்கம், சுதேசியப் பண்டகச் சாலை என்பதாம். இவை மூன்றும் அந்தச்செடி பெற்றுத்தந்தது இறைவன் அருள் என்று ஏற்று மகிழ்ந்தார். அந்த இறைவனை "எங்கணும் புகழ்மணம் இன்புற வீசித் துங்கம் விரவியசுகவொளி பரப்பிப் பலப்பல சமயம் பலப்பல வருணம் பலப்பல படைத்துப் பலப்பல விதைத்துத் தோற்றி நிற்பச் சொல்லரும் வடிவங்கள் ஏற்றிவண் விளங்கும் இறைவன்" எனக் குறிப்பிடுகின்றார்.

## கப்பல் கம்பெனிக்குக் கஷ்டங்கள்

மலர்களென வளர்ந்த இந்த மூவகைச் சங்கமும் பிறரால் வாழ்த்தப்படவில்லை; வளர்க்கப்படவில்லை. வசைகூறும் வண்ணம் "பூ இவ்வளவுதானா" என்று இளக்காரம் சொட்ட இகழப்பட்டன. அந்தச் சங்கங்கள் அணைத்திட்ட துன்பங்கள், சந்தித்த சங்கடங்கள், ஏற்றிட்ட இடுக்கண்கள் அத்தனையும் எழுத்தில் ஏட்டில் வடிக்க இயலா. நெசவுச் சாலைக்கு முன்பணம் கொடுப்பதாக மொழிந்த பலர் பின்வாங்க ஆரம்பித்தனர், "இந்தத் தொழிலில் இலாபம் விளையுமோ" நாகரிகம் நிறைந்த இந்த நாளிலே இந்தக் கேள்வி ஒருபுறம். "புதுமை புதுமையாக நாலாவிதத்திலும் நாலுபேர்கள் விரும்புகின்ற வகையில் சந்தையில் வந்துள்ள அன்னிய நாட்டு அழகிய சாமான்கள் முன்பு சுதேசியப் பொருள்கள் என்பது கலாபம் முன்னர் காகம் ஆடுதல் போலாகும்" என்ற கேலிப்பேச்சு மறுபுறம். இதன் விளைவாக முன்னதாகப் பணம் கொடுத்தோர்கூடத் தமது பணத்தினைத் திரும்பக் கேட்டுப் பெற்றுக்கொண்டனர். "உயிர் காப்பான் தோழன்" என்கின்ற உயர்ந்த மொழிக்கேற்பச் சிதம்பரனாரின் ஒவ்வொரு சொல்லிலும் செயலிலும் தம்மையும் மறந்து அவர் பேசுகின்ற மொழியெல்லாம் போற்றுகின்ற வேதமென்று ஏற்று நின்ற, ஏட்டு குருநாத ஐயர், சிதம்பரனாரின் சிறப்பான நண்பராவார். அவர் திண்ணை நாளில் நெல்லைக் கழக வழக்கில் தண்டனை உற்ற தலைமைக் காவல்காரர். அவர் சங்கத்திற்கு உதவிட முன்வந்தார். காசு தருவதாகப் பேசி நின்றார். ஆனால் மறதி காரணமாகச் சொன்ன சொல்லை நிறைவேற்ற மறந்தார்.

அடுத்து, சுதேசிய நாவாய்ச் சங்கமென்கின்ற மலராவது சொந்த மணம்வீசி நன்மைபெற நல்கிடும் என்று அதை நாடினார். ஆனால், முதல் மலரான நெசவுச்சாலை ஓரளவு வாடாது இருந்ததற்குக் காரணம் பணம் என்கின்ற நீர். அதற்கு மனைவி மூலம் பெற்று ஊற்றப்பட்டதாலும், மற்றும் உடையார் குளம் கோவில்பிள்ளை நாடார் அதனைத் தாங்கி நின்றதாலும்

தான். எனினும் கோவில் பிள்ளையிடம் கடன் பெற்றிருந்த இவர் அதனைத் திருப்பித்தராது செல்ல அவர்கூடத் தனது திடமான மனது, சற்றுச் சிதைவுற நின்றரர். அதுசமயம் மேல் நாட்டினர் வெங்கனல் காற்றுப்போல, குறிப்பாகத் தமிழகத்தின் நாற்றிசையிலும் சென்றதோடல்லாமல், தூத்துக்குடி நகரினுள் ளும் புகுந்து செடியின் வேரெனத் திகழ்ந்த சிதம்பரனாரையும் ஒடித்துவிட்டு ஒய்யாரம் கொண்டனர்.

அந்நிலையில், நாட்டுப்பற்றினை நெஞ்சிலேந்தி பெருவரு வாய் உள்ள துறைமுகப் பதவியினைத் தூர எறிந்துவிட்டு, தேசத்திற்காக உழைக்கவந்த கந்தசாமிப் பிள்ளையும், வக்கீல் குமாஸ்தாவான வைகுண்டம் பிள்ளையும் தந்த பேராதரவால் அந்தச் செடியினை அழித்த கறையானைக் கடிதினில் போக்க முடிந்தது. அந்தச் செடி நிலைத்தூணாகி நின்றிட அத்தகு நண்பர்களின் பொருள்களும், நிறைவான மதியும் கரம்தந்து உதவின. இவ்வாறு நட்பு என்னும் நல் எருவிட்டு, கண்ணைப் போலக் காத்து வளர்க்க, அம்மலர் பெரிய இலாபப் பெருங்கனி நல்கும், அரிய நல்ல பிஞ்சினை அளித்தது அந்நாள். நாவாய் தருவித்து அதனை நாளும் நல்முறையில் நடத்த உதவிக்கரம் கொண்டு ஓடிவந்தார் சிவபுரம் மிட்டாதார் சி. வ. நல்ல பெருமாள் பிள்ளை என்பவர். அவருடன் இருந்த சிறந்த மனத் தன்மை கொண்ட ஜோசப் லூயிஸ் மேத்தா என்ற புரோக்கரை பெருமாள் பிள்ளை, நாவாய் சம்பந்தமாக, பம்பாய்க்கு அனுப்பினார்.

பம்பாய் சென்ற மேத்தா முதலில் ஷாலயன் கப்பல் சொந்தக்காரன், கப்பல் தருவதாகச் சொன்ன சொல்லை நம்பி யிருந்தார். ஆனால், அவர் நம்பிக்கை தவற, அந்தக் கப்பலின் சொந்தக்காரன் சொல்லினை மாற்றி "தந்திலேன்" எனச் சொல்லிட்டான். சொல்லிய விவரம் அஞ்சலில் சிதம்பரனாரை அடைந்தது. அதனைக் கண்டு அஞ்சிய வணிகர் பலரும் வாடி மெலிந்து சிதம்பரனாரைத் தேடி விரைந்தனர். "அவனன்றி ஓரணுவும் அசையாது. உலக முதல்வனான ஆதிபகவனைத் தொழுது இறைஞ்சுவோம்" என ஆறுதல் தந்து தேறுதல் கூறினார் சிதம்பரனார். ஷாலயன் கப்பல்காரனுக்கு இன்னும் பொருள் மிகுதி ஏற்றித் தருவதாக இலாப ஆசையை அவனுள் எழுப்பி இனிய சொல்கூறிச் செயலினைக் கனிவு செய்ய ஏஜெண்ட் ஒருவனை அனுப்பினார். அதன் பலன் "விரைந்து வந்து உடன்படிக்கை செய்திடுக" எனத் தந்தி மூலம் செய்தி வந்தது. உடனே "விடாமல் முயன்றால் வானில் உள்ள நில வினையும் வீட்டெதிரே விளக்காக வடித்திடலாம்" என்ற

வளமான எண்ணத்துடன் செயலாற்றிய தீரன் திறமை தெரி விக்கப் போமோ? ஷாலயன் கம்பெனிக்காரன் சொல்லியபடி "நீயே உடன்படிக்கை வரைந்து என்னிடம் அனுப்பிவிடு" என்று தந்திமூலம் தெரிவித்தான். வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைதல்போல அந்தச் சமயம், இந்த வணிகத்தின்மீது ஆசைகொண்டு பணம் தர முன்வந்த பொன் உள்ளோர் பலரும், பலகாலம் ஊக்கவுரை புகன்ற நல்லபெருமாள் பிள்ளையும் பின் கால்வாங்கினர்.

## நாவாய்ச் சங்கம் நன்றாய் நடக்குமா?

சிறந்த சீர்பெற்ற செம்மையான தொழில் இந்த நாவாய் நடத்தும் தொழில். "எம்மால் ஆகாதோ இத்தொழில்" என்று தூய நம்பிக்கை கொண்டிருந்த சிதம்பனாருக்கு இவர்கள் பின் வாங்கியது திகைப்பினைத் தந்தாலும், அவர்கள் மனத்தினை மாற்ற அவர் செய்த முயற்சிகள் அளவில. திடம் தனை விடாது தினமும் அவரிடம் அன்புடன் மொழிவார். ஆசை பல பொழி வார். தன்னை மீறி அச்சமுறவும் பேசுவார். அவர்களது புரி யாத புறச்செயலைக் கண்டித்தும் கனன்று நிற்பார். பெருமதி யும் சொல்லிப் புரியவும் வைப்பார். அவர்களை அமைதிப் படுத்தித் தன்வழி கொணர்ந்த பின்பு ஒப்பந்தப்பத்திரம் எழுதத் தொடங்கினார். சட்டம் என்பது சடுதியில் வருவதன்று. அறி வென்னும் விடுதியில் இருந்துகொண்டு விதிகளைப் புரட்டிப் பார்த்து வேண்டிய நூல்களைத் தேர்ந்து தெளிந்து மீண்டும்மீண் டும் சிந்தனைச் சிறையில் தன்னை ஒருமுகப்படுத்தி உழைத்தால் தான் சட்டத்தின் வித்துகள் புலப்படும். எனவேதான் சிதம்பர னார் "பலபல பகலும் பலபல இரவும் ஜலபானமின்றிச் சரிப் படச்செய்து பத்திரம் எழுதினேன்." என்று நாவாய் வாங்க எழுதப்பட வேண்டிய பத்திரத்தைத் தயாரித்ததைப் பகர்கின் றார். தொழிலில் தூய பற்றும் உயர்ந்த உழைப்பும் உறுதி யான திறமையும் கொண்டவர் என்பதற்கு இதுவே எடுத்துக் காட்டு. எழுதிய பத்திரத்தின் படியினை, பழுதிலாதது இது என்று பார்த்து மகிழாமல் பலமுறை திருத்தி, படித்துப் படித்துப் பார்த்து, ஒரு சீரான சித்திரம் தீட்டுவதுபோல வகைப்படுத்தி வரைமுறையாக எழுதி, அதன் பின்னரே இருதிறத்தாரும் ஒப்பம் இட வேண்டிய பத்திரம் உருவானது. பம்பாய் ஏஜெண்டு நல்ல நிறைவோடும் நாடும் உவப்போடும்பத்திரம் எடுத்துக் கொண் டுத் திரும்பிச் சென்றனன். இத்துணைக்கும் பின்னர் நல்லபெரு மாள் ஏதோ ஐயப்பாடு கொண்டுப் பம்பாய்க்குத் தந்தி அடித்துச் சிலபல விளக்கங்கள் கேட்க, அங்குள்ளோன் அதனைக்கேட்டு, "எதனையும் முடிக்க இயலாது, என்றான் மறுபடியும். முன்னால்

செய்தபடி தன் திறத்தால், தளராத உழைப்பால், தேர்ந்த ஞானத்தால் பம்பாய்க்காரனைத் திரும்பவும் வழிக்குக் கொணர்ந்தார் சிதம்பரனார். அதன் பின்னர்தான் அந்தப் பம்பாய்க்காரன் கொழும்பில் உள்ள கப்பலில் உள்ள முக்கிய வேலையாட்களில் இருவரான பிரகுமால், பெரிய ஆசான் என்ற இரு கிறிஸ்தவர்கள் துணையோடு கப்பலினைக் கொழும்பி லிருந்து கொணர்ந்து 'நன்றாய் நடத்துக' என நன்றே நவின் றனன்.

ஐந்து நாட்கள் சென்ற பின்னர், கொழும்பில் வணிகம் செய்து தம் செல்வம் வளர்த்திட்ட தமிழ் வியாபாரிகள், பிரகுமா லோடு பேசிய கப்பல், அங்கு வந்ததாகத் தந்தி தந்தனர். ஜோசப் லூயிஸ்விரைவாக அங்குச்சென்று பிள்ளையை அங்கு வரச்செய்து பேசி முடிவு செய்து வேலையை முடித்தான். அங்கிருந்து பெரிய கப்பல், பெருமையோடு தூத்துக்குடி வந்துசேர்ந்தது.

## கப்பல் கம்பெனிகளுக்குள் போட்டி

தூத்துக்குடியில் சுதேசிக் கப்பல் சுதந்திரமாகக் கடலலைமீது நீந்தத் தொடங்கியபோது ஏற்றுமதி செய்யும் வணிகரும் இறக்கு மதித் தொழில் புரிவோரும் நல்மணம் கொண்டு அந்தக் கப்பலையே, சார்ந்தனர். கப்பலுக்குப் பேராதரவு கிட்டியது. நாளொரு வண்ணமும் பொழுதொரு மேனியுமாகக் கப்பல் தொழில் வெற்றி முழக்கமிடுவதைக் கண்ட ஆங்கிலேயக் கப்பல் கம்பெனியான வி. ஐ. எஸ். என். கம்பெனி நடத்துவோர் நிலை குலைந்து தவித்தனர். போட்டியிலே வெற்றிபெற, நேர்மை இல்லாத வழிகளில் தன் திறமை காட்டிட நாடிவந்தனர். கப்பல் கட்டணங்களைக் குறைத்தல், கப்பலில் வேலை செய்வோர் கூலிகளை உயர்த்துதல், தரகர்களைத் தூதனுப்பி வணிகர் களைத் தம்வசம் இழுத்தல், புகைவண்டி நிலையத்தில் பொய் ஆட்களை அமர்த்தித் தங்கள் கப்பல்களில்தான் சுதேசிப் பொருட்கள் செல்வதாகப் பொய் மொழிகள் புகலுதல், போன்ற பல யுத்திகளைக் கையாண்டும் சிதம்பரனாரின் கப்பல் வணிகம் சற்றும் குறைவின்றி வளர்ந்தது. கூடவே இருந்து நல்லுதவி புரிந்த ஷாவுக்கு இரண்டொரு தினங்களில் இருபதாயிரம் ரூபாய் கள் இலாபமெனத் திரண்டது. இத்துணை வெற்றிகள் அடுத் தடுத்து அடுக்கடுக்காய் வந்ததும், ஆயிரம் காசுகள் அள்ளித்தரச் சேர்ந்தும், அன்னியர் விரித்த வலையில் அகப்பட்டுக்கொண்டு தன் மதியிழந்து, விடிவதற்கு முன்னாலேயே கொழும்பு சென்றிருந்த கப்பலை வேறொரு துறைமுகத்திற்கு அனுப்பி வைத்தான்;—கூடவே இருந்து குழிபறித்தான் ஷா. இதன்

விளைவாக எல்லா வணிகரும் எற்றுமதி இறக்குமதி செய்ய இயலாமல் மனம் உழன்று ஏக்கமுற்றனர். அந்நாளில் ''ஏஷ்யாட்டிக் கப்பல்'' அங்கு வர அதிலே சரக்கை எல்லாம் ஏற்றிவிட்டனர் வணிகர். கப்பல் கம்பெனிக்குத் துணிவுடன் முதலில் பொருள் தந்த பிரபல முஸ்லீம் வணிகரான பக்கீர் முகமது என்பவரைத் தனது வளமான வாதத்தின் வலிமையால் வசப்படச் செய்தார் வ. உ. சி. மேலும் வணிகர் பலரையும் வற்புறுத்திச் சுதேசிய நாவாய்ச் சங்கம் என்ற நன்மலரை மறுபடியும் மலரச்செய்தார். தொழில் தொடர்ந்து நடந்திடப் பொன் தருவதாகப் பக்கீர் முன்வர, மற்றையோரும் பெருந்தொகை தருவதாக ஒப்புதல் அளிக்க, வாடகைக்கு ஒரு கப்பலைப் பெறுவதெனத்தீர்மானித்து, ''சார்ட்டர்'' என்ற முறைப்படி கொழும்பிலிருந்து ஒரு கப்பலைக் கொணர்ந்தார் சிதம்பரனார். ஆனால் அந்தக் கப்பலோ இட்ட பணத்தையெலாம் ஏப்பம் விடுகின்ற பெரு வயிறுபோல அனைத்தையும் முழங்கி நிற்கப் பக்கிரியும் பணம கொடுத்த பலரும் பயந்து நின்றனர். ''செயலினை முடித்த பின்பு திரும்பக்கொள்'' என்று பணம் கொடுத்தோர்க்கு உறுதி தந்து, சங்கத்தை ரிஜிஸ்டரில் தாக்கல் செய்து, பின் வேறு கப்பல் பெற்றிடப் பம்பாய் சென்றார் சிதம்பரனார். பம்பாய் செல்வதற்கு முன்பு ''வந்தால் கப்பலுடன் வருவேன். எனது வழியில் நான் விழுந்தால் என் அப்பன் இறைவனடி சேர்ந்திடுவேன்'' என்று வீரமுழக்கம் செய்துவிட்டு, கொண்ட ஒரு கொள்கைக்காகப் பம்பாய் எய்தினார். சிதம்பரனார் தன் மானநிலை கைக்கொண்டு பம்பாயின் வீதிகளிலே பம்பரமாய்ச் சுழன்று கொண்டிருந்த வேளை அவரின் அருமந்த மைந்தன் பிணியால் பீடிக்கப்பட்டு மரணவாயிலின் படி ஏறிக்கொண்டிருந்தான். இல்லாளோ நிறை கர்ப்பம் கொண்டு துன்பத்தில் நீந்திக்கொண்டிருந்தாள். பம்பாயில் சிதம்பரனாருக்குச் செய்தி தெரிவித்து அவரை உடனே வந்து, கண்டு, பின்னர் செல்லும்படி நண்பர்கள் வேண்டினர். ''கல்லினுள் தேரைக்கும் கருப்பையில் குழந்தைக்கும் சொல்லாமல் உணவூட்டிக் காத்திடும் எல்லாம் வல்ல இறைவன் என் இல்லாளையும் ஏந்தலையும் எந்நாளும் காத்துதற்பான்'' என்று கூறி வாராது நின்றார். அவரது இறை நம்பிக்கையின் முழுமை உருவம் இச்சொற்களில் வடிக்கப்பட்டிருப்பஃதக் காண்கின்றோம். ''சென்றான்; கண்டான்; வென்றான்'' என்று சரித்திரம் சொல்லுவதுபோலப் பம்பாய் சென்ற பிள்ளை அவர்கள் ''காலிபா'' என்ற கப்பலுடன்தான் தமிழகத்தின் கரையேறினார். ''லாவோ'' என்ற மற்றொரு கப்பலைத் திரு. வேதமூர்த்தி என்பவரைப் பிரான்சுக்கு அனுப்பி வாங்கினார். அவற்றுடன் இரண்டு இயந்திரப் படகுகளும் சேர்த்து வாங்கப்பட்டன.

இருபெரும் கப்பல்களை ஒரே சமயத்தில் விலைக்கு வாங்கி வந்த சிதம்பரனாரின் சாதனையை இந்தியப் பத்திரிகைகள் பாராட்டின. பாரதியாரும் அப்பொழுது தாம் நடத்திவந்த வாரப்பத்திரிகையான "இந்தியா"வில் சிதம்பரனாரைப் பாராட்டி எழுதினார்; "வெகு காலமாகப் புத்திரப்பேறின்றி அருந்தவம் செய்து வந்த பெண்ணொருத்தி ஏக காலத்தில் இரண்டு புத்திரர்களைப் பெற்றால் எத்தனை அளவற்ற ஆனந்த மடைவாளோ அத்தனை அளவற்ற ஆனந்தத்தை நமது பொது மாதாவாகிய பாரதத்தாயும் இவ்விரண்டு கப்பல்களைப் பெற்றமைக்காக அடைவாளென்பது உறுதி" எனக் கூறினார் கவியரசர் பாரதியார்.

இந்தக் கப்பல் தொழில் நன்றாய் நடந்து நாவாய்ச் சங்கம் என்கின்ற பூ நன்மணம் பரப்புவதைப் பார்த்த பகைவர்கள் பதைத்தனர். இலாபம் தருமோ? எனப் பயந்து பேசிய மொழி கள், வி. ஐ. எஸ். என். கம்பெனியார் திருடன்போல மறைவில் நின்று தந்த துன்பங்கள், எல்லாம் சேர்ந்து, பொருள் தருவாரின் மனத்தை மயக்கி அலைபாய வைத்தன. அந்தப் பூவைத் தாங்கிக் கொண்டிருக்கின்ற கிளையைக் கிள்ளிக்கொன்றிட ஓராண்டுப் போராட்டமே நின்று புரிந்தனர். நாற்சந்தி கூடுமிடத்து பிணியுற்ற குழந்தைகள் பிணியினின்றும் நீங்க வேண்டி மண் ணெடுத்து வந்து, மிளகாய் வற்றல் முதலியவற்றைக் கூட்டி, தீயினில் இடும் வழக்கு ஒன்று தமிழ்நாட்டில் உண்டு. இன்றும் கண்பட்டுவிடுமே என்று பூசனிக்காய்களைப் பெரிதாகத் தொங்க விடுதல் என்ற வழக்கத்தையும் காண்கின்றோம். அதை ஒட்டித் தினத்தொடு சந்திதித் தெருவினில் சென்று சிதம்பரனார் "பிரசங்க மந்திரம்" சொல்லி ஏழைகளுக்கு என்றும் துணையான இன்மண் கொண்டு, "பதறிடச் செய்த பிசாசே! பாழாய்ப் போக" என்று உரை ஒலித்து, அந்த உரையோடு பிறவும் கட்டி, அயராத அசைவின்மை என்ற தன்மையினையும் சேர்த்து, அக்கினியிட்டுப் பொறாமையைப் போக்கினார். மூலை முடுக் கெல்லாம் இந்தக் கப்பலைப் பற்றியே சொல்லப்பட்ட பொய் இருள் அகலவும், வேலையாட்கள் என்ற விளக்கிற்கு ஒளியூட்டி யும், திருடனும் இந்த நாவாய் மலரை அணுகாமலும் இருக்கு மாறு திறத்தோடு பணியாற்றிக் காத்தார்.

## நம்மவர் இழைத்த அநீதிகள்

> "தம்மின் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து
> மன்னுயிர்க் கெல்லாம் இனிது"

என்ற வள்ளுவன் குறளினை மறந்தோர் வாழ்கின்ற உலகம் இது. வேடிக்கையான கதை ஒன்று உண்டு. எல்லா நாட்டிலிருந்தும் நண்டுகளைப் பிடித்து, நண்டுகளை நல்லாகாரமாக ஏற்கக் கூடிய மேலைநாட்டுக்கு ஏற்றுமதி செய்யக் கப்பலில் அனுப்பிய காலத்தில் நண்டுகள் அடைக்கப்பட்ட பெட்டிகளின் மேல் மூடிகள் எப்படியோ சரிந்து விழுந்துவிட்டன. கப்பல் தன் இலக்கான நகரை அடைந்தபோது இந்தப் பெட்டிகளைப் பார்க்க வந்தோர் எல்லாப் பெட்டிகளும் வெறுமையாக—காலியாக, இருந்ததைக் கண்டனர். ஆனால் இந்திய நாட்டில், குறிப்பாகத் தமிழகத்திலிருந்து அனுப்பப்பட்ட பெட்டிகளிலிருந்த நண்டுகள் அத்தனையும் ஒன்றுகூடக் குறையாமல் பெட்டியின் அடித்தளத்திலேயேஅமர்ந்திருந்ததைக் கண்டு ஆச்சரியமுற்றனர். ஆராய்ந்தபோது ஒரு நண்டு அடித்தளத்திலிருந்து மேல்நோக்கி ஏறுகையிலே பல நண்டுகள் அதன் காலைப்பிடித்து இழுத்து மேலே ஏறாவண்ணம் பார்த்துக் கொண்டனவாம். தானும் ஏறாமல் ஏற முயல்பவரையும் கீழே தள்ளுவதே இந்த நாட்டில்-இந்த மண்ணில் ஒரு மனிதன் மதிக்கும் மறையாக மலர்ந்திருப்பது இந்த நாட்டில் தலைவிதியா? அல்லது மண்ணாகும் மனப் போக்கா? என்பது அந்த மகேசனுக்கே வெளிச்சம். இதற்கு எடுத்துக்காட்டாகச் சிதம்பரனாரின் கப்பல் வணிகம் சீரும் சிறப்புமுறச் செம்மாந்த நடைபோட்டுச் செல்வதைக் கண்ட பொருள்தந்த சிற்சிலர், குறிப்பாக நெல்லை வக்கீல் குருசாமி முதலியார், பொறாமை தழுவ "நம்மில் எளியன் நம்மிற் சிறியன் தம்மினும் புகழினைக் கண்ணுதல் என்னே? அவனை ஒழித் தெலாம் ஆள்வேம்'' என்று எமன் அன்ன சீற்றத்துடன் சிதம்பர னார் மேல் சாடி வந்தனர். பண்டகசாலை என்ற பருவமயிலைக் காவாகத் தர வேண்டும் எனக் கங்கணம் கட்டிக்கொண்டிருந்த, அந்தக் கண்ணற்றோர் கையிலிருந்து அதனைக் காத்திட வெங்கிட்டராம நாயகன் என்ற நண்பனை நாடினார். அந்த நண்பன் அவருக்கு அறிவானவன். உயிரானவன். ஐம்பொறி எனச் செறிவோடு நின்றவன். அவன் வீட்டுக்கதவினை உதவி கேட்டு ''பூங்கதவே தாழ் திறவாய்'' என்று தட்டி நிற்க, தேவன் அன்று அருளியபடி அந்தக் கதவு திறந்தது. ''இத்தனை தூரம் எனை நாடி வரவேண்டுமோ? முத்தனைய கையாலே மொழி ஒன்று எழுதினால் ஏற்கேனோ'' என வெங்கிட்டராம நாயகன் வரவேற்க, சிதம்பரனார் பண்டகசாலைப் பாதி யத்தை அவனிடம் கொடுத்தார். "தாவாய்ச் சங்கம் என்ற செடி நல்ல ஒரு கனி தரும்முன் காய் காய்த்து உளது. அதற்கு நிதி வேண்டும். வேண்டும்நிதி வாங்கிவருக'' எனக்கூறி நண்பர்கள் சிதம்பரனாரைக் ''கள்ளிக்கோட்டைக்குச் சென்றுவா'' என

மெல்ல அனுப்பினர். அவர்களது ஆழ்ந்த இதயத்திலே ஒளிந்திருந்த இருட்டான தீய எண்ணங்களைத் தமது அறிவென்னும் வெளிச்சத்தால் தெள்ளத் தெரிந்தார் சிதம்பரனார். எனினும் அவர்கள் சொல்லாலும் செயலாலும் அங்கு இங்கு எனச் சிதம்பரனாரை அலைக்கழிக்கத் தொடங்கினர். இத்தகைய மனிதர்கள் முன்பு தனது நாவாய் மலருக்கு நீர்கிட்டாது என்று உணர்ந்த சிதம்பரனார் வேறிடம் உதவிநாடி வடதிசை பலநகர் மகிழ்வுடன் சென்று, குடதிசை வந்து விரும்பிய உதவி பெற்றுத் தன்னகர் கூடினார்.

## கம்பெனியிலிருந்து ராஜினாமா

கூட்டு வணிகமென்பது ஏட்டில் சிறந்திருந்தாலும் நடைமுறைக்கு ஒவ்வாத ஒன்றாகும். இரு கடிகாரங்கள் ஒரே மணி காட்டுவதில்லை; இரு நங்கையர்களின் நாக்குகள் என்றும் இணைந்திருப்பதில்லை—என்பதுபோல இரு வணிக மனங்கள் என்றும் ஒன்றோடொன்று புரிந்து இயங்கியதில்லை எனலாம். எனவேதான் "கொள்ளையடிக்கச் சென்றாலும் கூட்டோடு செல்லுதல் வேண்டா" என்ற முதுமொழி வழக்கிற்கு வந்தது. எனவேதான் பொருள்தந்த சிலரோடு கூட்டாகக் கப்பல் வணிகம் தொடங்கிய சிதம்பரனார் அவர்களுடைய இசைக்குத் தாளம் போட முடியாமல் இசைவுக்கு இணங்க இயலாமல் இன்னல்களைத் தாங்கவொண்ணாமல் அவர்கள் வேலையினை விட்டு விடும்படி விரும்பி வற்புறுத்தச் சாலவும் நன்றென" விடுதலைப் படி ஒன்று விரைந்தே வழங்கினார். சேற்றிலே முளைத்த செந்தாமரை போல, என்றும், எக்காலத்தும் உடன் நின்று உழைத்து, நாவாய்தனை நன்றாகக் காத்து நின்ற சி.த.ஆறுமுகம் பிள்ளையும், வணிகர் அருணாசலமும் மற்றும் பலரும் "ஒரு நாளும் அவனிலாது உருப்படாது நாவாய்" என்று உரைகூறி இவ்குண்டு எடுத்துச் சொன்னார்கள். இவ்வாறு உடனிருந்து உயிர்தந்து உழைத்த உத்தமர் ஆறுமுகத்தின் திருநாமமதனைப் பின்னைய நாளில், தன் பிள்ளைக்குப் பெயராய் ஈந்துப் பேரானந்தம் கொண்டார் சிதம்பரனார்.

## மீண்டும் கப்பல் கம்பெனியில்

இத்துணை எதிர்ப்புகள் தீக்கணைகளாகத் தங்களைத் தாக்குதல் கண்டு தாளமுடியாத மற்றையோர் "சிதம்பரனாரைத் தாங்கள் வெளியேற்றவில்லை. தாமே வெளிச்சென்றார் அவர். அவரைத் திருப்பி அழைத்துக்கொள்வோம்" என்று அவரை அழைத்து ஏஜெண்டு என்ற பதவியினைக் கொடுத்தார்கள். நாட்டுக்காக ஏற்ற பணியிலே சற்றே விட்டுக்கொடுத்தல் நல்லதே

என ஏற்றுக்கொண்டார்; தமது நாணத்தைச் சற்று விட்டுக் கொடுத்தார். அவர்களில் ஒருவன் "ஏஜெண்ட் என்று சொன்னால் இன்னும் புகழ் அவரை ஏற்றிடும்" என்று எதிர்வாதிட்டு "சூப்பிரண்டெண்டண்ட்" எனச் சொல்வோம்—என்று கூறி மகிழ்ந்தான். "பேரில் இருப்பது வெறுமையே. செயலினால் வருவது செம்மையே" என்று எண்ணி "அந்த நாவாய்ச் சங்கத்தில் நாளும் உழைப்பது தம்கடமையே" என்று உறுதிகொண்டு மீண்டும் சங்கத்தின் கைப்பிடித்தார். ஐ. எ. எஸ். என். கம்பெனியைச் சேர்ந்த வியாபாரிகள் அனைவரையும் தன்வழி திருப்பி, தென்திசையில் நாவாய்தனைத் தமிழன்னைக்கு மலராகச் சூட்டும் நல்லோனாக நன்றே நினைந்தார். நாவாய்ச் சங்கம் மலர்ந்திடக் கண்ட மாற்று நாட்டினர் அதனை அடியோடொழிக்க வழிபல தேடினர். எட்டப்பர்கள் நிறைந்திருந்த இப்பூமியில் உடன் இருந்தோர் கடும்பகை மனத்திற்கொண்டு, சிதம்பரனாரைப் பற்றிக் கடிதங்கள் பல ஆளுநருக்கு அனுப்பினர். அவர் செய்யும் செயல்களில் குற்றம் குறைகாணும் நக்கீரனாகத் தேடி அலைந்தனர்.

## நாட்டுப்பற்று நாட்டிய செயல்கள்

முத்துக்குளிக்கும் தூத்துக்குடியில் முகிழ்ந்தது இவரது நாட்டுப் பற்று. தூத்துக்குடி மக்கள் ஏற்றிடும் வகையில் பற்பல சொற்பொழிவுகளைப் பல்வேறு இடங்களில் பொழிந்துநின்றார். இதன் குறிப்பு பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை அடைந்தது. முல்லை மணக்கும் மாவட்டமான திருநெல்வேலியின் தலைநகர் நெல்லையில் நிகழ்ந்த மாகாண மாநாட்டில் முழங்கிய முழக்கம் அந்த மேலைநாட்டானின் காதில் ஓதப்பட்டது. பாளையங்கோட்டையில் இவர் பகர்ந்த பெரும் சொற்கள், ரிஷப வாகனத்தை உடைய நெல்லையப்பர் கோவில் முன்பு நிகழ்த்திய பேருரை, மற்றும் கூடல் மாநகரில் கூவி அருள்வாரைக் கூடி நிதம் ஒரு தலமாக நிகழ்த்திய சூளுரைகள், சூரியன் உதிக்கா நாட்டினரின் செவிகளுக்குச் சேர்க்கப்பட்டன. கருமமே கண்ணதாகும் என்ற உறவிற்காக உணர்வுக்குப் பலியாகாமல், தன் செயலினைப் பம்பாயில் வைத்து முத்தாய்ப்பு அந்த மேலை நட்டாவளின் உறுதியான உள்ளத்தை உலைய வைத்தது. கங்கை நீராடி இந்நாட்டு மக்களின் பாவங்களையெல்லாம் கழுவி விட்டு, காசி நகர் சென்று இந்நாடு விடுதலைபெற ஈசன் அருள்வேண்டி நின்ற பின்பு விடுதலைப் போராட்டத்திற்கு வித்திட்டார் சிதம்பரனார். வங்கம் சென்று தங்கம் போல் தன்னைத் தாய்நாட்டிற்காகப் புடம் போடத் துள்ளி எழுந்துவந்த தூய வீரர்களைக் கண்டு

கொண்டாடியதும் அந்தக் கணவான்களின் காதுகளில் சேதி என ஓதப்பட்டது. சென்னைக் கடற்கரையில் மற்றும் சந்தைக் கட்டிடங்களில் சாதுர்யமாகச் சாற்றப்பட்ட நாட்டுப்பற்று, கடலூரில் கூடிய கொள்கை முழக்கத்தோடும், குறுக்குமதி படைத்த கொள்ளையரான வெள்ளையனின் விவரத்திற்கு வழங்கப்பட்டது. ''இப்படிச் சேதிகள் வெள்ளையனைச் சேருகின்றனவே. அதனால் என்ன நேருமோ'', என எண்ணி மலைக்காது மேரு போல் பீடுநடை போட்டு மக்களிடையே நாட்டுப்பற்றைத் தொடர்ந்து நாட்டி நின்றார்.

கூடலூரில் கூட்டுறவுச் சங்கம் ஒன்று அமைத்து அதை நாட்டு உயர்வு காணும் நாட்டுப் பற்றின் அங்கமாக நடக்க வைத்தார். தில்லை அம்பல நடராசர் நடனமிடும் சிதம்பரம் சென்று அங்கும் ஆக்கவீரர்கள் அனைவரையும் ஒன்றாக்கி, ஆண்டாள் கண்ணனைப் பாடுதல்போல் அனைவரும் நாட்டுப் பற்றினைப் பாடமாக மனத்தில் விதைத்திட இவர் எருவிட்டு நின்றார். தஞ்சை மாநகரில் திகழ்ந்த குழு ஒன்றினைச்சார்ந்து நின்று அவர்களது நெஞ்சம் நாட்டினை நோக்கி நடந்திட நிகழ்த்திய பணிகள் ஏராளம். இத்தனைக்கும் நடுவிலே எடுத்த எண்ணம் நிறைவேற, தொட்ட செயல் துலங்கிடக் கொழும்பில் உள்ள கப்பல் கம்பெனியில் பங்குகள் கொண்டு, அந்தக் கப்பல்களுக்கு வந்த ஆபத்துக்களைத் தடுத்து நிறுத்தி, தேசம் மதித்திடும் சிவசிதம்பரத்தை ஏஜெண்டாக ஏற்படுத்தித்தான் செயல்பட்டார். சில வணிகர்களைத் தன்னோடு சேர்த்து, நாட்டுப்பற்று என்ற வியாபாரத்திற்கும் அவர்களைக் கூட்டாளியாக்கினார். அங்குப்பல இடங்களில் ஆற்றிய சொற்பொழிவு''நாட்டுப்பற்று'' என்ற விதியினைக் கேட்டோர் இதயத்தில் விதைத்தது. பின்னர் சூரத் காங்கிரஸில் பங்கேற்று' சூழ்ச்சி செய்கின்ற ஆங்கிலேயரின் சூதினைச் சொல்லிப் புரிய வைத்தார். அந்த மாநாட்டில் பங்கேற்ற பிரதிநிதிகள் விடுதியில் போய் அமர்ந்திருந்த மகான் அரவிந்தர், லாலா லஜபதி போன்ற தீவிரவாதிகள் கூடிச் செயல் திட்டம் வகுத்துக் கொண்டிருந்தனர். அவ் அவையில் அரவிந்தர் அனைவரையும் நோக்கி, ''என் பிள்ளை அவர்கள் எங்கே?'' என்று வினவிட, வியப்பு மேலிட்ட அந்த வீரர் கூட்டம் விளக்கம் அறியாமல் விழிகாட்டின! விளக்கம் தந்து ''தூத்துக்குடி தந்த தூய தேசபக்தர் பிள்ளையைத்தான் என் சிந்தைகொண்டு கேட்டேன்'' என விளம்பினார், அரவிந்தர். அங்குவந்த சிதம்பரனாரை அரவிந்தர்அன்போடு அரவணைத்துக் கொண்டார்.

எப்பொழுதும் எங்கும்செயல்வீரர்களில் மிதவாதி தீவிரவாதி என்ற இருபிரிவு உண்டு. ''செய் அல்லது செத்துமடி'' என்பது

தீவிரவாதம். ''சாம பேத தான தண்டம்'' எனச்சாற்றுவது மிதவாதம். கருத்தொருமித்த ஆதரவு அங்குக் காணக் கிடைக்க வில்லை. கருத்துவேறுபடக் குழப்பம் ஏற்பட்டது. தீவிரவாதி களின் படைத்தலைவராய்த் திகழ்ந்த லோகமான்யத் திலகர் முற் போக்குக் கொள்கைகளை மூலைமுடுக்கெல்லாம் முளைக்கச் செய்து அதன் மூலம் மக்களை விடுதலைப் போராட்டத்துக்கு உருவாக்க உறுதிகொண்டார். தமிழ்நாட்டில் தமது கொள்கைக்கு ஆதரவுதேட வேண்டிய பொறுப்பினைத் திலகர் சிதம்பரனாரிடம் ஒப்படைத்தார். அன்னியர் ஆட்சியில் தலைமை ஆளுநராகத் (கவர்னர் ஜெனரல்) தகுதியுடன் திகழ்ந்த தென்னகத்துத் தீரர் சக்கரவர்த்தித் திருமகன் என்று பிற்றை நாளில் பேர் பெற்ற ராஜாஜி, ''தென்னாட்டிலேயே சிறந்த வீரர் சிதம்பரம்பிள்ளை ஒருவர்தான் என்பது திலகரின் கருத்து'' என்று சென்னை மாநகரில்நிகழ்ந்த ஒரு பொதுக்கூட்டத்தில் பேருரை தந்து நின் றார். வெள்ளையர் ஆட்சியில் விளையும் தீமைகளை விளக்கமாக மக்களிடம் எடுத்துச் சொல்லி, நாட்டுப்பற்று அவர்கள் நெஞ்சில் நிறைந்திடச் செய்யும் நோக்குடன் சங்கம் ஒன்றினை 1905-ஆம் ஆண்டுத் தோற்றுவித்தார் சிதம்பரனார். ''தேசாபிமான சங்கம்'' என்ற திருநாமத்துடன் அந்தச் சங்கம் திகழ்ந்தது. சுதே சிப்பற்று, அன்னிய சாமான்கள் விலக்கு, தேசியக் கல்வி அனைத் தின் அவசியத்தை அனைவரும் அறிந்துகொள்ளும் வகையில் ஆயிரம் உரைகள் நிகழ்த்தப்பட்டன. ஆங்கில அணங்குமீது அளவிலாக் காதல் கொண்டு அந்த மயக்கத்தில் தூங்கிநின்று பைந்தமிழில் பேசுவது பழமை என்றும் சிறுமைஎன்றும் சிந்தனை வேரூன்றிய காலமது. எனவேதான் தேசியக் காங்கிரஸ் ஏழை மக்களுக்கு எட்டாத மாடமாக இருந்தது. பிள்ளை அவர்கள் அந்தத் தடையைப் போக்கிச் செந்தமிழில் சிறப்புரையாற்றிச் சிதையாத தமிழ் உள்ளங்களில் சிந்தனையைத் தட்டி எழுப்பித் தேசிய உணர்வினை வளர்த்தார்.

மதுரை மாவட்டத்தில் வத்தலக்குண்டு என்ற வளமான கிராமத்தில் விளைந்தவர் சுப்பிரமணிய சிவா என்ற சீலர். அவர் தந்தை கிராம முன்சீப்பாக அரசு அலுவல் பார்த்திருந்தும் அவர் மனத்தில் முகிழ்ந்தது நாட்டுப்பற்று. இளமையிலேயே இன்ன லென்று எண்ணி இல்லறத்தை ஏற்காமல் துறவறத்தை மணந் தார். அவர் பெற்ற பிள்ளைகள் பேராய்ந்த தமிழறிவும், ஆராய்ந்த அங்கில ஞானமும் ஆகும். நாட்டுப் பற்றினைத் தம் உள்ளத்தில் நாட்டி வைத்து புரட்சியென்னும் வளநீரை ஊற்றிப் புத்துணர்ச்சி பல பெற்றார். ''அஞ்சுவது அஞ்சுவதுமட்டும் அறிவு, எஞ்சியது அஞ்சாது நின்று துஞ்சா நெஞ்சம் கொள்வது செறிவு''

என்று கொண்டிருந்தார். நினைத்ததை நினைத்தபடி நிறை வேற்றும் நல்லாற்றல் நிறைந்தவர். தனிமனிதன் படையாகத் தரையினில் வலம் வந்து சுதேசிப் பிரச்சாரம் செய்து வந்தார். 1907-ஆம் ஆண்டு நெல்லையில் வளர்ந்திட்ட தேசாபிமான சங் கத்தார், அவரைத் தேர்ந்தெடுத்துத் தீப்பொறி பறக்கும் தீவிரச் சொல்மழையில் மக்கள் பலரையும் நனைய வைத்தனர். தூத்துக் குடியிலும் சிவாவின் சீற்ற மொழிகள் சிதறிச் சென்று ''தூக்கம் கொண்டிருந்த நாட்டு மக்களைத் துடிப்புடன் விழிக்கச் செய்தன. சிவாவின் சீரிய உரைகளைச் செவிமடுத்த சிதம்பரனார் மனம் மகிழ்ந்து அவர் மீது காதல் கொண்டு அருமை நட்புத் துணை யாக்கித் தன்னுடன் தக்க வைத்துக் கொண்டார். இருவரும் சேர்ந்தால் வீசாதோ நாட்டுப்பற்று என்ற புயல்காற்று! சிவா வின் பேச்சில் கனல் பறக்கும்; சிதம்பரனாரின் சொற்பொழிவு சூறைக்காற்று போல சுழன்று சுழன்று வரும். இதன் விளைவால் சிந்தனை சீரான செந்தமிழ் நாட்டு மக்கள் மனத்தில் நாட்டுப் பற்று நன்குச் சுடர் விட்டு அணையா நந்தா விளக்காக ஒளிவீச லாயிற்று,

நாங்குநேரி என்னும் ஊரில் நலமுடன் வாழ்ந்து நினைத் தாலே இனிக்கும் வண்ணம் சிதம்பரனாரின் சிந்தனையில் புகுந்து நின்ற குருநாத ஐயர் என்ற தலைமைக் காவல்காரரும் தாய் நாட்டுப் பற்றுக்காகச் சேவை செய்ய நாவாய்த் தொழிலில் நல்ல பணம் சேர்த்திட வருமான வழிகளை வளர்த்தார்.

சிதம்பரனார் செய்த, மேலே குறிப்பிட்டுள்ள அத்தனை செயல்களும் தேச ஆட்சியையே திருப்பிடச் செய்யும் மாயச் செயலென மதித்துத் தூத்துக்குடியில் உறைந்த வெள்ளையர்கள் மதிமயக்கம் கொண்டு, எப்படி இவரைத் தடுப்பது? இவரதுதீவிர சிந்தனையின் இடுப்பு ஒடிப்பது எப்படி? என்றெல்லாம் பெரு மந்திர ஆலோசனை செய்தனர்.

## கோரல் மில்லின் கோணநிலை

''கூலி மிகக்கேட்பான்; கொண்டதெலாம் தான் தருவான். வேலைகளைச் செய்துகொண்டே வேடிக்கை காட்டிடுவான்'' எனப் பாடிப்போற்றுமளவிற்கு, தற்போது ஹார்விமில் என அழைக்கப்படும் தூத்துக்குடி கோரல் மில்லில் தொழிலாளர்கள் செயல்பட்டு வந்தனர். நாட்டின் நடப்பிற்கேற்ப நிலையில்லா விலைவாசிக்கு ஒப்பக்கூலி விகிதம் உயர்த்தப்பட வேண்டும் என்ற கோஷம் எழுப்பப்பட்டது. ஆலை முதலாளிகள் அசைந்து கொடுத்ததாக ஆவணங்கள் அமைந்ததில்லை. கேட்பது கொடுக் கப்படாத காரணத்தினால் பாட்டாளிகள் போர்தொடுக்க

வேலைநிறுத்தம் பிறந்தது. காலையில் வேலை செய்து மாலையில் காசு பெற்று மண்பானையில் அரிசியிட்டு உலைவைத்து அரைவயிற்றுக் கஞ்சி அனுதினமும் கொண்டு பசியாறிய பாமரர்கள் வேலைநிறுத்தம் காரணமாகப் பட்டினித் தோட்டத்தின் பசலைகளாயினர். உறுதிகொண்ட நெஞ்சம் உலைந்து போகாதிருக்க சிதம்பரனார் சில வழக்கறிஞர்களின் துணையோடு பணம் சேர்த்து அதன் மூலம் தொழிலாளர் குடும்பங்கள் பட்டினித் தீயில் கருகி விடாமல் காப்பாற்றினார். ஈராயிரம் தொழிலாளர்களில் ஓராயிரம் பேருக்கு வேறுவேறு வேலை கொடுத்து அவர்கள் மரணப் பள்ளத்தில் விழுந்துவிடாமல் காப்பாற்றினார்.

வேலை நிறுத்தம் நடந்த அத்தனை நாட்களிலும் வீர உரை வழங்கிக் கோரிக்கை நிறைவேறும்வரை கொண்ட கொள்கையிலிருந்து குறையக்கூடாது என்று கூறிநின்றார். ஊக்கமூட்டும் அவரது பேச்சு உள்ளத்தின் உறுதியினையும் கொள்கைக்கு உரத்தினையும் தொழிலாளர்கள் பெறத் தூண்டுகோலாய் அமைந்தது. இக்காரணம் பற்றி ஆலை அதிபர்கள் அவர்மீது ஆற்றொணாச் சீற்றம் கொண்டனர். இவர் முதலாளிகளைக் கெடுக்க வேண்டும் என்ற கெட்ட எண்ணத்தோடு வேலை நிறுத்தம் செய்யத் தூண்டினார் என்றும் சிதம்பரனாரின் செம்மை உரையால் ஊரில் கலகம் ஏற்படும் என்றும் அவர்கள் கூறிக் குற்றவியல் நடுவர் முன்பு வழக்குத் தொடுத்தனர். அந்நடுவரோ அத்தொழிலாளர் தலைவரான சிதம்பரனாரை அழைத்துவரச் செய்து அவரது சொற்பொழிவுகளால் நகரில் அமைதி குறையுமெனத் தாம் கருதுவதாகக் கூறி, இனி எந்த மேடையிலும் சிதம்பரனாரின் குரல் ஒலிக்கக் கூடாது என உத்தரவிட்டார். அந்த எச்சரிக்கையைத் துச்சமென மதித்து ''அஞ்சுதுவ யாதொன்றுமில்லை; இனி அஞ்ச வருவதுமில்லை'' என்று நெஞ்சுறுதியுடன் தொழிலாளர் கூட்டங்களில் தொடர்ந்து பேசி வந்தார். கோரல் மில்லின் வேலைநிறுத்தச் செய்தி கூடல் நகரையும் கூடிநிற்க அந்நகர்ப் பஞ்சாலைத் தொழிலாளர்களும் வேலைநிறுத்தத்திற்கு மாலையிட்டனர். ஏழு நாட்கள் இந்நிலை தொடர ஆலையின் சொந்தக்காரர்கள் அணைத்துப் போவதைத் தவிர அடுத்தவழி அறியா நிலையில் கூலியை உயர்த்த அறிவித்தனர், அந்த வெற்றியின் முடிவில் வேலை நிறுத்தம் விடப்பட்டு ஆலையின் சங்கு மீண்டும் ஒலித்தது.

வேலை நிறுத்தத்தில் கேட்ட வீரமுழக்கங்கள், விளைந்த உணர்ச்சி ஓட்டங்கள், பொலிந்த ஒற்றுமைக் கூட்டங்கள் வெள்ளையர்களைப் பயத்தால் வெளிறச் செய்தது. ஆணின்மும்

பெண்ணினமும் அஞ்சி இராப் பொழுதினைத் துறைமுகம் சென்று கப்பலிலேயே கழித்து வந்தார்களாம். வேலை நிறுத் தத்தின் வெற்றி விளைவாக வீரமனிதர் சிதம்பரனார் என்பதை வெள்ளையர் உணர்ந்தனர். அவர் கூறும் சொல்லாலே சுதேசியக் கிளர்ச்சி மக்கள் மனத்தில் கொழுந்துவிட்டு எரிவதைக் கண்டுகொண்ட அதிகாரிகள் அச்சம் கொண்டனர். அம்மாவட்ட ஆட்சியர் அவ்வூர் பெரிய மனிதர்களை எல்லாம் அழைத்து, கலகம் நிகழாமல் தடுக்கவும் மக்கள் அரசை அன் போடு நேசிக்கவும் வழிகாண ஆலோசனை நடத்தினார். தூத்துக்குடியில் அதிகமான காவல் படையினர் வைக்கவேண்டும் எனக்கூறிய கூற்றைப் பெரும்பாலோர் எதிர்ப்பினும் வழக்கறி ஞர் அரங்கசாமி ஐயங்கார் என்பவர் அரசுப் பற்றுள்ளம் கொண்டு கருத்தை ஆதரித்தார். தனிக் காவற்படை தருவிக்கா விடில் சிதம்பரனாரின் வீரமிக்க சொற்பொழிவுகளால் ஊரே அழிந்துவிடும் என அலறினார். இவரது செய்கையை ஊரார் வெறுத்தனர். அவருக்குச் சவரம் செய்யவந்த தொழிலாளி கூடப் பாதிவேலையில் இதைப்பற்றிக் கேட்க, ஐயங்கார் தனக் குரிய அகந்தையுடன் பதிலளிக்க, அரைச் சவரத்தோடு தொழி லாளி கத்தியை மடக்கிப் பெட்டியில் வைத்துக்கொண்டு கடுகி நடந்திட்டார். அதைப்பார்த்த மற்றையோரும் அவருக்கு உதவ முன்வரவில்லை. மாவட்ட ஆட்சியர் ஆதரவு தனக்கு இருக்கின் றது, என்ற மமதையுடன் அவரை அணுக, கலெக்டரோ கை விரித்துவிட்டார். வேறுவழியின்றிப் புகைவண்டி ஏறி நெல்லைக் குச் சென்று மீதிவேலையை முடித்து முழுமையான முகத்தோடு திரும்பி வந்தார், அரங்கசாமி.

### தூத்துக்குடியில் ஜனசங்கம்

சென்னையில் தோன்றிய ஜனசங்கம் பின்னே நாட்டுப் பற்றினை விளைவித்து மக்கள் உளமெல்லாம் சுதேசி உணர்வு ஊன்றிப் பின்னே வருகின்ற சுகத்திற்காகத் தன்னை இழக்கத் தயாரான மக்கள் பலரின் கூட்டமாகத் திகழ்ந்தது. சென்னை ஜனசங்கத்தின் பலமான கிளையெனப் பகரத் தக்கதாகத் தூத் துக்குடியின் சுதேசிகள் ஏற்றம்பெற ஒன்றமைத்தார் சிதம்பர னார். மனவேறுபாடுகளை ஒன்றாக்கி சாமாதானமாகத் தக்கன வற்றையெல்லாம் பஞ்சாயத்து மூலம் தீர்த்திட வழி கோலியது இந்தச் சங்கம். ஆங்கே சின்னச்சின்ன இழைப்பின்னிவரும் சித்திரக் கைத்தொழில் பற்றிக்கடிதினில் அமைத்திட விடியலா னது இச்சங்கம்.

மெய்வருத்தம் பாராது மேனிதனைத் தேனீயாக ஓடிவர வைத்து ஈட்டிட்ட தேனாம் செல்வமதை மாற்றான் அபகரித்துக்

கொள்ளாமல் தடுக்க தாங்களே ஏற்படுத்திய ஊர்க்காவல்படை உதயமானது. இச்சங்கத்தின் ஆதாயத்திலே இவ்வாறு சீரும் சிறப்பும் கொண்டு செம்மையுடன் ஜனசங்கம் செழித்துவளரச் சிதம்பரனார் சிறுதொண்டு செய்தார். வெள்ளையர் வணிகர் தந்திட்ட வளமான மயக்கத்தால் தம்மை இழந்த வணிகர் சிலரும் பித்தம் தெளிந்த பின்பு பிள்ளை அவர்களின் பெரும் கப்பல் தொழில் பேணி உயர்த்தும் ஏணியாயினர். "இப்படை தோற்கின் எப்படை வெல்லும்" என்ற நிலை உருவாகியதைக் கண்டு வெள்ளையர் வெலவெலத்தனர். "நிச்சயமாய் இவன் நினைத்ததை முடிப்பான். விரைவினில் இவனை வெளிவர விடாது (சிறையுள் இட்டு) கரையச் செய்து களிப்போம்." எனச் சூழ்ச்சியில் பலரும் துணிந்தனர். அதன்பின் சிதம்பரனாரின் சிறகொடிக்கத் திட்டம் பல தீட்டினர்.

## தூத்துக்குடியில் சுதந்திர முழக்கம்

சுதந்திர வேகத்தைக் கட்டுப்படுத்த சூதுகள் வாதுகள் செயல்பட்டன. பிரேக்கன் என்பவன் உதவி மாவட்ட ஆளுந ராக (சப்-கலெக்டராக), ஆங்கில ஏகாதிபத்தியத்தின் பிரதிநிதி யாக ஆணவம் கொண்டு அமைந்திருந்தான். அவன், சிதம்பர னாரின் பேச்சும் சிவாவின் உரையும் மக்கள் சித்தத்தைத் தேசிய வழியில் இழுத்துச் செல்கின்றன எனக் கருதி இவ்விருவரும் இனித்தெருக்கள் சந்திக்கும் இடங்களிலும் மக்கள் கூடும் பொது இடங்களிலும் பேசலாகாது என்று கட்டளை பிறப்பித்தனன். அந்தக் கட்டளையை ஏந்திவந்த நீர்மை உலரும் முன்பே அழித் திடத்துடித்தெழுந்தது தேசியக் கரங்கள் பல. "சந்தியிலே சந்திப்போம். பொது இடங்களிலே பேருரைகள் பொழிவோம். நேற்று முழங்கிய இடத்தில் இன்றும் முழக்கம் உண்டு" எனப் பறை அறிவித்தது. நெல்லை ஜமீன் வழக்கு எதிரிகளில் ஒருவ ரான பத்மனாப ஐயங்காரின் பிரசங்கம் ஒரு சந்து முனையிலே; சிந்தனைப் பொறி பறக்கும் சுதேசியக் கருவூலம் சிதம்பரனாரின் சீருரை மறுமுனையில்; செந்நா உடைய சுதந்திரப்பேச்சு ஒலித் திடும் சிவம் தரும சங்கநெசவுச் சாலையிலே; பெருமைச்சுதேசியம் பேசுவோர் என்றும் ஆங்காங்குடையோர் அவசியம் வந்து அவருரை கேட்பீர் என்றும் விளம்பரம் பற்பல செல்லுகின்ற வழியெல்லாம் தமிழ் திகழ்கின்ற தெருவெல்லாம் பரப்பினார், வந்தே மாதரம் பிள்ளை என வானுயரப் பேர் பெற்ற பரலி. சு. சண்முகசுந்தரம் என்ற உத்தமர். இதனையெல்லாம் பார்த் திருந்த வெள்ளையர் ஆழியிற் கிடந்த அருங்கலம் நண்ணி, பயந்து அவண் சென்று படிந்தனர். நாளும் வெளியில் வண்டியில்

செல்கையில் வந்தே மாதரம் என்ற வானினை எட்டிடும் ஒலி நம்மை அண்டி அடிப்பதாக அலறி அழுதனர். உடனே தந்தி பல பறந்தது ஆட்சியரை நோக்கி.

நெல்லை மாவட்ட ஆட்சியராக அன்றிருந்த விஞ்சுதுரை தூத்துக்குடிக்கு வந்தான். சிதம்பரனாரை அழைத்துப் பிரேக்க் னோடும் பேசி நிற்கையில், விஞ்சுதுரை சிதம்பனாரை நோக்கி ''ஆட்சியருக்கு எதிராக சூழ்ச்சி பல புரிகின்ற சிதம்பரனாரே! காட்சியைப் பார்த்துக்கொண்டு உங்கள் விளம்பரங்களைக் கண்டுகொண்டு சும்மா இருந்திடோம் யாம்'' எனக்குற்றம் சாட்டினன். சிதம்பரனாரும் பொறுமையுடன் விஞ்சுதுரையை நோக்கி ''முந்திய ஆர்டரைவிட இந்த விளம்பரம் எந்த வகை யில் இகழ்ந்தது என்று இயம்ப இயலுமோ'' என்றே கேட்டனர். டெப்டி சூப்பிரண்டெண்டண்ட் அங்கு வந்திருந்தான். அவன் ''சிதம்பரனார் சொல்வதைக்கேட்டுக்கொண்டிருந்தால் நாட்டில் குழப்பம்தான் நிறையும்'' என விவரித்து நேற்றைய உத்தரவினை எடுத்துக் கூறி இன்றும் திரும்ப, இங்கும் அங்கும் பல இடமும் பேச்சொலி கேட்கப்படுகிறது என்று குற்ற ஓலை வாசித்தான். வாதிடத் தெரிதல் ஏதிலார்க்கு இல்லையெனினும் வழக்கறிஞர் ஓதியுணர்ந்த கலை கொண்டவர் அன்றோ! சிதம்பரனாரும் சிந்தனையைச் சீர்தூக்கிக் காட்டி, ''தரும சாலை திகழும் இடம் தனித்தொரு கட்டிடமன்றோ! தனி ஒருவன் உரிமை உள்ள சொந்த வீட்டினுள் காவல்கரம் வந்தது சரியோ! காவல் நுழைந்திடக் கலகமே பிறந்திடும். பொது இடத்தில் பேசுதல் ஒருகால் சட்டத்தின் பிடிப்புக்கு உட்பட்டதாக இருக்கலாம். என் சொந்த வீட்டில் நான் பேசிநின்றால் அதனைக் குற்றமெனக் கூறுதல் முறையோ'' என வினாக்களை விடுத்தார். தெளிவான ஆராய்ச்சி தெரியாத வண்ணம் ஒரே திசைநோக்கி ஓடுகின்ற குதிரையினைப்போல ஒரு வழிப் பாதையிலே தன் கருத்தைத் திருத்துகின்ற காவல்துறைத் துணைத் தலைமை அதிகாரியான டிப்டி சூப்பிரண்டெண்டண்ட், முரட்டுத்தனம் பூண்டிவர, ''நீ சொல்லிய இடத்தில் தோன்றிப் படையொடு நடப்பதைப் பார்ப் போம் நாமே'' என்று கொக்கரித்தான். ''கொக்கென்று நினைத்தனையோ கொங்கணவா'' என்ற பத்தினிப் பெண்கள் பவனிவரும் நாளிலே நாங்கள் சேலைகட்டிய பேதைப் பெண் களல்ல' நடப்பதை நன்றாகவே நோக்குக'' என்றே பதிலுரைத் தார் சிதம்பரனார். இத்தனையும் கேட்டுக்கொண்டிருந்த விஞ்சுதுரை விவரம் தெரிந்த பின்பு சட்டத்தின் கோட்பாட்டைச் சடுதியில் உணர்ந்துநின்று, ''ஒருவனின் சொந்த இடத்தினில் நுழைந்து செயல்பட எனக்கு எந்த உரிமையும் இல்லை'' எனக்

காவல்துறை மேலாளரைப் பார்த்து ,"கனன்று அங்குச் செல்ல வேண்டாம்" எனக் கட்டளையிட்டான்; எனினும் சிதம்பர னாரை நோக்கி "கடற்கரையிலே கூட்டம் நடத்துவது ஒன்றை மட்டுமாவது விட்டுவிடு" என வேண்டினான். இந்திய மண்ணின் தொன்மை வாய்ந்த சுதந்திர மனிதர் சிதம்பர னார் "இன்று அவன் பேசுவேன்" என்று உறுதியாய் மொழிந் திட, நன்று என நவின்று பிரேக்கனோடு விஞ்சுதுரையும் நடந் தான்.

அன்று கடற்கரையில் ஆயிரம் தாரகைகளின் கூட்டம். கண்ணில் தெரிந்த தலைகள் எண்ணில் அடங்கா. காவல் துறை யினரோ கரையோரம் நெருங்கிக் கரைமேல் ஏறாது திரும்ப நிற்கின்ற அலைகள் கூட்டம்போல மக்கள் வெள்ளத்தைச் சூழ்ந்து நின்றனர். ஒரு கையில் தடிகள், ஒரு கையில் வெடிகள் ஏந்தி வட்டமாக வளைந்து நின்றிருந்தனர். முதலில் பேசிடப் பத்மநாபன் எழுந்து நின்றிட மக்களின் கரகோஷம் மகேசன் காதுக்கே எட்டியது. சித்தத்தினைக் காட்டி அங்குச்சிறு யுத்தத் தினை உருவாக்கிச் சுதேசிய உணர்வாம் இரத்தத்தைப் பரிசோ திக்கத் தயார்நிலையில் காத்திருந்தனர் காவலர்கள். அதனை உணர்ந்திருந்த சிதம்பரனார் உடனெழுந்து ஒன்றாய் நிறைந் திருந்த ஓராயிர இதயங்களைத் தொட்டு, "காவலர் காரணத்திற் காகக் காத்திருக்கின்றனர். அமைதி ஒன்றுதான் நமக்கும் அவருக் கும் இடையே உள்ள திரை—இரும்புத்திரை—என விரும்பும் வகையில் வேகம்கொண்டு விளம்ப, அங்கே புத்தனது ஆட்சி நிலவியது; போதிமரத்தின் சாயல் படிந்தது. அனைவரும் பேசிய பேச்சுக்களை ஆர்வத்தோடு காதுகளால் அணைத்து சுதேசிய ஆர்வத்தை மென்மேலும் வளர்த்தனர். எல்லோரும் பேசி முடிந்த பின்பு சிதம்பரனார் எழுந்துநின்று பேச்சைத் தொடங்கும் முன்பே பாதி அயர்ந்திருந்த காவல் பைரவர் கண்சொடுக்கி விழித்தனர். சிதம்பரனாரோ, "கடலோரம் நின்று தேசிய உரையொன்று சொன்னால் காவல் கரம் வந்து நீளும். சட்டம் என்னை அணைத்திடச் சேரும். எனவே விதித்திட்ட உத்திரவை மிதித்தவனாக நான் மாறேன். பதைத்திட்ட காவலர் பதறிடும் வண்ணமே தருமசாலை செல்வோம். நேற்றுப் பேசிய நேசன் சிவாவும் நானும் சுதேசியம் சிற்சில சொல்லுவோம். வருக இதே வழி" என எட்டி நடந்து சென்றார். கட்டுக்கடங்கிய கூட்டம் அவர் காட்டிய பாதையில் செல்லக் காவல்துறையினரோ நீட்டிய தங்கள் கரம் மடக்கித் தம்வழி விலக, அன்றைய கூட்டம் தரும சாலையில் அரங்கம் கண்டது.

''அடுத்த நாள் தூத்துக்குடி பள்ளிவாசலைச் சேர்ந்த வண்டிப்பேட்டையில் சிதம்பரனாரும் சீரிய சிவாவும் விதேசியம் முறிவுறப் பிரசங்கம் செய்வர்'' என உலகநாதப்பிள்ளை என்பவர் விளம்பரம் எங்கும் பரப்பினார். விளம்பரத்தைக் கண்ட விஞ்சுதுரை இந்த வீரமுழக்கத்தைத் தடுத்திட இயலாது தனது உத்திரவையே ரத்து செய்துவிட்டான். மக்களை ஓரளவு தன்பக்கம் கவர்ந்திட விஞ்சுதுரையும் தன்னை வந்து சந்திக்கு மாறு பலருக்கு மடல் அனுப்பினன். அந்த மடலுக்கு மதிப்புக் கொடுத்துச் சிதம்பரனாரும் சென்று அவனைக் கண்டு கலந்துரை யாற்றினார். விளம்பரம் தந்தபடியும் விரும்பிய வண்ணமும் சிவாவின் சிந்தனைப் பொறிகள் சுதேசியம் வளர்த்திடும் உரமாக மக்கள் பலரின் மனத்தினைச் சார்ந்தன. உத்தரவு ஒளிந்து ஓடி விட்டதால் ஊர்ப் பொது இடமெல்லாம் சிவத்தின் சொற் பொழிவு மழையெனப் பெய்து கொண்டிருந்தது. ஊராரெல்லாம் உணர்ந்து கூடிட எங்கும் சுதேசிமணம் கமழ்ந்தது. சுதேசியக் கப்பல் சுகமாக நடந்தது.

## விபினர் விடுதலை விமரிசை

வங்காளம் வழங்கிய தேசிய வீரர்களின் வரிசையில் முதல் வராக வாழ்ந்தவர் விபின் சந்திர பாலர். சொல்லுக்கு உயிரூட்டி மாந்தர்தம் உள்ளத்தில் நாட்டு உணர்வும் பூரணத்துவம் பெற்றிடச் சொற்பொழிவு ஆற்றுவதில் அவரொரு சிந்தனைச் சிற்பி. அவ்வமயம் அரவிந்த கோஷ் என்ற காங்கிரஸ் தீவிரக் கட்சித் தலைவர் மீது சதிவழக்கு நடைபெற்றது. ''சாட்சி இல்லாமல் வழக்கில்லை. சண்டை இல்லாமல் கச்சேரி இல்லை'' என்று சாற்றும் மொழிக்கு ஒப்பாக அரசுத்தரப்பில் சாட்சி சொல்ல அவர் அழைக்கப் பெற்றார். அழைப்பினைத் திருப்பி அனுப்பிச் சாட்சி சொல்ல மறுத்தார். அது குற்றயியல் சட்டப் படி நீதிமன்ற அவமதிப்பாகக் கருதப்பட்டது. எனவே ஆறுமாத சிறைத் தண்டனை அடைந்தார். 1908-ஆம் ஆண்டு மார்ச் திங்கள் ஒன்பதாம் நாள். அந்த முன்னணித் தலைவனுக்கு விடுதலை. அவனுக்குப் பின்னணியாய் இருந்தது தேசியப் போராட்டம் என்ற காரணத்தினால் அந்நாளைத் திருநெல் வேலி மக்கள் திருநாளாகக் கொண்டாட முடிவு செய்தனர். இந்தச் செய்தி அரசு அதிகாரிகள் செவியினை எட்டிட அவர்கள் கவலை கொண்டனர். விபினரின் படத்தினைப் பட்டணப் பிரவேசம் செய்ய வேண்டும் என்றும், அன்று தரும வைத்திய சாலை ஒன்றும், தருமப் புத்தகசாலை ஒன்றும், நல்ல கல்வி தன்னை நல்கிடும் பள்ளி ஒன்றும், சுயராஜ்யம் என்னும் பத்திரிகை ஒன்றை வெளியிடுவது என்றும் உறுதிகள் ஏற்கப்பட்டிருந்தன.

தூத்துக்குடியில் அந்நாளில் ஊர்வலமோ பொதுக்கூட்டமோ நடத்தக் கூடாது எனத் தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. குற்றயியல் நடுவர், சிதம்பரம்பிள்ளையை நேரில் வரவழைத்து, விபினர் விடுதலை விழாக் கொண்டாட்டத்தில் கலந்துகொள்ளக் கூடாதென எச்சரித்தார். அந்த நடுவரை அவ்வாறு எழுத்து மூலம் ஓர் உத்தரவு பிறப்பிக்க வேண்டுமெனச் சிதம்பரனார் கேட்டுக்கொண்டபோது அந்த நடுவர் மறுத்துவிட்டார். மேலும் "சுயராஜ்யம்" பரலி சு. சண்முகசுந்தரம் பிள்ளையை ஆசிரியராகக் கொண்டு விபின சந்திர பாலர் விடுதலை தினத்தன்று வெளிவர இருந்த பத்திரிகை சர்க்கார் தடையால் வெளிவரவே இல்லை. அன்று பத்திரிகை துவங்க இருக்கின்ற நேரத்தில் "சுயராஜ்யக் கொடியைத் தூக்குவோம்" என்றும், "பாலர் மீள்தினம் பாடும் இத்தினம் சீலர் யாவரும் சேர்வோம் அத்தினம்" என்றும் முழக்கமிட்டார். அந்தவிவரம் பற்றிச் சங்கத்தில் அறிவிக்க, சங்கத்தின் உறுப்பினர்கள் அனைவரும் ஊக்கம்தர முன்வந்தனர். நன்மை தீமைக்கு நாளும் உதவும் தன்மை கொண்ட பண்டித சகோதரர் மற்றும் பலரின் செயலைப் பார்த்து மகிழ்ந்த சிதம்பரனார் தூத்துக்குடியில் எழுப்பப்பட்ட முழக்கங்கள், நாடு சுய அரசாக நாளும் துணை செய்யும் என்று அறிவித்தார். இந்த முழக்கத்தினைச் சரியாகப் புரிந்துகொள்ளாத வெள்ளையர்கள் மேலதிகாரிகளிடத்தில் மேலும் அடக்குமுறை செய்ய வேண்டும் என்று செய்தி சொல்லி அனுப்பினர். இதையெல்லாம் கண்டு அஞ்சாத நெஞ்சமுடைய சிதம்பரனார் "உரைத்த தினத்து எம் உயிரெல்லாம் போக்கினும் உரைத்த கொடியினை உயர்த்துவர்" என்றே அறிவித்தார். வெள்ளையரோ என்ன செய்து இவரை அழிப்பது? 'பிரசங்க சமயம் பெரும் சத்தமானால் விரைவினில் சுட்டு அவர் மேனியைத் தொலைக்கலாம் என்று யாம் நினைத்தோம். எந்த வழியும் தராது தந்தம்போன்ற உரமோடு அவர் நின்றார். எனப் பற்பலப் பேசி அந்நகர ஆளுநர் ஆலோசனை செய்திட்டபோது கலெக்டர் ஆஷ்துரை சிதம்பரனாரைக் கூப்பிட்டு அனுப்பினார். உயிரனைய நண்பர்கள் ஒருங்கிணைந்து இது நின் உயிரினை நீக்குதற்கு உபாயமே; நீ சென்று காணற்க' எனத்தடுத்திட்டனர். சிதம்பரனாரோ "ஊழ்வினை வந்து கூறி உலகமே கூடினும் உதறிட முடியுமா? உயிரின் நீக்கமும் ஊழ்வினை வந்திடின் நம்மால் தடுக்கவும் நண்ணுமோ? செல்லாது சும்மா இருந்திடின் சுகமோ?" எனத் தமக்கு உரிய பாணியில் பதிலுரைத்து திருவைகுண்ட வழக்கறிஞர் டி. ஆர். மகாதேவரை உடன் அழைத்துச் சென்றார். ஆஷ்துரையைக் கண்டதும் அவனோ 'அழகிய மில்லினை மோசம் செய்தது ஏன்?' என்று வினவ, சிதம்பரனார்

நல்ல பதில் கொடுத்தார். ''கொடுமை பல செய்து கூலியாட் களை இன்றோ நாளையோ என்று மடியும் விதத்தில் வருத்தி வந்ததால்தான். அவர்கள் கேட்டுள்ளது அடிப்படைத் தேவையே'' என்று அறிவித்தார். தன்னிடம் உள்ள படைபலத் தைக் காட்டிப் பயமுறுத்தச் சிதம்பரனாரோ அதைச் சற்றும் மதிக்காமல் வெளியேறி வந்துவிட்டார். படையின் செருக்கைப் பகர்ந்தபோது அந்தப் பரங்கிக்காரனைப் பார்த்து படையிலா ரிடத்து இதனைப் பகர்தல் நன்று என்றார்.

முன்பு குறிப்பிட்டது போல வேலை நிறுத்தம் நின்றாலும் அது நின்ற விதத்தை மீண்டும் நினைவு கூறுகிறார். எனினும் தொழிலாளர் வேலை நிறுத்தத்தால் துவண்டுபோன துரை கள் நடுக்கமுற வெள்ளையனுக்கே பயம் பிடித்தது. வேலை நிறுத்தத்தின் விளைவால் எங்கே தேசிய உணர்வு அதிகம்விளைந் திடுமோ என்று வெகுண்டனர். எனவே மில்லின் ஏஜெண்டு மிகவும் கெஞ்சி, மில் ஆபீஸ் டைரக்டர்களில் ஒருவரும் மில் ஆபீஸ் பிள்ளை என்றும் வழங்கப்படுபவருமான சுப்பிரமணிய பிள்ளை என்பவரைத் தூது அனுப்பினர். தொழிலாளர் ஊதி யத்தை அரைப்பங்கு அதிகமாகத் தருவதாகவும், ஞாயிறுதோ றும் விடுமுறை அளிப்பதாகவும், மற்ற நாட்களில் வெளியே போய்ச்சாப்பிட்டு வருவதற்குப்போதிய நேரமும், மற்றும் நடுவில் அவசரம் நேரின் லீவு கூலியின்றிக் கொடுப்பதாகவும் சொன் னார்கள்.

தூதின் மூலமாகத் தொழிலாளர் வேலை நிறுத்தத்தை முறித்து விட முயன்று விஞ்சுதுரையும் வழக்கறிஞர் சிலரும் சிதம் பரானாரைச் சந்தித்து உரையாடினர். இதனிடையே நாவாய்த் தொழில் சம்பந்தமாகப் பம்பாய் சென்றிட வேண்டும் என்று குரு சாமி ஐயர் குறிப்பு அனுப்பி வைத்தார். தூது பற்றிய விவரங் களைக் குருநாதன் மற்றும் சிலரிடம் கலந்து ஆலோசிக்க, ஒரு நாளும் அதற்கு உடன்படக் கூடாது என்றே முடிவெடுத்தனர். அந்த முடிவை குருசாமி ஐயரிடம் தெரிவிக்க அவர் கோபமுற்று ஆங்கிலேயர் அறைந்ததைச் செய்யவில்லையானால் நமது கப்பல் தொழிலுக்கு நாசம் நேசமாகும் என்று எடுத்துரைத்தனர். சற் றும் அசையாத சிதம்பரனாரும் ''ஈசன் செயலை எவரே தடுப் பர்; நாசம் வந்திடின நானோ நீரோ தடுக்க இயலுமோ;'' நான் கப்பல் தொழிலிலிருந்து, கம்பெனியிலிருந்து ராஜிநாமா கொடுக் கத் தயார். அதை ஏற்றுக்கொள்வதும் ஏற்றுக்கொள்ளாமலிருப் பதும் எனக்கு எந்த ஒரு தீமையையும் தராது'' எனத் தடுத்து மொழிந்தார். உடனே நாவாய்ச் சங்கத்தின் கூட்டம் ஒன்று கூட்டிச் சிதம்பரனார் காற்றுப்படாமலே கப்பலைக் காப்பதே

கடன் எனப் பேசினர். ஆனால் அருணாசலம் பிள்ளை முதலியார் ''அன்னவன் நீங்கிடின் அழிந்திடும் கப்பல். பின்னர் நம் பணமும் பெயரும் அழிந்திடும்'' என உரை செய்தனர். மற்றையோர் முடிவினில் சிதம்பரனார் அரசியலை விட்டுவிட்டு அமைதியாக இருப்பதே தேவை எனத் தெரிவிக்கும் செய்தியினை விரைந்து அனுப்பினார். இம்முடிவு கண்டு சிதம்பரனார் மறுத்து விட்டார். சுதந்திரப் போருக்குத் துணைபுரியவே கப்பல் கம்பெனியைத் தொடங்கினார் சிதம்பரனார். இதை ஆங்கிலேயர்கள் நன்கு அறிந்திருந்தனர். அதனாலேயே அவர்கள் கப்பல் கம்பெனியைக் கலைக்கப் பார்த்தனர். கலெக்டரின் எச்சரிக்கைக்கு அவர் சிறிதும் அஞ்சவில்லை. கம்பெனி நிர்வாகிகளின் கட்டளையையும் அவர் சற்றும் மதிக்கவில்லை.

ஏற்பாட்டின்படியே மார்ச் 9-ஆம் தேதியன்று விபின சந்திர பாலரின் விடுதலைத் திருநாள் சிறப்பாகத் திருநெல்வேலியில் நடைபெற்றது. போலீஸ் அதிகாரிகள் முன்னெச்சரிக்கையாக ஏற்பாடு செய்திருந்தனர். சிதம்பரனாரும் சிவாவும் தடையுத்தரவை மீறி ஊர்வலத்தில் கலந்துகொண்டனர். பொதுக் கூட்டத்திலும் பேசினர். இவ்விதம் வங்காளத்தையும் மிஞ்சி நின்றது திருநெல்வேலி. எங்கும் சுதந்திரப் பேச்சு! வந்தே மாதர முழக்கம்! வெள்ளையரையும் அதிகாரிகளையும் வெறுத்தனர். அந்நிய ஆடை அணிந்தவரைக் கண்டாலே கோபம கொண்டனர். திருநெல்வேலி முழுவதும் சிதம்பரனார் இட்டது சட்டமாயிற்று. அவர் சொல்லுக்கு மறுசொல் கிடையாது. அவரது ஆணை பிறந்தால் அனைவருமே செயல்படத் தயாராயிருந்தனர்.

## ஜாமீன் வழக்கு

சிதம்பரனாரின் தீவிரப்போக்கையும் பொது மக்களிடையே அவருக்கு இருந்த செல்வாக்கையும் கண்டு அதிகாரிகள் அச்சம் கொண்டனர். பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் நிலைபெற வேண்டுமானால் சிதம்பரனாரைச் சிறை செய்தே ஆக வேண்டும் என முடிவு செய்தனர். தூத்துக்குடியிலேயே கைது செய்வதென்றால் மக்கள் ஆத்திரம் கொண்டு கலகம் விளைவிப்பர் என்று அஞ்சிய கலெக்டர் வீஞ்சுதுரை நெல்லைக்கு வந்து தன்னைச் சந்திக்குமாறு சிதம்பரனாருக்கும் சிவாவுக்கும் ஆணை அனுப்பினார். அந்த உத்தரவுகள் கிடைப்பதற்கு முன்பாகவே தூத்துக்குடி பள்ளிவாசல் பேட்டையில் பேசுவதற்கு அறிக்கை விடப்பட்டிருந்தது. அந்த அறிக்கைப்படி அனேகர் பேட்டையில் வந்து குழுமியிருந்தனர். சிவம் செய்திகளைச் சொல்லக் கேட்டதும் கூட்டத்தினர் ஆரவாரம் செய்தனர். சிதம்பரனாரின் அரிய நண்பரான

கிராம முன்சீப்பு முத்துகிருஷ்ண நாயுடுவும் இவர்கள் பேசியதை எழுத வந்திருந்த இன்ஸ்பெக்டரும் கூடியிருந்த கூட்டமது. கலெக்டர் உத்தரவுப்படித் தாம் சென்று அவரைக் கண்டுப்பின் மறுநாள் வந்து ஆக வேண்டிய வேலைகள் யாவையும் செய்திடு வோம் என உறுதிமொழி தொடுத்தார். அம்மொழி கேட்டு அமைதியுற்றது ஆரவாரம் செய்த கூட்டம். உணர்ச்சி மேலிட விம்மி விம்மி அழுதனர் பலர். வெங்கொடுமையென, வீறுசினம் கொண்டவர் பலர். அவரையெல்லாம் அமைதிப்படுத்த விஞ்சு துரையின் உத்தரவை விளக்கிச் சொந்த நாட்டில் பிறர்க்கு அடிமை செய்வோர் பெற்ற பயன் இது என்று எடுத்தறிவித்தார். விஞ்சுதுரை விடுத்த உத்தரவு பிறந்ததற்கு அடிப்படை விபின் சந்திர பாலருக்கு விழா எடுத்தது. அதனால்தான் நல்லோர் மனத்தினை நஞ்சினைப் போன்று வருத்தியதாக உணர்ந்து அதன்வழி தீர்மானம் ஒன்றை ஆக்கி நிறைவேற்றினார் குழுவினில் சிதம்பரனார்.

1908-ஆம் ஆண்டு மார்ச் 9-ஆம் நாள் விஞ்சுதுரை முன்னர் நண்பர் சிவமோடும் பத்மனாபனோடும் கொக்கரைகுளத்தின் நீதி மன்றில் ஆஜரானார் சிதம்பரனார். நெல்லை வக்கீல் சாது கஜபதி பந்துலு, மகாதேவன், சிவராமகிருஷ்ணன் போன்றோர் சிதம்பரனாருக்காக வாதிட முன் வந்தனர். காலையில் வழக்கு விசாரணைக்கு வைக்கப்பட்டது. விஞ்சுதுரை சிதம்பரனாரைப் பார்த்து 'பாலர் விடுதலை விழாக் கொண்டாட்டத்தில் நீர் சேர்தல் நல்லதோ என்பதனை எண்ணிப்பார்த்து முடிவு செய்க!' என்று கூறிட, அதற்குச் சிதம்பரனாரோ 'எண்ணித்துணிக கருமம் என்பதுபோல நல்லதை நன்றாக எண்ணி நல்லதையே நான் இவண் செய்கிறேன்' என்று நவின்றார். வழக்கு மதியம் எடுத்துக்கொள்ளப்போவதாக அறிவிக்கப்பட்டது, வழக்கினை நடத்தி அந்த விரோதமான சூழ்நிலையில் வம்பினில் மாட்டாது இருப்பதற்காக ஈரேழு நாட்கள் ஈரங்கி தருமாறு வாக்கால் கேட்டு வகையான மனு ஒன்று அம்மன்றத்தில் வழங்கினார். விஞ்சுதுரை அதைக் கண்டதும் தூத்துக்குடி செல்லமாட்டேன் என உறுதி தந்தால் கேட்டதைத் தருகிறேன் எனக்கூற, வக்கீல் கள் சிதம்பரனாரை நோக்கினர். சிதம்பரனாரோ "நாவாய்ச் சங்கமும் மனைவியும் மக்களும் மற்றும்பலவும் நினையாது நான் இருப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட ஏற்பாட்டினை ஒக்கும் என்று அவனுரை ஏற்க மறுத்தார். எனவே வழக்கு மறுநாளே வாய்தா போடப்பட்டது. காலையில் திருமந்திரநகர் திரும்பிச் சென்றார்.

## வெள்ளையனுக்கு அபாயம்

சிதம்பரனார் திரும்பி வரும் காலத்தில் இரயில் நிலையத்தில் அவருக்குப் பெரும் வரவேற்பு காத்திருந்தது. சிலர் அனேகர்

சிதம்பரனாருக்காகக் காத்திருந்தனர். சிதம்பரனார் இரயிலினி ருந்து இறங்கிய காலத்துக் கூடியிருந்த பலரில் ஒருவரை அங்கிருந்த வெள்ளையன் அகங்கொண்டு தள்ளினான். அது கண்டு ஆத்திரமுற்ற கூட்டத்தினர் ஆரவாரம் எழுப்பினர். சிதம்பரனார் உடன்சென்ற இன்ஸ்பெக்டர் சாயிபு அவரை வேண்டிக் குழப்பம் ஏதும் நிகழாவண்ணம் அமைதி நிலை வழி காட்ட இரந்து கேட்டுக்கொண்டான். ''யாவரும் செல்க; உரந்தனை அடக்கலே உத்தமம்'' என்று சிதம்பரனார் கூறிவிட, வெள்ளையனும் அடங்கிச் சென்றிட, யார்மீதும் தப்பில்லை எனக்கூறிச் சிதம்பரனார் வெளி வந்தார். பற்பல நண்பர்கள் பாசமோடும் பரிவோடும் சூழ்ந்து வந்ததால் வண்டியில் ஏறித் தாம் மட்டும் செல்லுதல் நலமன்று என எண்ணிக் காலால் நடந்து கூட்டத்தோடு தம் வீட்டுக்கு வந்தார். ஆர்வத்துடன் கூடிய கூட்டமதை நோக்கி ''சுதேசியம் வளர்க்குக தொல்லுயிர் நீங்கினும்; இதே என் பிரார்த்தனை'' என்று உரைத்தார். 'விபின் சந்திர பாலரின் விடுதலைக் கொண்டாட்டம் பற்றி விமரிசையாய் விளக்குக' என மக்கள் வேண்டி நிற்க, சிதம்பர னாரோ 'விதிக்கப்பட்ட தடையுத்தரவு விலக்கப்பட்டதாயி னும் எதையும் பொறுமையுடன் செய்திடுக' எனப் பொறுத்து நின்று விளக்கங்கூறி மக்களை மகிழ்வித்தார்.

## பிள்ளைக் கனியமுது

ஆயிரம் பிறையைக் கண்டவனாயினும் தாயெனக் கூறிடத் தவழ்செல்வம் இல்லாதோன் தரணியில் தப்பிப் பிறந்துவிட்ட பேயெனக் கூறிடும் சாத்திரமன்றோ! "பிள்ளைக் கனி அமுது ஒன்றினைப் பெற்றிட வேண்டும்; கொள்ளை இன்பம் அதனிடம் கற்றிட வேண்டும்'' எனப் பாடியதுபோலப் பிள்ளைக் கனி அமுது பெற்றுத் தன்னைச் சற்றே மறந்து இன்பம் கண்டவர் சிதம்பரனார். அத்துணை ஆபத்தான அரசியல் சூழ்நிலையிலும், எதிரிகள் எப்படியாவது இவரைத் தொலைத்திட வேண்டுமென்று ஏற்பாடுகள் செய்கின்ற தருணத்திலும் வீட்டினில் நுழைந்த போது எதிர்வந்த முதல் மகன் கேட்ட கேள்வி ''நேற்று எனை வீட்டு நீ பிரிந்தனை அன்றோ! பேசேல்'' என்பதே! அந்தப் பாசம் அவர் மேனி சிலிர்த்திடச் செய்ய, ''பரிந்தெனைப் பொறுப்பாய் பாலா'' எனச் சிதம்பரனார் கூற, ''என்னை வெளியே எடுத்துச் செல்வதாக உறுதிதந்தால் உன்னிடம் வருவேன்'' என்றது குழந்தை. அன்பின் பெருக்கில் விளைந்த அமுதமன்றோ அது. அணைத்தெடுத்து ஆயிரம் முத்தங்கொடுத்து மனப்படிச் செய்வதாக வாக்குமளித்தார். சிறுகை அளாவிய

கூறின் இன்பம் பெற்ற பின்பு அந்தச் சிறுவிழியின் பார்வைக்குத் தப்பி வீட்டைவிட்டு வெளியே சென்றார். விபினச் சந்திர பாலரின் கருணைவடிவினைக் கண்டார். பின்பு இன்ஸ்பெக்டர் சாயிபுடன் விஞ்சுதுரைமுன் செல்ல, அவர் வழக்கினை மறுநாள் ஒத்திவைக்க, திரும்பவும் தூத்துக்குடி திரும்பினார். திரும்பவும் வீடு நுழையும்போது தன்னை ஏமாற்றிச் சென்றுவிட்ட தந்தையின் மீது கோபக்கனல் வீசிய அந்தக் குறுமகன், தந்தையைப் பார்த்துப் ''பொய்யன்'' என்றும் ''போபோ'' என்றும் கோபத்தால் சொன்னான். குழந்தையின் கணையினில் கூர்மை இருந்திடுமோ! எனவே அந்தக் கோபத்தைக் கொண்டாடி மனம் மகிழ்வு கொண்டு தாம் மாண்புற்றதாக எண்ணி மகிழ்ந்தார்.

## நீதி மன்றத்தில் வந்தே மாதரம்

ஒத்திவைக்கப்பட்ட வழக்கு விசாரணைக்கு எடுத்துக் கொள்ள வேண்டிய நாளில் பெரிய சுதேசியப்படை சூழச் சிதம்பரனார் நீதி மன்றத்திற்கு வந்துநின்றார். நீதி மன்றத்தைச் சுற்றிலும் வந்தே மாதரம் என்ற வார்த்தைகள் வானைத் தொட்டு எதிரொலித்தன. அந்தச் சொற்களை ''அழி, அழி'' என்று காவலரை நோக்கி விஞ்சுதுரையோ கத்திநின்றான். குற்றம் சாட்டுகின்ற ஆய்வாளன் தனது கையிலிருந்த குற்றப் பத்திரிகையில் உள்ள சட்டத்தின் ஓட்டைகளைச் சிதம்பரனார் சுட்டிக்காட்ட மறுமொழி சொல்ல இயலாது மயங்கி விழுந்தான். ஏதுசெய்வது என்று புரியாது மறுநாள்வரும்படிக் கூற, வழக்கு ஒத்திவைக்கப்பட்டது. அங்கிருந்து வெளி வருகின்ற சிதம்பரனாரை நோக்கி 'வந்தே மாதரம்' என்ற கோஷம் வர, அதன் விளைவுகள் என்னாகுமோ என எண்ணிச் சிந்தித்தார். விஞ்சுதுரை மீண்டும் அங்கு வந்தால் அங்கு 'வீண் போராட்டம் நிகழுமே' என அஞ்சக் கூடியோரை எல்லாம் அழைத்துக் குறுக்குவழியில் நடந்து தாம்பிரபரணி ஆற்றினைக் கடந்து ஊரினுள் வந்தார். 'சுதேசியம் என்ற சொல்லே நிச்சயமான வெற்றிதரும். அதனை உங்கள் சுதந்திர கீதமாகக் கொள்க' எனச் சொல்லி விட்டுச் சிதம்பரனார் சாது கணபதி பந்துலு என்பவர் வீட்டினை அடைந்தார். அன்று அங்குப் பசியாறி உடன் வந்திருந்த மகனுடன் அடுத்திருந்த மாடியில் ஓய்வு எடுத்து அன்றைய இராக் காலத்தை இனிது கழித்தார். மறுநாள் காலை தனக்காக வாதாட முன்வந்த சாது கணபதி, மகாதேவன், சிவராமகிருஷ்ணன் என்ற மூன்று வக்கீல்களோடும் மற்றும் இரு நண்பர்களோடும் விஞ்சுதுரை முன் சென்று தன்னை ஆஜர்ப்படுத்தினார்.

## விஞ்சுவுக்கு முன்னே விவேக விளையாட்டு

திரும்பவும் குற்றச்சாட்டுப் படிக்கப்பட்டது. 'தேசத்தின் நன்னிலையினைச் சிதம்பரனார் சிதைவுறச் செய்ததால் நாட்டுக்கு மோசம் வருதலைக் கண்டு கொண்டது அரசு. எனவே, ஜாமீன் கொடுக்க வேண்டும்' என்ற குற்றச்சாட்டு சாற்றப்பட்டது. அதற்கு ஈடுகொடுத்துச் சிதம்பரனார் ''இன்று நீவிர் எம்மை இருட்சிறை இட்டிட எண்ணம் ஏந்திநிற்கின்றீர். எனினும் கேட்டபடி உயர்ந்த ஜாமீன் கொடுப்பதில் எங்களுக்கு எந்தவிதமான எதிர் வழக்கும் இல்லை. எனினும் இந்த வழக்கினை வேறு நீதிமன்றத்துக்கு மாற்றிட வேண்டும்'' என்று இடித்துரைத்தார். சாட்டப்பட்ட குற்றங்கள் சட்டப்பிரிவில் சரியாகக் குறிக்கப்படாத காரணத்தால் அரைகுறை வழக்காக அமைந்திருந்தது. கோபத்திலும் கொந்தளிப்பிலும் கொள்கை மீறல்களைத் தடுத்து நிறுத்தவும் தொடுக்கப்படுகின்ற வழக்குகள் என்றுமே நிறைவாக இருக்க முடியாது. சட்டத்தின் கால்களைச் சரியாகப் பிடிக்காவிட்டால் அது பிடித்தவரையே எதிர்த்து உதைத்து விடும். அது வழக்குத் தொடுக்கப்பட்டவராக இருந்தாலும் சரி, அப்படிப்பட்ட ஒரு நிலை ஏற்படும் போது சட்டத்தினைக் காரணம் காட்டித் தனது திட்டத்தினை நிறைவேற்ற எண்ணம் கொள்ளுகின்ற ஆளுநர்கள் தமது அதிகாரத்தைப்பயன்படுத்திச் சட்டத்தின் கண்களைச் சற்றே பொத்தி வைத்து குற்றம் சாட்டப்பட்டவருக்கு எதிராக ஆணையிடுதல் என்பது பரம்பரையாக ஆகி வந்த ஒருமுறை. அந்த முறையில் பாதிக்கப்பட்டோர் பல்லாயிரக்கணக்கானோர், அன்றுமுதல் இன்றுவரை. எனவேதான் விஞ்சுதுரைகூடச் சிதம்பரனார் வாதிட்ட வழக்குரையைக் கேட்டு வகையான் பதிலொன்று வழங்க இயலாது, 'வாய்தா போட்டுள்ளேன்; மண் சிறை தந்துள்ளேன்; போயவண் இரும்' எனப் புகன்றனன். ''ஜாமீன் தானே கேட்டீர், அதனைக் கொடுக்கத் தயாராக இருக்கின்ற பொழுது ஏற்றுக் கொள்ள மறுப்பது ஏன்?'' எனச் சிதம்பரனார் கேட்க விஞ்சுதுரையோ நீர் குற்றத்தை மறுத்ததால் ஜாமீனை ஏற்றிடேன். விரைந்து நீவிர் வெளியே போகலாம்'' என உரைத்து நின்றான். சிதம்பரனாரும் விடாது நிபந்தனைகள் எதுவுமின்றி ஜாமீன் தந்ததாக எழுதி விஞ்சுதுரை கையில் கொடுத்தார். இதன் நடுவே எண்ணிலாக் காவலர் மேடை வந்து சிதம்பரனாரைச் சிறைநோக்கி நடக்கச் சொன்னார்கள். அப்பொழுதுகூட விஞ்சுவை நோக்கி ''என் கேள்விக்கென்ன பதில்? ஏனிந்த மௌனம் ஐயா?'' என உறுதியாகக்கேட்டு நிற்க, விஞ்சு பதில் உரை விளம்பத் தெரியாது அஞ்சி விழித்தனன். அந்த நேரத்தில் திருநெல்வேலி டிவிஷன்

"போலீஸ் பெரிய இன்ஸ்பெக்டர் 'பேசாமல் செல்ல வேண்டும்" என்று ஆணையிட்டார். அங்குக் கூடியிருந்த அவையோரை எல்லாம் பார்த்துச் சிதம்பரனார் தாம் கொடுத்த மனுவிற்கு எந்த ஒரு பதிலும் கிடைத்ததில்லை; எனவே வேறு வழியின்றிக் காவல் துறையின் அதிகாரத்தைப் பயன்படுத்திச் சிறைக்கு அவர் அனுப்பப்படுவதாகச் செப்பி நின்றார்.

உடனிருந்த சுந்தர்ராஜன் என்ற நண்பர் பக்கத்தில் கூடியிருந்த பார்வையாளர்களை எல்லாம் நோக்கி, 'சிதம்பரனாரின் முகத்தில் மிளிர்கின்ற ஒளியழகைப்பார்' என மற்றையோர்க்குக் காட்டி மகிழ்ந்தார். அங்கிருந்த இன்ஸ்பெக்டர் சற்றும் செவி சாயாமல் இவர்களை வெளியேற்றுவதிலேயே மும்முரமாக இருந்தான். சிதம்பரனார் உடன் வந்திருந்த பாலகனை- அவர் மைந்தனை அவனுடைய தாயிடம் சேர்த்துவிடக் கேட்டுக் கொண்டார். திரும்பவும் விஞ்சுதுரை பார்த்து, ''சிதம்பரனார் மனுத் தந்தது வழக்கு ஒத்தி வைக்கப்பட்ட பின்னர்தான்.எனவே அதனை ஏற்றுக் கொள்ள இயலாது'' எனக் கூறினான். அதுவே அவன் பதில் என்றும் கூறினான். அதன் விளைவாகச் சிறை செல்லுதல் தவிர வேறு வழியில்லை என உணர்ந்திட்டார். அவன் அவ்வாறு அளவளாவிக் கொண்டிருந்த இடம் சப்ஜெயில் வராண்டா. சுற்றியிருந்த பொதுச் சாலையிலும் ஸாது நீதி மன்றத்திலும் சிதம்பரனாரைக் காண வந்திருந்த பெரிய குழுவிடமிருந்து சிதம்பரனாரை அகற்றி அழைத்துச் செல்லக் காவலர் இரண்டு வண்டிகளோடு ஏறிவர, எல்லாம் நன்மைக்கே என்ற எண்ணம் கொண்டு காவலர் வண்டியில் ஏறினர். எட்டுத்திசையும் குழுமியிருந்த மக்கள் வெள்ளம் அவரைத் தொடர்ந்து செல்ல முயல, ''இதற்கு மேலும் என் பின்னால் வர வேண்டா'' என்று சிதம்பரனார் கூறிச் சென்றார். அங்கிருந்து பாளயங் கோட்டைச் சிறைக்கு எடுத்துச் செல்லப்பட்டார்.

### சிறைச்சாலைக்குள்ளே....

மார்ச் திங்கள் 12-ஆம் நாள் மாலை மணி மூன்று. சூறாவளிப் பேச்சினை, கண்ணன் இவ்வுலகினைத் தன் வாயினுள் அடக்கியதுபோல, அடக்கி, அமைதிகண்ட சிவாவோடும் பைந்தமிழ்ப் பேச்சால் பாவலரை மயக்கும் பத்மனாபனோடும் வ. உ. சி. சிறை நுழைந்தார். சிறை அதிகாரி வந்து இறைவனைப் பார்த்து மயங்குகின்ற மறைநூல்கள் போல் இம்மூவரையும் பார்த்தனன். தங்கத்திற்குப் பெருமைதர உதவி நின்ற சிதம்பரனாரின் விரல்களில் உள்ள மோதிரங்களைக் கழற்றி வாங்கி ஐந்து விரல்களையும் சமஉரிமை படைத்த ஏழையாய்

ஆக்கிநின்றான். காலைக் கதிரவன் விழித்திடும் நேரம் முதல் இவர்கள் வரவினை எதிர்நோக்கி இருப்பதாகச் சிறை அதிகாரி அறிவித்து இவர்கள் மூவரையும் பார்த்து ''தந்தையும் மகனும் சார்த்தனும் என்றிட வந்தீர்'' எனச் சொல்லி வரவேற்றனன். தன் உரிமையினை ஒவ்வொரு கணமும் நிலைநிறுத்தும் உணர்வு பெற்ற சிதம்பரனாரோ ''வரவேற்புக்கு நன்றி'' எனமொழிந்து, ''சொந்த உணவு சிறையில் கொள்ள ஏதேனும் தடையுண்டோ?,'' என்று வினவினார். அதனை முடிவு செய்ய வேண்டிய உரிமை சிறை சூப்பிரண்டெண்டண்டிடம் இருந்ததால்அவரைக் காணச் சொன்னான்.

அவனோ சிதம்பரனாரைக் கண்டதும் ''கைதியாக நீர் காணப்படவில்லை; கைதியாக நீர் கருதப்படவில்லை'' என்று விளக்கி அம்மூவரையும் விழுங்கி விடுவது போலச் சீற்றமுடன் நோக்கினான். மனிதனின் கண்களுக்கு மகத்தான சக்தி உண்டு. ஓடிவரும் நாயையும் பாய்ந்து வரும் புலியையும் மனிதன் கண்ணிலிருந்து வருகின்ற ஒளிரேகை அக்கண்ணிலிருந்து வரும் ஒளி ரேகையில் மோதுமாறு பார்த்துவிடின் எதிர்நோக்காது எதிர் நிற்காது ஓடிவிடுமாம். அதுபோல் முறைத்துப் பார்த்த சிறை சூப்பிரண்டெண்டண்டை அதே கண்ணுடன் சிதம்பரனாரும் திரும்பப் பார்க்க, அவன் சொல்வதறியாது திகைத்து விழித் தான். சிறை உணவு வேண்டாம் என்றும் சொந்த உணவு கொண்டு வர அனுமதி வேண்டும் எனவும் வேண்டி நிற்க, அந்த அதிகாரியும் ஒப்புதல் அளித்தான். ''வந்தே மாதரம் பிள்ளை'' என்று வழங்கப்பட்ட பரலி சண்முகசுந்தரம் பிள்ளை பரிவுடன் பார்த்து உணவினைச் சிறைக்குக் கொண்டு சேர்த்தார். சிதம்பரனார் பசியாற சிவமோ சிறிதுமட்டுமே உண்டார். உணர்ச்சிவசப்பட்ட பத்மனாபனோ உண்டிட மறுத்திட்டார். சிறையில் சீராகப் படுத்திடப்படுக்கை கிடைத்திடுமோ! எனவே தார்ப்பாய் விரித்து அங்கிருந்த மாப்பிள்ளைத் தலையணையைக் கொண்டு நன்குக் கண்மூடி உறங்கினார்.

வயது மேலிட மேலிட, வருத்தங்கள் கூடிடக் கூடிட, நித் திரை மகள், இரவு நகர்ந்திட நகர்ந்திட, அணைத்திட மறுப்ப துண்டு. வாழ்க்கையில் காலக் கண்ணாடி காட்டிடும் கோல வண்ணத்தினை எண்ணிஎண்ணிச் சிந்தனை தேய்ந்து கண் மூடாது விழித்திருப்போர் கணக்கற்றோர். எங்கிருந்தபோதும் எந்த நிலைமை சூழ்ந்த போதும் படுக்கையைத் தொட்டதும் இமைகள் தானாக மூடிக் கொள்ள உறங்குவது போலும் சாக் காடு என்ற அருமைநிலை பெறுவார் சிலர். அமைதி உள்ளம் கொண்ட சிலரில் ஒருவரான சிதம்பரனார் சிறைச்சாலைக்

குள்ளே கூடச் சிரம் தலையணையைத் தொட்டதும் உறக்கத்தோடு பிரியா உறவு கொண்டார். முன் தினம்போல் காலையிலும் பலகாரம் வேண்டும் என்று கேட்க, தோசையில் சிறிது காரப் பொடி நெய் சேர்த்து, அதனோடு காப்பியும் கொணரப்பட்டது. களிப்புடன் உண்டனர். குருநாதன் படுக்கைகள் கொண்டு தந்தான். நெல்லை ஞானசிகாமணி முதலியார் என்பவர் முறையிடப்பட்ட கைதிகளுக்கென்று ஞானமொழி சில நவின்று சென்றனர். மதியம் அறுசுவை விருந்து சாப்பிட்டபோது இது சிறைவாசமா அல்லது வீட்டில் உறைவாசமா என வியந்தனர் சிறையிடப்பட்டோர். அந்த வியப்பிற்கு விடை வழங்கும் வகையில் சிறை வார்டர்கள், ''செருக்களமாயது திருநெல்வேலி'' எனக் கைதிகளை அடைத்துக் கதவைப் பூட்டினர்.

## திருநெல்வேலியில் புரட்சித் தீ

சிதம்பரனார் கைது செய்யப்பட்ட செய்தி காட்டுத் தீப் போலத் திருநெல்வேலி முழுவதும் சிறிது நேரத்திற்குள் பரவி விட்டது. மறுநாள் வர்த்தகர்கள் கடையடைத்தனர். மாணவர்கள் பள்ளிக்குச் செல்லவில்லை. தேச பக்தர்களும் தேசிய ஸ்தாபனங்களும் சிதம்பரனாரைக் கைது செய்ததைக் கண்டித்துப் பொது கூட்டங்களில் பேசினர். ஊர் முழுவதும் போலீஸ் படை தருவிக்கப்பட்டது. தொழிலாளர்கள் நகரின் பல பாகங்களிலும் ஊர்வலம் சென்றனர். முனிசிபல் மண்ணெண்ணெய்க் கிடங்கைத் தீக்கிரையாக்கினர். சிலர் முனிசிபல் காரியாலத்திற்குள் புகுந்து அங்கிருந்த பொருள்களையெல்லாம் நெருப்பிலிட்டுக் கொளுத்தினர். சர்ச் மிஷன் கல்லூரியில் இருந்த சாமான்களையெல்லாம் உடைத்து வீதியில் எறிந்தனர். போலீஸ் ஸ்டேஷன் கட்டிடத்தையும் தீ வைத்துக் கொளுத்தினர். விஷயம் அறிந்த கலெக்டரும் போலீஸ் சூப்பிரண்டெண்டண்டும் ஸ்தலத்திற்குச் சென்று கலகத்தை அடக்க முயன்றனர். மூவர் படுகாயம் அடைந்தனர். இறந்த நால்வருள் இருவர் இந்துக்கள்; ஒருவர் முஸ்லீம்; மற்றொருவர் ஆதித்தமிழர். இறந்தவர்களின் பிரேதங்களை அப்புறப்படுத்தவில்லை அதிகாரிகள். அப்படியே விட்டுச் சென்றனர். பின்னர் மாலையில் இறந்தவர்களின் உறவினர்கள் வந்து பிணங்களை எடுத்துச் சென்றனர்.

கலகக்காரர்கள் கற்களால் அடித்ததால் இன்ஸ்பெக்டருக்கும் மண்டை உடைந்தது. கலெக்டரும் காயம் அடைந்தார். மூன்று நாட்கள் வரை ஒரே குழப்பம். சாதாரணப் போலீசாரால் நிலைமையைச் சமாளிக்க முடியாது என்பதை உணர்ந்தனர் ஆங்கிலேயர்கள். சென்னை சர்க்கார் தண்டப் போலீஸ்படையைத்

திருநெல்வேலிக்கும் தூத்துக்குடிக்கும் தச்சநல்லூருக்கும்அனுப்பி வைத்தனர். அதற்கான செலவுத் தொகையைப் பொதுமக்களிடம் வசூல் செய்வதென்று தீர்மானித்தனர். திருநெல்வேலி ஜில்லாவில் இருந்த வெள்ளையர்கள் வீட்டிலெல்லாம் இராணுவத்தினர் காவல் காத்தனர். கனம் குருசாமி ஐயரும் மற்றும் இரு பிரமுகர்களும் சென்னை வந்து கவர்னரைக் கண்டு தண்டப் போலீசாரை நீக்க வேண்டினர். ஆனால் அவர்கள் ஏமாற்றத்துடன் திரும்ப வேண்டியதாயிற்று.

இக்குழப்பத்தில் சம்பந்தப்பட்டதாகக் கூறிப் போலீசார் திருநெல்வேலி, தூத்துக்குடி, தச்சநல்லூர் ஆகிய இடங்களில் 89 பேர்களைக் கைது செய்தனர். அவர்கள் ஒருவர் விடுதலையானார். மற்றவர்கள் பலவித தண்டனைகளை அடைந்தனர் இந்த விவரங்கள் சிதம்பரனாரைச் சேருவதற்கு முன்பாகவே திருநெல்வேலித் தெருக்கள் பெரும் போர்க்களங்களாக மாறின எனச் சொல்லி, கைதிகளான மூவரையும் சிறைக் கூட்டினுள் அடைத்துக் கதவைப் பூட்டினர் வார்டர்கள். ''எங்கிருந்து வந்தது இந்தக் கூட்டம்?'' என அந்த வெள்ளைச் சந்திரன்கள் வியக்கும் அளவுக்கு மக்கள் திரண்டு சர்க்கார் தலங்களையெல்லாம் மனம்கொள்ளும் வண்ணம் தீயால் மாய்த்த செய்தி ஒன்று; ஏதும் ஒரு பிழை நானறியேன் என்றிருந்த சிலரைக் கூடத் தனது துப்பாக்கியால் சுட்டு அவர்களது உயிர்களை உண்டனன் விஞ்சு துரை என்ற செய்த இரண்டு; மறுதினம் குருநாதன் வந்து தூத்துக்குடியில் சிதம்பரனாரின் பாலகனை வீட்டினில் சேர்த்துவிட்டு வீட்டில் உள்ளோரிடம் 'கருமம் தொலைந்தது கலங்கற்க' என்று சொன்ன செய்தி மூன்று; வெள்ளிக்கிழமையன்று வீரராகவபுரம் பள்ளிச் சிறார்கள் பரிந்து எழுந்து வந்து ''அடையுமின் கடைகளை அன்பர் சிறையுள் அடைபட நின்றதன் அறிகுறியாக'' என்று மொழித்தனர். அவர்களுடன் சேர்ந்து குருநாதனும் கூக்குரலிட நாலைந்து கடைகள் மட்டுமே அடைக்கப்பட்டன என்ற செய்தி நான்கு; தூத்துக்குடியில் கொந்தளித்த கூட்டம் பற்றிய குறிப்பு ஐந்து; ஆஷ் துரை கலகமூட்டிட அந்தக் கூட்டத்தினரை அணுகித் தடியால் அடித்தும் வெடியால் சுட்டும் கூட்டத்தினரைத் தாக்க, அந்த மறவர் கூட்டம் ஆஷ்துரையின் குதிரையை அடித்துத் தள்ளிட, தனது தலை தப்பினால் தம்பிரான் புண்ணியமே என அவன் ஓடிய செய்தி ஆறு; கலகம் மூண்டிடக் காரணமாக இருந்த சப்-இன்ஸ்பெக்டரைக் கூட்டத்தினர் ஒருகை பார்க்க, அவன் ஓடி ஒளிந்திட, அவனுடன் வெள்ளையர் சகலரும் மிகமிக நடுங்கிக் கள்ளரைப் போன்று கூடி ஒளிந்து மறைந்த செய்தி ஏழு; சிதம்பரனாரின் மனையில்

உள்ளோர் சுகமாக இருக்கின்ற செய்தி எட்டு. ஆக மேலே வகைப்படுத்தப்பட்ட செய்திகள் அத்தனையும் குருநாதன் ஏந்திச் சென்று சிதம்பரனார் செவியிலே ஊட்டிட்டான்.

## சிறைச்சாலை என் செய்யும்?

''மன்றில் மலர்வதெல்லாம் மகேசன் மனப்போக்கு. அதை மாற்றுவார் யாருமிலர். நடந்தன எல்லாம் நஞ்செயல் அல்ல, கடந்து நிற்கும் கடவுளின் செயலே'' என்ற எண்ணம் கொண்டு என்றும் இறையருள் ஏந்தி நின்று சிறைச்சாலையில் நன்றே இருந்து வந்தார். அங்கு வந்த சிறைக்காவலன் ஒருவன் ''சென்னை ஆளுநருக்குத் தந்தி சென்றுள்ளது.அரசினை அழித்து அந்நிய தேசத்தினரை அறவே ஒழித்துவிட ஆரம்பித்து விட்டது. அறப்போராட்டம் என்ற வாசகம் தாங்கி'' என மொழிந்தான். அந்த ஆறுதல் உரைதந்த காவலனுக்கு வந்தனம் ஈந்து, ''வருவன வெல்லாம் மானுறை ஈசன் தருவனவென்றே தகவொடு கொள் வோம். ஆட்சியை இழந்தவர் அன்னியர் கையில் மாட்சியைப் பெற்றிட மறந்தும் நினைத்தல் தகுமோ'' என வீரமொழி வழங்கி அக்காவலர் உள்ளத்தில் கொழுந்து விட்டெரிந்து கொண்டிருந்த விடுதலை வேள்விக்கு நெய்யிட்டு நின்றார். அந்தக் காவலர் மனமகிழ்ந்து சென்றார்.

பின்னர் ஞாயிறு பிற்பகல் திடீரெனப் பன்னிரு சிறை அதிகாரிகள் (ஜெயிலர்) தடிகள் சகிதம் சிதம்பரனாரிருந்த அறைக் குள் காலன்போல வந்தனர். ஏதிலார்போல் பொது நோக்குக் கொண்டவனாய் நடந்த பின்பு, சிறையுள் திண்ணையில் அமர்ந் திருந்த சிதம்பரனாரைச் சீற்றத்துடன் நோக்கி, ''நான் நின்றிட நீர் இங்கு இருப்பதென்ன'' எனச் சீறினான். ''வெளியே செல்ல விதியின் உத்தரவு இன்னும் வரவில்லையே'' என இடுக் கண் வருங்கால் நகுகின்ற வழியே சிதம்பரனார் பதிலிறுக்க, கோபம் கொந்தளிப்பாக மாறிய ஜெயிலர் ''பதிலுரை தரு வதைப் பார்! இவர் உடுத்திய ஆடைகளை அவிழென'' அறைந் தனன். துரியோதனாதிகள் திரௌபதி துகிலுரிவதைப் போல், ஆடைகளை அவிழ்க்க, சுதந்திரத்தாய் கண்ணனாக மாறித்துணி வழங்கினாளில்லை. ''அரைஞான்'' மட்டும் உள்ளிருப்பது கண்ட ஜெயிலர் ஆத்திரத்தில் ''அரைஞாண் ஏன் அங்குளது'' என வினவ, அந்நிலையிலும் தந்நிலை மாறாத சிதம்பரனார் ''அரைஞாண் என்றும் அங்குதான் உளது'' என்று நகைச்சுவை யுடன் நவின்றார். எல்லோரும் சிரிக்க, நாணமுற்ற திரௌபதி என அவன் நின்றான். பார்த்தான். நினைத்தான். பின்னர்ப் போயினான்

## உண்டிகொடுத்தோர் சிறை போந்தாரே!

சிறையில் வாடும் சிதம்பரனாருக்குக் குறைந்தது நல்ல உண வாவது கொடுத்து அவர் செய்த சேவையின் புண்ணியத்தில் பங்கு ஏற்கலாம் என எண்ணம் கொண்டார், ''வந்தே மாதரம்'' சண்முகசுந்தரம் பிள்ளை. அவர் சொல்லியபடி அன்போடு நின்று அரிகர புத்திரன் என்பவன் இன்னாள் உணவு தந்தனன். எந் தெந்த வகையில் இன்னல் தந்திட முடியுமோ அந்தந்த வகையில் தந்திட்டார் ஆண்டிட்டோர். அகத்தில் எரிகின்ற தேசியத் தீ சற்று அணைந்து போகாதோ-எனத் தவறாகக் கணக்கிட்ட பாளையங்கோட்டை இன்ஸ்பெக்டர் அந்த அரிகரபுத்திரனை யும் சிறையினுள் தள்ளினார். அந்த இன்ஸ்பெக்டரைக் குறிக்குங் காலத்தே ''நாளைக் கழித்திட நாய் தொழில் புரிவான்'' என்று இடித்துரைத்தாலும், தமக்கே உரிய தன்மையோடும், சிதம்பர னார் அவர் உண்ணுகின்ற உப்பிற்கு ஊழியம் செய்கின்றான் என்று அவனது உயர்ந்த குணத்தையும் உயர்த்தி நிற்கின்றார். அரிகர புத்திரன் சிறையில் அடைக்கப்பட்ட பின்னர் சண்முக னார் பாலும் பழமும் பற்பல பண்டமும் பதமாகச் சிதம்பர னாருக்காக அனுப்பினார். அதனைச் சிதம்பரனாரின் மைத் துனர் பிச்சையா பிள்ளை தினமும் கொண்டுவந்து கொடுத்தார். சிறையினை மாமியார் வீடு என்று வேடிக்கையாகக் கூறுவதற் கொப்பச் சிதம்பரனார் மைத்துனர் தமக்கு உணவு கொண்டு வருவதை, மணமகனுக்கு அளிக்கின்ற விருந்து என்று ரசித்துக் கூறி அந்தச்சிறைத் துன்பத்தைக்கூடச் சுவையோடு அநுபவித்துச் சொல்கிறார். இலக்கிய நயம் கொண்டோர் வாழ்வில். தமக்கென இலக்கு பல கண்டவராய்த் துலங்குவது இயற்கையே

முருகியல் உணர்ச்சி முற்றும் கொண்ட சிதம்பரனார் சிறு சிறு துன்பங்களைக்கூடச்சுவையின் உணர்வோடு ஏற்றுக்கொள்ளு தல் இனிமையே.

## சிங்கக் குருளை பிரசங்கம்

சிறையில் வாழ்கின்ற மக்களுக்குத் தனிமை என்றுமே பாலை வனத்தின் சுகத்தினைத் தரும். அதனைச் சோலைவனமாக ஆக்கச் சொந்தக்காரர்கள் சென்று சிறைவாசிகளைச் சந்தித்து ஆறுதல் தருவது என்பது அவசியமானது. எனவேதான் சிதம்பர னாரைச் சந்திக்க சண்முகசுந்தரம் வாரம் ஒருமுறை சென்று வாய்ச் சொற்கள் பரிமாறி அவர் உள்ளத்திற்குச் சற்று ஊக்கமும் ஆக்கமும் அளித்துவந்தார். தன்வழி தன் மக்கள் செல்லுதல் தெரிந்திட்ட தந்தை இன்பத்தில் திளைப்பது இயற்கை. சிதம்

பரனாரின் சீரான மைந்தன் உலகநாதன் ஐந்து வயதினை எட்டிய அறியாப்பாலகன், தன்னோடு ஒத்த வயதினரை எல்லாம் கூட்டி ''இது நம் தேயம்; இதில் யாம் காணும் எதுவும் நம்பொருள்; இனி வெள்ளையனை விரட்டுவீர்'' என விளம்பி விளையாடிய சேதி சிதம்பரனாரின் சிந்தையைக் குளிர்வித்தது.

அந்தச் சிறுவனும் இவ்வாறு தேசியப் பிரச்சாரம் செய்கின்ற காலத்தில் சண்முகசுந்தரம் பிள்ளை வீட்டில் தங்கியிருந்தார். இச்சிறுவனின் நடவடிக்கைகளைப் பற்றிக் காவலர்கள் ஆய்வாளரிடம் தெரிவிக்க அவர் சண்முகனாரைக் கூப்பிட்டு இச்சிறுவனை நம் வீட்டில் சேர்த்திட்டால் அவனது தந்தைக்கேற்பட்ட கதி தான் உமக்கும் ஏற்படும் என்று பயமுறுத்தினார். அதைச் செவியுற்ற சண்முகனாரின் மனைவி சிதம்பரனாரின் மனைவியிடம் எடுத்துச் சொல்ல, அம்மங்கையோ ''இவன் என்குல மாணிக்கம்; குல மாணிக்கபுரக் கோவிலில் குடிகொண்ட இறைவன் அவனைக் காப்பாற்றட்டும்'' என வீரமொழி மொழிந்து நின்றாள். குலமாணிக்கபுரம் என்பது பாளையங்கோட்டைக்கு அருகிலுள்ள சிற்றூர். அங்குத்தான் சிறை அமைக்கப்பட்டுள்ளது. முன்னர் அவ்வூரில் கொலைக்குற்றவாளிகள் தூக்கிலிடப்பட்டதால் மாணிக்கபுரம் என வழங்கிய அந்த ஊர் கொலை மாணிக்கபுரமாக மாறிக் குல-மாணிக்கபுரமாக மருவியது. அவ்வூரில் உள்ள கோவில் தெய்வம் சக்தி வாய்ந்தது என அந்தச் சுற்று வட்டாரத்தில் உணரப்பட்டது.

## சிகை நீக்கப்படலம்

சிறையில் சிதம்பரனாருக்கு இழைத்திட்ட கொடுமைகள் பலப்பல. தூத்துக்குடிக் கலகம் தொடர்பாகக் கைதாகிச்சிறையில் இருந்து வந்த சங்கன் என்னும் நாவிதனை வைத்துச் சிதம்பரனாருக்குச் சிகை நீக்கப்படலம் செயலாற்றப்பட்டது. சிவாவிற்கும் அந்நிலையே. ஆன்மீகத்திற்கும், வீரத்திற்குமே எடுத்துக்காட்டாக வளர்க்கப்பட்ட சிவாவின் தாடி, சங்கன் கைவண்ணத்திற்கு இரையானது. சிவாவின் உருவினைப் பார்த்த சிதம்பரனாரின் உள்ளத்தில் சிரிப்புத் தோன்றி நகைச்சுவையாக, தாடியை எடுத்திட்ட சிவத்தினை நாளை முதல் ''வாடி'' என்று தான் அழைக்கவேண்டும்'' என்ற சொற்கள் வெளிவந்தன. ''இடுக்கண் வருங்கால் நகுக'' என்ற வள்ளுவர் வாய்மொழிக்கு எடுத்துக்காட்டாக அவர் எப்பொழுதும் திகழ்ந்தார் என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

மறுநாள் காலை வந்த சிறைக் கண்காணிப்பாளர் சிதம்பரனாரைப் பார்த்துக் கேலியாக ''நீர் விரும்பிய வண்ணம்

சிகையினை நீக்கிவிட்டோம். அது நீங்கிய பின் உமது இனம் தெரியவில்லையே'' என்று கேட்கச் சிதம்பரனாரும் பதிலடி கொடுக்கும் வகையில் ''இனந்தனை மறுப்பவர் இங்கில்லை'' என்று இடித்துக் காட்டினார்.

''விட்டுக்கெட்டது காது
விடாமற் கெட்டது கண்
தட்டிக் கெட்டது புட்டம்
தட்டாமற் கெட்டது தலை''

என்கின்ற வைத்திய மொழிக் கேற்ப எண்ணெய் தேய்த்துக் குளிப்பது என்பதை வாரம் ஒருமுறை என வழக்கப்படுத்தி வாழ்ந்தவர் சிதம்பரனார். அந்த வழக்கத்தினைக் கைவிடாமல் சிறையில்கூடத் தொடர்ந்து கைப்பிடித்தார். சிறைவாசத்தினால் சற்று மனம் வாடியிருந்த சிவத்தைக் கூட ஆறுதல் கூறி எண்ணெய்க் குளிப்பிற்கு ஆளுகைப்படுத்தினார். எதிலும் எங்கிலும் எந்தப் பொழுதிலும் ஒரு நியதி ஒழுக்கம் என்பதனைக் கைப்பிடித்து வாழ்ந்தவர் சிதம்பரனார் என்று காண்கின்றோம்.

## சிறையில் பெற்ற அறிவுச் செல்வம்

சிதம்பரனார் சிறையினின்றும் வந்தபின் மீண்டும் வக்கீல் வேலை வாங்கித் தந்த உயர்நீதிமன்ற நீதிபதி வாலேஸ்துரை என்பவர், அவரது உதவிக்கு நன்றி நவிலும் வண்ணம் தம் கடைசி மகற்கு ''வாலேசுவரன்'' என்று பெயரிட்டிருந்தார். அந்த வாலேசுவரன், பிள்ளையவர்கள் சிறையில் இருக்கையிலே வேண்டிய தேவைகளைப் பூர்த்தி செய்து வந்தான்.

சிறையில் வதிந்த காலை, தினசரிச் செய்தித்தாள் படித்திட வேண்டுமென்ற தீரா ஆசை கொண்ட சிதம்பரனார், சிறைக் கண்காணிப்பாளரைக் கேட்க, மறுப்பது என்பதையே தன் கடமை எனக்கொண்டிருந்த அவன் தர மறுத்தான். எனவே வாலேசுவரனிடம் சொல்லி அனுப்பி, செறிந்த பல செய்திதரும் ''ஹிந்து'' ஆங்கில நாளிதழும், வந்தே மாதரம் மாட்சி பெற்ற சொந்தத் தினசரியும், ''சுதேசமித்திரனும்'' தினமும் வருத்தித் தெரியாமல் படித்து வந்தார். தின இதழ்களைத் தர மறுத்த சிறை அதிகாரம் மற்ற மறைநூல்களை, சரிதங்களைப் படிக்க அனுமதி தந்தது. தின இதழ்கள் தருவது அன்றைய நடைமுறைச் செய்திகளே. பழைய வகைமுறையைப் பாரதப்பழம் பெருமையைப் படித்திடின், வீரம் மிகுந்திடும்; உணர்வுகள் தலை விரித்துக் கோலமிடும் என்பதனை உணராத அதிகாரம், வள்ளுவத்தை, நல்லாப் பிள்ளைப் பாரதத்தை, பெரும்பொருள்

நிரம்பிய பகவத் கீதையினைப் படிப்பதற்குத் தடை செய்யாது, தங்குத் தடையின்றித்தாராள அனுமதி தந்தது. இதைதவிர ஜோசிய நூல்கள் பலவற்றையும் படித்து, நாளை நடப்பதை நாமறிவோம்'' என வாழ்ந்தார் வ. உ. சி. மதுரை வீரனது மாபெரும் வரலாற்றினைச் சிதம்பரனார் வழங்கிடக் கேட்டுக் கைதிகள் வியந்து நின்றனர். சதுரமாகச் சர்க்காரோடு பல சண்டைகள் புரிந்து, தன்திறம் நாட்டி, எண்டிசையும் புகழ் இயம்பிட நிற்கும் பாஞ்சால நாயகன் கட்டபொம்மன் கதையினைக் கேட்டு உளம் மகிழ்ந்தனர். பொழுதினை வேடிக்கையாய்ப் போக்கிட ''நாயும் புலியும்'' என நவிலும் ஆட்டமும் ''தாயம்'' என்கிற ஆட்டமும் ஆடினர் அந்தச் சிறையுறைந்தோர். சட்டத்தினை மறவாதிருக்க அதனையும் அடிக்கடிச் சிந்தனையில் தொட்டுப்பார்த்து இருந்தார் சிதம்பரனார். இதைத் தவிர, காலையில் உடற்பயிற்சிக்காக, கசரத்து பஸ்கிதனைச் செய்து வந்தனர். சிதம்பரனாரும், உடனிருந்தோரும் இவ்வழி சிறையினில்கூடச் செம்மையான நெறியான முறையான வாழ்க்கையினை வாழ்ந்து வந்தனர். சிறைக் காவலாளர்களான வார்டர்கள்கூட அவரது செயல்களைப் போற்றி உடனிருந்து ஒத்துழைத்து வந்தது, சிதம்பரனாரின் தேசிய மூச்சுக்கு மட்டுமின்றி அவரது பேச்சின் ஆகர்ஷண சக்திக்கும் உள்ள மதிப்புக்கும் ஓர் எடுத்துக்காட்டாகும்.

## சிறையில் செய்த சீர்திருத்தம்

சிறையில் ஓர்நாள் கான்விக்டு வார்டரும் (convict warder) கான்விக்டுகளைக் கர்ண கடூரமாகக் கொடுமைப்படுத்தினார். அதனை ஆட்சேபித்துச் சிதம்பரனார் அவரை இடித்துக் கூறினார். சிறையிலிருந்திட்ட போதிலும்கூட, தவறினைக் கண்டிக்கத் தவறவில்லை.

இதனிடையில் சிதம்பரனாரைத் தொடர்ந்து சிறைபுகுந்த தேசிய செம்மல்கள் சிதம்பரனார் சிறைக்குள் வந்து சேர்ந்தனர். தூத்துக்குடியில் ஏற்பட்ட கலகத்தின் விளைவால் தண்டிக்கப் பட்ட கணக்கற்ற தொண்டர்கள் காராக்கிருகம் குடிபுகுந்தனர். தண்டிக்கப்பட்டவர் சிலர், பின் விசாரணை ஒத்திவைப்பால், விசாரணைக் கைதிகளாய்ச் சிறை வந்து சேர்ந்தவர் சிலர். நெல்லை மாநகரிலும் நெல்லையருகே உள்ள தச்சநல்லூரிலும் உள்ளத்தில் எழுந்த தேசியத்தீயை அணைக்கத் தலைவரைச் சிறை செய்திட்ட சினத்தால், அனுமன் போல் ஊரிலே தீவைத்து தன் உணர்வுகளை வெளிக்காட்டிய வீரர்களுக்கும் வாயில் திறந்தது அந்த வளமான சிறை.

அதுபோது, சாதுகணபதி மீண்டும் வழக்கினைப் படித்து நீதிபதியிடம் ஜாமீனில் சிதம்பரனாரை விட வேண்டுமென மனுக் கொடுத்தனர். நீதிபதி வேண்டுகோளை நிராகரித்திட, சென்னை உயர்நீதி மன்றத்தில் மனுதாக்கல் செய்யப்பட்டது. அம்மனுவை ஏற்றுக்கொள்ள "பெரியதொரு" வக்கீலைப் பேணி அமர்த்திய தாகச் சிதம்பரனாரே குறிப்பிடுகின்றார். வாதுரை கேட்ட நீதிபதி ஜாமீனில் விடுதலை செய்ய உத்தரவு வழங்கினார். அதனை எடுத்து வந்து செஷன்ஸ் நீதிபதி முன்பு, சிதம்பரனாரின் வழக்குரைஞர் சமர்ப்பித்து, உடனே விடுவித்திட உத்தரவு பெற்றுச் சிறைச்சாலைக்கு அந்த உத்தரவு வந்து சேர்ந்த பின்பு கூடச் சிறையினர் உடனடியாக விடுதல் இயலாதெனக் கூறினர். நீதிமன்ற ஆணைக்குப் பின்புகூட அதிகாரவர்க்கம் அடிபணிய மனமில்லை. எவ்வாறாவது நீதிமன்ற ஆணையை நிறைவேற்ற இயலாமல் செய்ய வேண்டுமெனச் சிந்தனையில் இறங்கியது. சிறை அதிகாரம் நீதியென்பது ஒரு சட்டதிட்ட வரையறையினுள் நடமாட வேண்டிய நிர்ப்பந்தத்திற்குள் நிற்கின்ற ஓர் இயந்திரம். அந்த வரையறையினை உடைத்திடத் தெரிந்திட்டால் நீதிதேவதையின் கால்களை ஒடித்து அவளை நொண்டியாக்கிட முடிகின்றது. இந்த உலகில் சட்டத்தின் ஓட்டைகளை முழுமையாக அடைக்க இயலாமல் இருக்கின்ற காரணத்தினால், முழுநீதி கிடைக்கின்ற நிலைமை இன்னும் ஏற்படவில்லை. இதனை உணர்ந்த சிதம்பரனார் "பெரியதொரு" வழக்கறிஞரை, தனது நண்பர்கள் உயர்நீதி மன்றத்தில் வாதிட வைத்தார் என உணர்ந்து சொல்கின்றார்.

## மாவட்ட ஆட்சியரின் சூழ்ச்சி

உயர்நீதி மன்ற விடுதலை உத்தரவினை உடைத்திட உழைத்திட்டான் மாவட்ட ஆட்சியர் விஞ்சுதுரை. எமனுக்கு இணையாகச் செயல்பட்ட விஞ்சுதுரை, சென்னை ஆளுநர் மனத்தினில் சிதம்பரனாருக்கு விரோதமாக எண்ணம் விதைத்திட எழுதினான். "மக்களைக்கூட்டி, தூத்துக்குடியிலும், சொல்லிய நெல்லையிலும், சாற்றிய சொற்பொழிவுகள் 'இராஜ நிந்தனை' குற்றம் இழைத்தன" என மனுச் செய்து, சிதம்பரனார் மற்றும் சிவம் மீது மட்டும்;"வாரண்டு" பிறப்பிக்க ஏற்பாடு செய்தனன். அந்த மனுவின் குற்றவாளிப் பட்டியலில் பத்மநாபன் பெயர் இடம் பெறவில்லை. எனினும் சிறை அதிகாரிகள் விஞ்சுவிடமிருந்து உத்தரவு வருமென எதிர்பார்த்து உயர்நீதிமன்ற உத்தரவை அமுலாக்காமல் தாமதம் செய்தனர். சிதம்பரனாரைக் கண்ட சூப்பிரண்டெண்டண்டு "இதுவரை சிறையினின்று

விடுதலை செய்ய உத்தரவு வரவில்லை. வந்திடும் காலையில் வந்ததும் ஒப்பம் பெற்று வீடு போகலாம்'' எனக் கூறினான். அன்று திங்கள் மாலை அதற்கு முந்திய வெள்ளியன்று பிறப் பிக்கப்பட்ட உயர் நீதிமன்ற உத்தரவினை அமுலாக்க வேண்டு மென்று, திங்களன்று நெல்லை செஷன்ஸ் நீதிபதி உத்தரவிட்டி ருந்தார். அதனை நிறைவேற்று முன்பு விஞ்சுவின் வாரண்டு உத்தரவு ஆளுநரின் அனுமதி பெற்று வந்துவிடும் என்கின்ற விஷ எண்ணத்தில் விளைந்ததுதான் காலதாமத விளையாட்டு.

மறுநாள் செவ்வாயன்று, விடுதலை செய்ய முடியாத ஏற் பாட்டைச் செய்த பின்னர் ''ஒப்பம் இட்டால் வீட்டிற்கு ஏகலாம்'' என மொழிந்தனன் சூப்பிரண்டெண்டண்டு. முன்னால் நடந்தவை முழுதும் தெரிந்திட்ட சிதம்பரனார் உடன் ஒப்பம் இட இஷ்டப்படவில்லை எனத் தெரிவித்து, விஞ்சுதுரை முன்பு 'ரிமாண்டு கைதி' என்ற முறையில் சென்று நின்றிடத் தயா ரானார்.

## முடிசூடா மன்னர்கள்

சிறையினின்றும் சிதம்பரனார் விஞ்சுதுரையிருக்கின்ற நீதி மன்றம் சென்ற உலாவினை உய்த்து வருணிக்கின்றவகை உணரற் பாலது.

சென்றவழியில் அவர்கண்டசிறப்புகள்பற்பல. குதிரைவண்டி கள் கோலோச்சிய காலமது. குதிரைகள் பூட்டிய இரண்டு வண்டி கள் கைதிகளைக்கோர்ட்டுக்கு எடுத்துச்செல்ல ஏற்பாடுகள் செய் யப்பட்டிருந்தன. சிதம்பரனார் ஒரு வண்டியிலே; சேர்ந்திருந்த சிறை நண்பர்கள் மற்றொரு வண்டியிலே; வண்டி முன்னும் பின்னும் ''உடலினைக் காக்கும் உத்தியோகஸ்தர் திடமுள்ள நால்வர்'' இருந்தனர். அவர்கட்கும் முன்பு இரண்டு டிப்டி சூப்பிரண்டெண்டண்டுகள் மிடுக்கான மடிப்புக்கலையாத காக்கி உடுப்பிலே, பின்புறம் ஆறு இன்ஸ்பெக்டர்கள், இவர்களைத் தொடர்ந்து பன்னிரண்டு ''ஏட்டுகள்'' நான்கு ரிவால்வரும் நாலைந்து வெடிகளும் ஏந்திக் கொண்டு சைக்கிளில்வர நகர்ந்தன வண்டிகள். சாலையின் இருபுறமும் சனக்கூட்டம். வண்டி புறப் படுமுன் பன்னிரண்டு கான்ஸ்டபிள்கள் பைனட் வெடியோடும், முன்னே ஓரெட்டு ஏட்டுகள், முகந்தெரிகின்ற கண்ணாடி போன்று பளபளப்பான வாட்கள் கையிலேந்தி ''சல்யூட்'' செய்தனர். சிதம்பரனார் வேடிக்கையாக ''சல்யூட்டை ஏற்றோம்'' என்று கூறுகின்றார்.

இந்த நாட்டில் உயர்ந்த கைதிக்கு முன்னும் பின்னும் ராஜ உபசாரம். மன்னருக்கும் பெரிய மனிதருக்கும் அதுவே; அரசியல்

கைதியென்றால் அமைச்சருக்கு உண்டான மரியாதையினும் மேலே. இன்றைய நாளில் ஷேக் அப்துல்லா கைதானால் கொடைக்கானலில் உள்ள அரண்மனைக்கு அடிக்கிறது யோகம். ''சட்டத்தின் கண்களில், அனைவரும் சமம். அரசியல் அமைப்பில் எல்லோரும் இந்நாட்டு மன்னர்கள்'' என்பதெல்லாம் உதட்டளவில் மட்டுமே. பூலான்தேவிக்கும் ஒரே பாதுகாப்பு; பூமியில் உயர்ந்த ஆளுநருக்கும் ஒரே பாதுகாப்பு. மனித வாழ்வு முறையில் மனத்துக்குப் புரியாத புதிர்கள் பல உண்டு. அதிலே இது ஒன்று.

கைதி சிதம்பரனாரின் ஊர்வலம் இருமருங்கிலேயும் மக்கள் கூட்டம் அரண்போல நின்று வந்தனை செய்ய நீதிமன்றம் சென்றடைந்தது. அங்கும் பாதுகாப்புக்காக ஒரு பெரும்படை— காவலர்கள் உருவில். சொன்ன நேரத்தில் விஞ்சுதுரை முன்னர்க் கைதிகள் தோன்றவும், திரும்பவும் ''ரிமாண்டு'' செய்து சிலநாள் சிறையிருக்க ''வரம் கொடுத்தான்'' விஞ்சு. திரும்பவும் சிறைவாசம். சூழ்ச்சி பலித்தவுடன் சிறையதிகாரி பழைய உத்தரவுக்கு ஒப்பம் கேட்க, மறுநாள் ஒப்பம் இட்டார் சிதம்பரனார். உடனடி விடுதலை செய்வதற்குப் பதிலாக, இன்னொரு வாரண்டு அடுத்துக் காத்திருப்பதாக அறிவிப்பு வந்தது. சிறை உள்வாயிலை விட்டு வெளியேறு முன்பே புதிய உத்தரவு தரப்பட்டது.

விஞ்சுதுரை முன்பு மீண்டும் ஆஜர். அந்நீதிமன்றத்திற்குப் புதிதாக வந்திருந்த அடிஷனல் டிஸ்டிரிக்ட் மாஜிஸ்திரேட்டு வாலஸ் என்பவரின் கோர்ட்டுக்கு வழக்கு மாற்றப்பட்டது. அங்கும் வழக்கமான வாய்தாதான். பழைய குற்றச்சாட்டுடன், சிவத்தின் பேச்சுப் பெருமுதவி செய்ததாகப் புதிய குற்றச்சாட்டு சேர்க்கப்பட்டது. வழக்கினைச் சிதம்பரனார் மற்றும் சிவா, பத்மநாபனுக்காக நடத்திடச் சென்னையிலிருந்து எம். பவுல் (Powell) வந்திருந்தார். அரசினர் சார்பில் ''பிராசிகியூஷன்'' தரப்பில் ரிச்மண்டு என்ற வழக்குரைஞர் ஆஜரானார். இதன் இடையில், விஞ்சுவின் இரண்டாவது வாரண்டு பிறப்பித்த உத்தரவு செல்லாது எனச் சென்னை நீதிமன்றம் அறிவித்தது. எனவே ஜாமீனில் சிவாவும், சிதம்பரனாரும் விடுதலை செய்யப்பட்டனர். அவர்கள் வழக்கு விசாரணை நடைபெறுமுன் விசாரணைக் கைதிகள் என்ற முறையில் ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டனர்.

### பத்மநாப ஐயங்கார் விடுதலை

பொய்யாய்ப் போடப்பட்ட வழக்கான திருநெல்வேலியில் தீயிட்ட கேசினில் சம்பந்தப்படுத்தப்பட்ட பத்மநாப ஐயங்கார்

விடுதலையானார். தனது ஆணை தகர்க்கப்பட்டதால் கோப முற்ற ஆஷ்துரை நன்னடத்தை ஜாமீன் தர வேண்டுமென மீண்டும் வற்புறுத்தினான். உயர்நீதி மன்றத்திற்கு இந்த வழக்கினை மாற்ற எடுத்த முயற்சிகள் பலனளிக்கவில்லை. எனவே ஜாமீன் தொலைந்தது; நிபந்தனை நின்றது.

## வழக்கு நடந்த வரலாறு

வாலேசுவின் நீதிமன்றத்தில் வழக்கு பன்னாள் நடந்தது. சிதம்பரனாருக்காக வாதாடிய வழக்கறிஞர்கள் பின்னி (Binney) சடகோபாச்சாரியார், நரசிம்மாச்சாரியார், வெங்கடாச்சாரி யார் ஆவர். கௌடலும் (Gowdell) சாது கணபதியும், பிற்றர் (Peter) மூவரும் சிவத்தின் வக்கீல்கள். அரசினர் வக்கீல்கள் பவலும், ரிச்மண்டும் (Powell and Richmand). வழக்கு பற்றி "யுகாந்திரம்" என்று கல்கத்தாவில் நடந்த ஒரு வங்காளிப் பத்திரிகையில் விவரங்கள் முழுதும் வந்தன. இதனை விவரிக் கின்ற சிதம்பரனார் நீதி மன்றங்களின் கோணல்களை, குறை பாடுகளை, குத்திக் காட்டுகின்றார்.

நீதி வழங்க வந்தோர், வழக்கை விசாரித்தோர் வாதியின் காலுதிர் மயிரினும் தாழ்ந்தோர் என வெறுப்புடன் விளம்பு கிறார். அவர் வழக்கில் வாதிக்கு ஆதரவு தருவதையே வாடிக்கை என வழிவகுத்துக் கொண்டவர்தானே வழக்கை விசாரித்தோர். ஆளுநர்க்கு அடிபணிந்து அவரிட்ட ஏவலை நிறைவேற்றவே அமர்த்தப்பட்டோர் என்று அறிவிக்கின்றார். அந்த நீதி வழங்கு வோரைப் பார்த்து, "நியாயமாகக் கேட்டல், நியாயமாய் எழுதுதல், தயாளமாய்ச் சிட்சித்தல், தர்மமாகக் காத்தல் எங்ஙனம் காணலாம் இந்தக் கலியுகத்தில்" எனக்கேலி செய் கிறார். மேலும், "இங்ஙனம் விசாரித்தோர் இருந்ததும் அன்றி, இருதிறக்கட்சியும், இருதிறச்சான்றும் பெருகிறப் பொய்களைப் பேசினர். ஏனெனில் முற்கால நீதிமுறையெலாம் நீங்கத் தற் காலம் வந்துள சட்டங்கள் பொய்களை உரைத்திட தூண்டும் உதவியே தந்துள" என கைக்கொட்டிச் சிரிக்கின்றார். அவரது எண்ணத்தில் கலிகாலத்தின் காரணமாக நீதி தேவதையின் ஆட்சிமைக்குக் களங்கமேற்பட்டது என்று குறிப்பிடுகின்றாரா? அன்றி ஆங்கிலேயர் ஏகாதிபத்திய நாளில் நீதி ஒருதலைப்பட்ச மாக இருந்தது எனச் சாடுகின்றாரா? அன்றித் தற்போது நீதி முறையின் நிலையே இதுதான் என வருந்துகின்றாரா? இது சிந்தனைக்குரிய கேள்வி! முற்கால நீதிமுறை சிறந்திருந்தது எனச் செப்புகின்ற சிதம்பரனார் இன்றைய சட்டங்களின் காரணமாகப் பொய்யுரைகள் மலிந்துள்ளன எனவும் சிந்திக்கின்றார்.

வழக்கறிஞர் வாழ்விலே மட்டும் பொய்யினை இணைத்து மகிழ்கிறது இந்த உலகம். வள்ளுவன் சொல்லிய வாய்மையில் பொய்மைபற்றிக் கூறியது ஒருபுறம் இருக்க,

(1. வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல்.

2. பொய்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்)

பொய்யே சொல்லாத தொழிலோ மனித இனமோ எதுவுமில்லை தாய் குழந்தைக்குப் பொய் சொல்லி, நிலாக்காட்டி உணவூட்டி அதனை வளர்க்கிறாள். தந்தை குடும்பத்தில் பொய் சொல்லிக் குடும்ப நலனைப் பாதுகாக்கின்றான். மருத்துவன் நோயாளிடம் நோயின் தன்மை பற்றிப் பொய்யுரைக்கின்றான். வாணிபஞ் செய்வோர் தொழில் தர்மம் எனச் சொல்லிப் பொய்யுரைத்துப் பொருளீட்டுகின்றனர். ஆசிரியர் கூட மாணவர் நலம் கருதிப் பொய்யுரைத்து அவனைப் புகழை நோக்கி ஓடச் செய்கின்றார். கவிஞன் பொய்க்குக் கற்பனை என்று பெயரிட்டு இலக்கியப் பூச்சிலே எல்லோரையும் தன்பக்கம் ஈர்க்கின்றான். முற்றுந் துறந்த துறவியோ, ''வாழ்க்கை என்பது பொய்யடா வெறும் காற்றடைத்த பையடா'' எனத்தத்துவம் பேசுகின்றான். எனவே பொய்யுரை என்பது நன்மை புலப்படப் பேசின் அது பொய்யாகாது; வேண்டுமென்று செய்கின்ற செயலும், அதன் முடிவு இன்னதென்று தெரிந்த பின்பும் அதையே செய்து தீங்கினை விளைவித்தலுந்தான் சட்டத்தின் கண்களில் குற்றங் கள். ஆகவே ஒரு செயலைப் புரிந்துகொள்ள அதுபற்றி ஆராய்ந்து, வாதிடும்பொழுது, அந்த வாதம் பொய்க்குத் துணை போனதாகக் கருதப்படுகின்றது. ''ஒருவன் இந்தக் குற்றம் செய்தான்'' எனக் குற்றம் சாட்டப்படுகின்ற போது, ''அவன் இவை செய்திருக்க முடியுமா முடியாதா'' என்று விவாதம் தேவைப்படுகின்றது. இருதரப்பினர்களும் தங்கள் திறமை யினால் இருவேறுபட்ட கருத்தினை நிலைநாட்ட வாதம் புரி கின்றனர். அந்த வாதத்தின் முடிவில் உண்மை வெளிப்படு கின்றது. உண்மையைத் தெரிந்துகொள்ள இருதரப்பு வாதம் தேவை. அந்த எதிர்வாதம் இல்லையென்றால், எல்லா வழக்கு களும் ஒருவழிப் பாதையில் தானே சென்று முடியும்? எனவே வாதவுரைகளைத் தவறான கண்ணோட்டத்துடன் பார்த்து அதனைப் பொய்யுரை என்று கணக்கிடுவது, முறையன்று. இதனை இந்த உலகம் இன்னும் உணரவில்லை. அன்று தொட்டு இன்று வரை வழக்கறிஞர் தொழிலென்றாலே ''பொய்யுரைப்

போரின் புகலிடம்'' என்ற சாபம் இவ்வுலகில் இடப்பட்டு வரப் பட்டிருக்கின்றது. இந்த விளக்கத்தை உலகிற்கு எடுத்துக் காட்டிப் புரியவைத்தல், தேவையற்ற செயலென எண்ணி யுள்ளது வழக்கறிஞர்கள் உலகம்.

எனவேதான் வழக்கறிஞராக வாழ்ந்த வ.உ.சி. கூட ''வழி முறை பற்றி, உரைத்திட்ட பொய்களை உன்னினேன். தீயன வற்றைச் செய்யலும் தீதே'' எனப் பொய்யுரைகளே தமக்கு எதிராகத் தொடுக்கப்பட்டன எனத் தம் வழக்கினைப்பற்றி எடுத் துரைக்கின்றார். வாதுரைகள் முடிந்தன. வழக்கு முடிந்தது. தீர்ப்பு ஜூலை ஏழென நீதிபதி பின்னி தெரிவித்தார்.

ஜூலை, 7. அன்று காலை சிறைக்குக் காப்பி கொணர்ந்த பிச்சன் உவகையும் சிரிப்புமின்றி உன்மத்தம் கொண்டவனாய் உருவெடுத்து வந்து நின்றான். கூடவே சிதம்பரனாரின் சிறு குழந்தை, செல்லமகனையும் கூட்டி வந்திருந்தான். ஆறுதல் பிச்சனுக்குப் பலபல கூறித் தேற்றினார். மழலைச்செல்வத்தைப் பார்த்ததும் மடிமீது ஏற்றிவைத்து, மனங்குளிர முத்தளித்து, செல்வனின் சிறுமொழியைச் செவிமடுத்து மகிழ்ந்தார். அனை வரும் அழுதாலும் தான் ''அயலூர்'' சென்றிடினும், அழக்கூடா தெனத் தம்மகற்கு அறிவுரை வழங்கிப் பிரியாவிடை கொடுத்த பின்பு, முந்தைய முறைப்படி, ''பரிவட்டங்கள் படைபரிவாரங் கள்'' சூழ நீதிமன்றத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார் சிதம்பரனார்.

### சிவ-சிதம்பரத்திற்குத் தண்டனை

நீதிமன்றம், ''ஏதிவண் நிகழினும் இளைத்திடேல்'' என்று நீதிபதியே சொல்வதாக அங்கதம் பாடுகின்றார் சிதம்பரனார். தீர்ப்புரை-நயம்பட, பற்பல நாளாக எழுதிவந்த தொன்று. நீதிபதி பின்னி அந்தத் தீர்ப்புரைதனை மனங்கொண்டு எடுத்து, தன் சிந்தை மகிழ்ந்திடச் சில மணி படித்தார். ''பிரசங்கம்'' செய்த குற்றத்திற்காகச் சிவாவுக்குப் பத்தாண்டு தீவாந்திர வாசமெனத் தண்டனை தரப்பட்டது. சிவாவுக்கு உதவி செய்த குற்றத்திற்கு இருபது ஆண்டுகளும், தீவினில் சென்று சிதம்பரம் கழிக்க வேண்டுமெனத் தீர்ப்புரை தரப்பட்டது. கற்றோரும், மற்றோரும், உற்றோரும், உறவோரும் தீர்ப்புரை கேட்டுக் கலங் கினர். சிதம்பரனாரோ அதனை இறைவன் அருளிய கொடை என ஏற்றாலும், நீதியை நினைத்து நெஞ்சோடு நகைத்து நின்றார். முற்பகல் வினைப்பயனே இது என எண்ணினார். தேச விடுதலைக்காகத் தாம் செய்த செயலத்தனையும், தாம் செய்த புண்ணியமென்றும், தாம்பெற்ற தண்டனை வினைப்

பயனே என்றும் எண்ணியது, சிதம்பரனாரின் சிறப்பான சிந்தை யினைச் சீர்தூக்கிக் காட்டுகின்றது.

## மனைவிமக்கள் மனவருத்தம்

சிறை, சட்டத்தின் தீர்ப்பு சங்கமம் ஆகும் இடம். நல்லவரும் நானிலத்தில் பொல்லாதோரும் சமநிலையில் உலாவரும் இடம் சிறை. ''ஜெயிலுக்குப் போய்வந்த தேசமக்களைத் தியாகி என்று சொல்லுவாங்க'' எனக் கலைவாணர் பாடிய பாட்டு இன்று காதில் ஒலிக்கின்றது. ''தேசத்துரோகம்'' என்ற சட்டத்தின் பிரிவினைக் கூற்றால் சிறையினைச் சேருகின்ற தண்டனை சிதம்பரனாரைச் சேர்ந்தது. சிறைசெல்வழியில் சிதம்பரனாரின் தந்தை கண்ணீர்மல்க நின்று நோக்க, தந்தையைப் பார்த்துக் ''கவலற்க'' என்று ஆறுதல் மொழி அளித்தார் சிதம்பரனார். பாசமேலிட ''கடவுள் இருக்கின்றார்; நீ கவலற்க'' என்றார், தந்தை உலகநாதபிள்ளை. அங்குச் சிதம்பரனாரின் முன் மகன் காணப்படவில்லை. பின்மகனை அவரது பெரிய மைத்துனர் எடுத்து வைத்திருக்கக் கண்டதும் பிள்ளையவர்கள் பொங்கி வருகின்ற கண்ணீரை வலியத் தாங்கிக் கொண்டே, அடக்கிக் கொண்டார். தொட்டுத் தாலிகட்டிய வீட்டரசி தன்கண்ணீர் உகுத்துத் தலையிற் கைவைத்து மிகமிக அழுதனள். சிதம்பரனார் கையால் சைகை செய்து ''வேண்டாம் அழுகை; மகவைப் பேணென''த் தெரிவித்தார். மதிமயக்கத்தால் மனைவிகுடிலினுள் விழுந்து வருந்தி மிகவும் துயருற்றாள். இச் சேதிதனைப் பிள்ளைக்குத் தெரிவித்தான் ஒருவன். சிறையினுள் நுழைந்ததும் டெப்டி ஜெயிலரும் மற்றும் சிலரும் நெருங்கி வந்து அழுதனர். ''நினைத்தபடியே நிகழ்த்தினன் தீர்ப்பு. மனத்துயர் நீங்கும் நின் வலியினால்'' என்று தேறுதல் சொன்னார் சிதம்பரனார். ஜெயிலர் கூட மிக அதிகமாகக் கண்ணீர் சிந்தி ''அய்யா நீ அயரேல்'' என்று ஆறுதலளித்தார். தன்னம்பிக்கையின் சிகரத்தில் வாழ்ந்த சிதம்பரனாரோ மறுமொழியாக ''அயர்தல் என்றும் அணுகாதென்னை. உயர்தல் ஒன்றே ஒன்றும்'' என்று மொழிந்தார். தண்டிக்கப்பட்ட கைதிகளுக்குச் சீருடை வழங்குவது மரபு. ஏற்றத்தாழ்வு வெளித் தெரியாமல் சீருடை அணிவது, பள்ளி மாணவர்கள், காவல்துறையினர், இராணுவ வீரர்கள், அடுத்துச் சிறைக் கைதிகள். அதன் அடிப்படை நோக்கம் வரவேற்கத்தக்கது. ஆனால் எந்த அளவு அது நடைமுறையில் செயலாக்கப்படுகிறது?

சிறை உடை அணியுமுன்பு, தனது உடைகளைக் களைந்து, தனது எடையினைப் பார்த்தார். அது 129 (ஈரெட்டு எட்டும் ஒன்றும்) பவுண்டாக இருந்தது.

## சிறை உடையின் சிறப்பு

சிறை உடை "சில்க்" உடையன்று. மரத்தின் பட்டையென வரையத்தக்க உரத்த துணியில் தைக்கப்பட்ட கால்சட்டை. கால், கை வெட்டி அகற்றப்பட்டது. எனவே அது அரைக்கால் சட்டை. கைவெட்டப்பட்ட மேல் சட்டை. அதே துணியில் செந்நிறம் கொண்ட தலைக்குல்லாய். இம்மூன்றும் சேர்ந்தணிந்தால், முண்டமெனவே மனிதனின் உடல் தோன்றும். உடலினை உருவினைக் குறைத்து முண்டமாகத் துணிகளை அணிவித்துக் கொண்ட சிதம்பரனார் "எம்பெயர் உயரவும், எம்முருத் தாழவும் உடுத்தேம் அவற்றை உளங்கொண்டு' என்று பெருமிதம் கொள்கின்றார்.

## காலுக்குக் கரும்பொற் கழலணி

உடைமாற்றம் செய்தபின்பு, உருவில் வல்லவன் போன்று ஒருவன் வந்தான். வலதுகால் இரும்புத் தண்டைகள் தந்திட, தமக்கே உரிய நகைச்சுவை உணர்வுடன்; "அரும்பொன் காலிடல் அபசாரமென்றே, இரும்பினை அணியும் என்று ஈந்தாயோ" எனச்சிதம்பரனார் வினவி நகைத்தார். உடனிருந்த நண்பன் அதனை அணிந்து உடன்படுத்துக் கண்ணயர்ந்தான். சிதம்பரனாரோ பாடிக்கொண்டு உலாவந்து சிந்தனையில் ஆழ்ந்து கொண்டிருந்தார். நன்றாக உறங்கி எழுந்த நண்பன் "சித்தம் மயங்கித் திடீரெனப் படுத்தேன். இத்தனை நேரமும் எதையும் அறிந்திலேன்" என உரைத்தது கண்டு, அவனிலை கண்டு மனங்கலங்கினார் பிள்ளை. எதற்கும் தளராத நண்பன் உள்ளம் நனி தளர்ந்ததைக் கண்டவர் ஆறுதல் தருமுகமாக, "கனவரை போன்றோய் நீ உறங்கியதைக் கண்டு கொள்ளாத நான் சும்மா இருந்தேன். சுகமாக உறங்குதல் உடற்களைப்பு ஒழிக்குமென்று எண்ணியே நான் அவ்வாறு அமைதி கொண்டேன். என்றுமே மயங்காத உன் மனம் மயங்கியது கண்டு என்னுளம் மாய்கின்றது" என்று இன்மொழி ஈந்தார். சிறையில் இருந்த போதும் தன்னலம் கருதாது, மற்றையோர் உள்ளமும் உடலும் சீர்பெற என்றும் செயலாற்றி வந்தார் சிதம்பரனார்.

## சாப்பிடச் சட்டியும் கலையமும்

சிறையிடப்பட்டவர், சீரான உடல்நலம் சேரப் பெற்றிருக்கின்றாரா எனச் சோதனையிட மருத்துவமனைக்கு இட்டுச் செல்லப்படுவது வழக்கம். அதுவழி சிதம்பரனாரும் சிவாவும் சென்று எடைபார்க்கப்பட்டுத் திரும்பக் கொணரப்பட்டனர். அன்று இரவுக்குப் "பால் குடிக்கத் தருவதாக" ஜெயிலர்

சொல்லிச் சென்று, அன்றுமட்டும் பால் தரப்பட்டது. மறுநாள் திட்டமிட்டபடிச் சிறைக் காவலன் ஒருவன் சட்டியும் கலையமும் தயாராகக் கொண்டு வந்து கொடுத்தான். அது துன்பத்தின் முதல்படியே என்பதனை உணராத, நண்பன் குருநாதன் அதனைக் கேட்டுக் கோவென்று கதறி அழுது, எதையும் பருகாது மனக்கவலை கொண்டு மயங்கினான். செய்தி தெரிந்த கைதிகள் சிலர் தினம் சிதம்பரனாரைக் கண்டு கதறி அழுதனர். தமக்காக மற்றவர் வருந்துவதைப் பொறுக்காத சிதம்பரனார் சிந்தை கலங்கினார். சற்றுக் கண்ணயர்ந்த போது, அவரைத் திரும்ப எழுப்பி, அவருக்கு வடையும் பழமும் தந்து உண்ணச் செய்தனர் அன்புளம் கொண்ட இருவர். சிவாவும், சிதம்பரனாரும் மற்றையோருடன் அதனைப் பகிர்ந்து உண்டு, உடனிருந்தோர் அன்புகண்டு உவகை கொண்டனர். மறுநாள் விடிந்ததும் சிறைக் காவலாளி ஒருவன் "மடிந்த கேழ்வரகை மண்ணோடு காய்ச்சிய கூழை"க் காலை உணவெனத் தந்து நின்றான். அதனைக் குடியாது கொட்டினார் மண்ணிலே. குருநாதன் அனுப்பிய பலகாரத்தினையே ஏற்றுக்கொண்டு காலைப்பசி ஆறினர் இருவரும். சிலநேரத்தில் ஜெயிலர் வந்து அழைத்துச் சென்றான், சிறைமாற்ற உத்தரவினைச் சொல்லி.

## கோவைச்சிறை செல்லல்

சிதம்பரனாரை மட்டும் கோவைச் சிறைக்கு மாற்ற முடிவு செய்து, அவரை அங்கு அழைத்துச் செல்ல ஏற்பாடுகள் செய்யப் பட்டன. சிவாவை வணங்கி விடைபெற்றார். வழியில் தவத்தால் உயர்ந்த குருநாதனைச் சந்தித்தார். எண்ணிலாக் காவல் துறையினர் வந்தனர் அழைத்துச் செல்ல. மீண்டும் வண்டியில் பவனி. காவலர் புடைசூழ அன்று வழியெங்கும் அழுகையின் தோற்றமே. சடகோபாச்சாரியார் தங்கிட இடத்தின் முன்னர்ச் சிதம்பரனாரின் மைத்துனர் தன்திடனெலாம் நீங்கச் சென்று கொண்டிருந்ததைக் கண்ட சிதம்பரனார் "மயங்கிடேல்" எனச் சொல்லிச் சென்றார். அத்தருணம் வெங்குவையர் மற்றும் பலரும், "விரைவில் உம்மை மீட்போம்" என்று தைரியம் சொன்னார்கள். வண்டி ஊரின் பாலம் கடந்த வேலையில் பழகிய அநேகர் கூட்டமாகக் கூடிச் சிதம்பரனாரைப் பார்க்க, "விரைவில் திரும்புவேன். விடாதீர் சுதேசியம். தரையினில் எல்லாமும் தருவது அதுவே" எனக் கூறுரைத்து, தம் பயணம் தொடர்ந்து புகைவண்டிநிலையம் சென்றடைந்தனர். இரயிலடியில் எண்ணற்ற போலீசார் இடைவிடாது உலாவினர். இரயில் வந்ததும் சிதம்பரனாருடன் ஆங்கிலேய இன்ஸ்பெக்டர் ஒருவனும், முன்னாள் உடன் வந்த மூன்று கான்ஸ்டபிள்களும் ஒரு

பெட்டியில் ஏறினர். பின் வண்டிகளில் பெருந்திரளாக, சாதாரண உடையில் எண்ணிலாப் போலீசார் பாதுகாப்பு கருதி துணை வந்தனர், ஆனால் அனைவரின் கவனமும் கண்ணும் கருத்தும் சிதம்பரனார் மீதுதான்.

இரயில் வண்டி செல்லும் வழியெல்லாம் ''வெள்ளம் போல் மக்கள் கூட்டம். அவர்கள் உள்ளமெல்லாம் உணர்ச்சி ஓட்டம். வெள்ளையர்மீது காட்டம். சிதம்பரனார் நிலைபற்றி மன வாட்டம்''. கங்கைகொண்டான் இரயிலடியில் பொங்கி வந்த பெருங்கூட்டம் பேரொலி வழங்கிப்பொன்மகனைப் போற்றியது. மணியாச்சி வந்ததும் நின்றிருந்த நண்பர்கள் நாடி, ''பணிவாகச் செல்வதாலே ஆணவம் மிகுந்தது ஆங்கிலேயருக்கு'' என ஆரவாரம் எழுப்பினர். ''பாரும் நம் சுதேசியக் கப்பல் என்றும் கதியொடு நடந்திடச் செப்புவது இஃ தே, செல்லுகிறேன்'' என்றும், ''வருந்துதல் விட்டுத் திருந்திய செயல்கள் செய்க எந் நாளும்'' என்றும் ஆறுதல் மற்றும் அறிவுரை சொல்லிச்சென்றார் சிதம்பரனார். நனைந்த கண்ணுடனே நின்ற நண்பர்கள் ''நன்றென'' அம்மொழி ஏற்று அமைதி தழுவினர். முத்தமிழ் முகிழ்ந்த முதுநல் மதுரை வந்தது. மதுரக் கவிகள் பலர் மலரினை நாடும் வண்டெனக் கூடி இரயிலை வரவேற்றனர். சிதம்பரனார் ஊர்வாசியான திரவியம் அவரருகில் அணைந்து நின்று ''இனி என்ன யாம் செய்வோம்'' என்று கதறி அழுதான். ''அழுதாற் பயனென்ன? ஆவதே ஆகும்'' என்று ஆறுதல் கூறி, அவனின் காலில் அடிபட்ட காயமிருப்பதைக் கண்ணுற்று ''பழுதுன் காலில் பட்டதென்ன'' என்று பரிவோடும் பாசத்தோடும் நேசம் இணைந்த உறவோடும் கேட்டு அவனுக்குத் தேறுதல் கூறி, நின்ற கூட்டத்தினருடன் தமது வழக்கு நடந்த விவரம் முழுதும் கூறித் தமது நெறியினைத் தொடர்ந்தார், அந்தத் தமிழ்வீரர். அன்றைய நாளில் செல்கின்ற இரயில் வண்டி கோவை செல்ல, திருச்சி சென்றுதான் செல்வது உண்டு. எனவே அடுத்து வந்த திருச்சியில் இரயிலடியில் வண்டிமாற வேண்டி, இறங்கி, அங்கு உள்ள காவல் நிலையத்தில் காத்திருந்த வேளை, மாணவக் காளையர் பலர் வந்து அன்புடன் பேசி ஆதரவும் ஆறுதலும் அளித்தனர். அங்கு இரவு உணவு உண்டுப் பின் படுத்து நன்கு உறங்கி ''கதியுடன் ஈரோட்டில் கால் சுத்தி செய்து, போதனூரில் புதியன உண்டு, கோதிலாக்'' கோவையினைக் கூடினர். அமைதியான கலக்கமில்லாத தெளிவான உள்ளம் உடையவர் சிதம்பரனார். எனவேதான் அந்த நிலையிலும் அருந்துயில் அவரை ஆட்கொண்டது. கோவையினின்றும் கூடிய காவலர்கள் கொள்கைக் கோமானை, கோவை சென்ட்ரல் சிறைக்குக் கொண்டு சேர்த்தனர்.

தேசியம் தோன்றிய பூமி திருநெல்வேலிச் சீமை. கட்ட பொம்மன் முதல் கவிபாரதி வரை கணக்கற்ற கர்ம வீரர்களைப் பிள்ளைகளாகக் கொண்ட பேர்பெற்ற பூமி. ''ஓட்டம் நாங்கள் எடுக்கவென்றே கப்பல் ஓட்டினாய்-பொருள் ஈட்டினாய்?'' கேட்டவன் ஒரு வெள்ளையர் ஆட்சியன். ''பொழுதெல்லாம் எங்கள் செல்வம் கொள்ளை போகவோ? நாங்கள் சாகவோ'' என்று பதிலடி கொடுத்தவர் வ.உ.சி. அந்த வாழுந்தலைவர் வரலாறு படைக்க, இப்பூமியில் தோன்றி, தம்மால் ஊருக்கெல் லாம் கல்வி, தந்தை தர, திருச்சி சென்று சட்டம் பயின்று, வழக்கறிஞர் தொழிலில் வல்லுநர் ஆகி, நல் இல் வாழ்ந்து நலம் பல கொண்டு சுதேசியம் வளர்ந்திடத் தம் சுகதுக்கங்களை மறந்து, நாவாய்ச் சங்கம் நிறுவி, வெள்ளையர் வெருளச் செய்து, தொழிலாளர் உரிமையினை நிலைநாட்டி, தேசிய விடுதலைப் போராட்ட வழக்கில் வேண்டுமென்றே கைதாக்கப் பட்டு, நீதிதேவதை சற்றுக் கண்ணயர, சிறைத்தண்டனை விதிக் கப்பட்டுக் கோவைச் சிறையில் சேர்க்கப்பட்டார். நாட்டுப்பற்று நினைவில் ஏற்றி, நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமு மாய் அதனை வளர்த்து, தன் வாழ்நாளில் பாதியை நாட்டுக்குக் காணிக்கையாய்க் கொடுத்த பின் மீதி நாட்களைக் காராக்கிர கத்தில் கழிக்க, இறைமனங்கொள்ள, சிறை புகுந்த படலம் தொடங்கிற்று.

## சிறை உறை படலம்

தனது வரலாற்றினைத் தரணிக்குத் தமிழ்க்கவியில் தருகின்ற சிதம்பரனார், ''தினசரி'' நாளிதழ் தந்த சொக்கலிங்கம் என்ற பெருமகனாரைப் போற்றி மகிழ்கின்றார். காந்திமாமுனிவன் ஏந்திய கொள்கையை, இந்த நிலனெல்லாம் எடுத்து இயம்ப எண்ணம் கொண்டு நடத்திய நாளிதழ் செய்திட்ட சேவைதனை ஏற்றி மகிழ்கின்றார்.

## கோவைச் சிறையில் கொள்கைக் கோமான்

சிறை புகுந்தவுடன் டிப்டி ஜெயிலர் வந்து பாளைங் கோட்டையில் தந்த சிறையுடைகளை வாங்கிக் கொண்டு, கோவைச் சிறையில் வழங்கப்படுகின்ற உடைகள் மேலுடை இரண்டு, கீழுடை இரண்டு மற்றும் குல்லாய் ஒன்று, கோவணம் ஒன்று, கயிற்றுப்பாய் ஒன்று, கம்பளி இரண்டு, தந்தனன். மாற்றுடை அணியப்பெற்று மாதக்கைதிகள் வாழுகின்ற நான் காம் அறைத் தொகுதியில் அடைக்கப்பட்டார். டிப்டி ஜெயிலர், சோணையன் என்ற கோணக்கால் வார்டரிடம் அவரை ஒப்படைத்துவிட்டுச் சென்றான்.

கொடுமையின் கோலாகல ஆட்சிக்கு அச்சாரம் கொடுப்பது போல, அந்த வார்டர் சணல்கிழி இயந்திரம் சுற்றிடப் பணித்தான். சிதம்பரனாரின், சட்டக் கருத்துக்களைத் தீட்டிய கை, சுதேசியம் வளர்த்திடச் சித்திர எழுத்துக்களை எழுதியகை, நாவாய் நடத்திட நல்வழிகள் நாட்டிய கை, சணல்கிழி எந்திரம் சுற்றிட, கைதோலுரிந்து, இரத்தம் கசிந்தது. கண்களில் நீர் வழிந்தது.

## வார்டர் வள்ளல்கள்

தமது தண்டனைக் காலத்தைச் சிதம்பரனார் கோயம்புத்தூர் மற்றும் கண்ணனூர்ச் சிறைகளில் கழித்தார். அவரைச் சிவாவிடமிருந்து பிரித்த பின்பு அவருக்குத் தனிமைதான் துணை. வசதிகளும் வாய்ப்புகளும் அவரது வாசலைவிட்டு வேறு வழி சென்றுவிட்டன. துன்பம் என்பது எப்போதும் உடனிருந்து அவரது நிழலாக அவரைத் தொடர்ந்து வந்தது. தன்னை ஒத்துக் கொள்ளவில்லை என்ற தாபம், தாய்நாடு தாய்நாடு என்று கூறி வெள்ளையருக்கு எதிராக இவர் ஏற்றி வைத்த தீபம் வெறும் தீப்பொறியாக மக்கள் உள்ளத்திலே எரிகின்றதே என்ற கோபம், இவையனைத்தும் சேர்ந்து அவரது வாழ்க்கை பரிதாபம் என்று சொல்லக் கூடிய அளவிற்கு வெள்ளையரால் மாற்றப்பட்டது. அறுசுவை உணவு உண்டவர் அவர்; அழகிய வெள்ளித் தட்டிலே அதனைப் படைத்து ஆனந்தம் கண்ட அவர் மனைவி கண்டாலே கூசத்தக்க அளவிற்குச் சட்டியும் கலசமும் சிறைச்சாலையில் அவரைச் சார்ந்தன. கேவலமான கேப்பை ரொட்டி அதன் கீழே வைத்ததொரு கோதுமை ரொட்டி மற்றும் குழம்பும் தரப்பட்டன. "உண்மின் கோதுமை; ஒழிமின் கேப்பை" என்று சிறைக்காவலன் சொல்லி ஏசினான். வேறு எந்த ஒரு புதிய நிலையும் காண முடியாத சூழ்நிலை. எனவே இட்டதை ஏற்றுக் கொட்டப்பட்டதை உண்டு சினத்தீயின் குட்டையில் சங்கமமானார் சிதம்பரனார்.

அவரது நிலை அந்த இறைவனுக்கே பொறுக்கவில்லை போலும்! எனவே இரவில் இரண்டாம் சாமம் முடிகின்ற காலத்தில் சிவகாசி ஆறுமுகம் பிள்ளை, அவரோடு சேர்ந்து சிவகாசி கலகத்தில் தண்டனையடைந்த வடுகு ராமன் என்ற சீனியர் கன்விக்ட் வார்டரும் வந்து அவரை வணங்கி நின்று வடை, பழம் வழங்கினர். அவரைப் பார்த்து ஜெயிலர் மின்ஜேல் அறிவித்த கட்டளையைத் தெரிவித்தனர். சிதம்பரனார் இருக்கின்ற அறைத் தொகுதிக்கு அவரது ஆட்களான மேற்குறிப்பிட்ட நபர்கள் வரக்கூடாது என்று கட்டளையிட்டதாகத் தெரிவித்தனர். எனினும் அந்தக் கட்டளையைத் தகர்த்தெறிந்து

விட்டு ஒவ்வொரு இரவிலும் ''உம்மை யாம் காண்போம்'' என உரிமையோடும் உறுதியோடும் உவந்து மொழிந்தனர். 'விடியற் காலம் ரவா உப்புமாவும் மதியமும் மாலையும் ரவை தோசையும் அனுப்புகிறோம்' என்றும் 'பிறர் அறியாமல் அதனை அருந்திடுக' என்றும் மொழிந்து ஏகினர். சொல்லிய வண்ணமே செய்வது என்பது அந்தச் சுந்தர நண்பர்களின் சுவையான பண்பு. எனவே சொல்லிய வண்ணமே உணவுப் பண்டங்கள் சிதம்பரனாரைச் சேர்ந்தன. இரவில் வருவர்; வந்து இன்புறப்பேசுவர்; மற்றும் பண்டம் வழங்குவர்; பாரதம்பாடுவர் இவ்வாறு பற்பல நற் செயல்கள் தொடர்ந்து செய்து நலிந்த உள்ளத்திற்கு நாயகமான ஆதரவு தந்து அந்த வெள்ளைக்காரத் துரைகள் கொடுத்த நஞ்சான துன்பங்கள் நினைவில் நிற்காத அளவிற்கு நல்லன புரிந்தனர்.

## சிறையில் செக்கிழுத்த வைபவம்

ஆனால் அந்தத் திங்கட் கிழமை வந்த சிறைக்காவலர்க்கு இது பொறுக்கவில்லை போலும்! சிதம்பரனாரின் கைத்தோல் உரிந்ததைப் பார்த்துக் கரையிலா மகிழ்வு கொண்டு மெய்த்தோல் உரிய மேனி நலம் சரிய வழி ஒன்று வகுத்தான். எள்ளை ஆட்டும் செக்கினில் மாட்டிற்குப் பதிலாகப் பூட்டி, பகலெல்லாம் வெய்யி லில் நடந்து செக்கினைத் தள்ளிட,சிதம்பரனாரை அனுப்பினான். அத்தகு துன்பம் தருவோனைக்கூட, தம்மை மாட்டைக் காட்டி லும் கேவலமாக நடத்துபவனைக்கூட, மனிதத் தன்மைக்கு அப்பாற்பட்ட மனம் கொண்ட அவனைக்கூட, சிதம்பரனார் திட்டவில்லை; வெறுக்கவில்லை; ஒதுக்கி ஓடவில்லை. ஆனால் ''அவனுடைய அன்புதான் என்னே!'' என்று கூறி அகம் மகிழ்கிறார். இது அங்கத அகமகிழ்வா? அல்லது ஆத்திரத்தின் நெகிழ்வா? என்று நம்மால் புரிய முடியவில்லை.

## கைதிகளின் கரையிலாக் கடவுள்

செக்கினைத் தள்ளுகின்ற கொடுமையினைச் செவிமடுத்து சிறை நண்பர்கள் சிதம்பரனார் இருக்கும் இடம் சேர்ந்து சிந்தை பதறினர். அவரைப் பார்த்து ''நாங்களே தள்ளுவோம்; நமன்கள்போன்ற சூப்பிரண்டெண்டண்டு காட்ஸனும் ஜெயிலரும் வருங்கால் எம்முடன் வந்திது தள்ளுமின்; போய் நிழல் இருந்து புசிமின் எள்ளும் வெல்லமும்'' என்றே விளம்பினர். அன்போடு அவர்களின் அன்புக் கட்டளைக்கு அடிபணிந்து அவ்வாறே நடந்திட்டார் சிதம்பரனார். ஒருநாள் டாக்டரைப் பார்த்து வருவதற்காகச் சில கைதிகளுடன் சிதம்பரனார் அனுப்பப்

பட்டார், அந்தத் தீ நிகர் ஜெயிலரால். உடலைப் பரிசோதிக்க வந்த டாக்டர், சிதம்பரனார் சிரித்ததைக் கண்டு "ஏன் சிரித்தாய் நீ என்னைப்பார்த்து?" என்று கேட்டிடச் சிதம்பரனார் சினம் கொள்ளாது, "அழச் சொல்கின்றாயா? அது (அழுகை) என்னிடம் வரவே அழுமே! எனவே நான் அந்த அழுகையைத் தழுவேன்" என்றார். தொட்டதற்கெல்லாம் தப்பெடுத்தால் என்னாகும். சிரித்தது தவறென்று அந்த டாக்டர் சூப்பிரண்டெண்டண்டுக்குச் சொல்லியனுப்ப அந்தச் சூப்பிரண்டெண்டண்டு அழைத்து அவர் செய்தது தவறு என்று தீர்ப்பளித்து மேலும் இரு முழு வாரம் தண்டனை என்று அளித்தான். இதற்குள்ளாகச் சென்னை நீதிமன்றத்தில் செய்த மேல்முறையீட்டில் திருத்தமும், ஒழுக்கமும், தேசாபிமானமும் சேர்ந்த நல் நீதிபதியான சங்கர நாயர் கீழ்மை நீதிபதி பின்னி கொடுத்த தீர்ப்பினை ஒத்தி வைத்து (Suspend) உத்தரவிட்டார். அதன் விளைவாக அந்த அடிமை வேலை தொலைந்திடச் சொந்த உணவும் சொந்த உடையும் சொந்தப் படுக்கையும் வந்திட அவை கொண்டு மகிழ்வுடனிருந்தார். ஏதோ பெரிய உதவி செய்வதுபோல் நினைத்துக் கொண்டு வந்த ஜெயிலர் சிதம்பரனாரைப் பார்த்து "உம் தேச நிலைக்கு வேலை செய்தல் மிக நலம், ஆதலால் வேலை செய்ய நீர் விரும்புகின்றீரா? என்று வினவினான்" "வேலை செய்ய வந்திடவுமில்லை, வேலை செய்திட என் மனமும் முந்தி வரவுமில்லை" என உறுதியாகப் பதிலளித்தார் அந்த உத்தமச் சிதம்பரனார்.

## சிறைச்சாலையில் இலக்கியப் பிறப்பு

வேலை செய்ய விரும்பவில்லை என்று தெரிவித்த காலை கோபம் கொண்டனன் அந்த ஜெயிலர். மாதம் ஒருமுறை வருகின்ற டாக்டரிடம் அதனைப்பற்றி முறையிட; அந்த டாக்டர் அறையினுள் பூட்டுதல் ஆகாது என்றும் சிதம்பரனாரின் உடல்நிலை சீர்பெற ஒவ்வொரு காலையும் மாலையும் ஒவ்வொரு மணி நடந்து உலாவிடும் வேலையைச் செய்திட, வெளியிடல் வேண்டும் என்றும் ஓர் உத்தரவு ஈந்தார். அந்த உத்தரவிற்கு அடிபணிந்து ஜெயிலரும் அடங்கினான். நாட்டுப் பற்றோடு தம் உள்ளத்தினைச் சேர்த்து அணைத்த சிதம்பரனார் இலக்கியக் காற்றை இன்புறத் தழுவுவதில் இணையற்று விளங்கினார். இலக்கியம் என்பது ஒவ்வொருவருக்கும் நிறைவு தரும் இன்பம். துன்பம் தொடுகையில் இசை எடுத்து இன்பம் தருகின்ற இளம் மங்கையின் சுகத்திற்கு ஒப்பானது. அந்த இலக்கிய நயத்தில் தம்மை இணைத்துக் கொண்ட சிதம்பரனார் சிறை வாழ் நாளில், ஆங்கில அறிஞர் ஜேம்ஸ் ஆலன் எழுதிய (As A Man

Thinketh)'' என்ற நூலினை ''மனம்போல வாழ்வு'' என்னும் தலைப்பில் மொழி பெயர்த்தார். பிறநாட்டு நல்லறிஞர் சாற்றியதைத் தமிழ்க் கூற்றாக ஆற்றி அகமகிழ்ந்தார். அவர் சிறையில் இருந்த காலை அவர் மனைவியும் மைத்துனன் பிச்சனும் அவரது இல்மக்களுடன் ஒவ்வொரு வாரமும் வந்து இருந்து கொண்டு ஒவ்வொரு மணி நேரம், ஒவ்வொரு மணி காலம் அன்போடு கண்டு பேசி இன்புற்றனர். துன்பம் சூழ்ந்து துயரத்தில் வாழ்ந்திருந்த போதுங்கூடத் தாம் பெற்ற மழலைச் செல்வங்களைக் கண்டு தேன்சுகம் பெற்றார் சிதம்பரனார். 'சிங்காரப் புன்னகை கண்ணாரக் கண்டாலே சங்கீத வீணையும் எதற்கம்மா?' என்று பாடுகின்ற கவிஞனின் மனநிலையைக் கொண்டு, தம் மக்களை எடுத்து மடியினில் இருத்தி உச்சிமுகர்ந்து மைத்துனன் கொடுத்த பிஸ்கட்டை மழலைக்குக் கொடுத்து, சிறாரின் சிறுகை அளாவிய உண்டி கொண்டு உவந்திருந்தார் சிதம்பரனார்.

## சிறையில் கலகம்

கோவைச் சிறையில் சிதம்பரனார் இருந்த காலை நெல்லையில் தண்டிக்கப்பட்டவர் அங்குச் சிறைவாசம் அனுபவித்துக் கொண்டிருந்தனர். அங்குக்கான்விக்ட் வார்டராகப்பணியாற்றிக் கொண்டிருந்த வடுக ராமனும் இருந்தான். ஒரு நாள் காலையில் ''டவர் ஆபீஸ்'' (Tower Office) என்று அழைக்கப்படுகிற சிறை அலுவலகத்திற்குச் சிதம்பரனார் சென்ற பொழுது வடுகு ராமன் இருகரம் கூப்பி அவரை வணங்கினான். நுழைவாயிலில் அச்சமயம் வந்த ஜெயிலர் அச் செயல் கண்டு மிகக் கனன்று, இராமனைப் பார்த்து ''எவரை நீஇவண் இறைஞ்சினை?'' என்று கேட்டான். ''எவரையும் யான் இவண் இறைஞ்சிலேன்'', என்று மறுமொழியிறுத்தான் வடுகு ராமன். சினம் கொண்ட ஜெயிலரோ சிதம்பரனாரை அழைத்து ''இவன்தான் நின்னை இறைஞ்சினானா?'' என்று வினவிட அவரும் தனக்கே உரிய பாணியில் ''எல்லோரும் என்னை என்றும் இறைஞ்சுகின்றனர். யானோ இவன் இறைஞ்சினதைக் கவனித்ததில்லை'' என்று சொல்லித் தம் அறை சென்றார். பின்னர் ஜெயிலர் இராமனைக் கண்டிக்கும் வண்ணம் தன் வன்பொறை இழந்தும், ''அவனை எக் கைதியும் மதியா வண்ணம் தவறுளன் என்று தனி அறை வைத்துளேன். அவனை நீ இங்ஙனம் தடுத்து நின்றிறைஞ்சின் எவனினி அவனை இறைஞ்சா தொழிவன்? அவனை இனி நீ அவ்விதம் இறைஞ்சிடின் தவறாதுனக்குச் சப்பாத்தடிதான்'' என்று கூறினான். இம்மொழி கேட்டதும் இராமன் மிகவும் உள்ளம் கன்றி எரிமலையானான். அதனை வெளிக்காட்டிக் கொள்ளாது தன் இருப்பிடம் சென்றனன்.

சிறையிலுள்ள கைதிகளில் திறமையுள்ள மூவரை மறைவி னில் அழைத்து மற்றவர் தம்பால் நடந்ததைக்கூறி விடந்தனை ஒத்த ஜெயிலர்,சூப்பிரண்டெண்டண்டு, டாக்டர் மூவரையும் மறு நாள் கொன்றிட வேண்டும் என்று திட்டம் தீட்டினன், இராமன் மற்றவரும் அதற்கு ஒத்துழைப்புத் தர இசைந்திட அரிவாள் மூன்று அவருக்கு அமைத்துக் கொடுத்தான். அந்தச் செய்தியை அறிந்த ஆறுமுகம் பிள்ளை, இராமனை அழைத்துச் சிதம்பர னாரைக் கலந்து கொள்ளாது எதுவும் செய்ய வேண்டாம் என்று எடுத்துக்கூறி அந்தத் திட்டத்தை அப்போதைக்கு ஒத்திவைத் தார். அதைத் தொடர்ந்து வந்த ஞாயிற்றுக் கிழமையன்று சிதம்பரனாரை அணுகித் தனது திட்டத்தை விளக்கி அனுமதி வேண்டி நின்றனன். சிதம்பரனார் அவர்களைப் பார்த்து, ''கைதிகள் தம்மைக் காப்பது அல்லாது வேறேதும் தீங்குகள் செய்ததுண்டோ இம்மூவர்?'' எனக் கேட்க ''இல்லை'' என்றே பதிலளித்தனர் மூவரும். ''அவ்வாறிருப்பின் அவரைக் கொல்வ தேன்?'' அந்தத் தீமையுள்ள ஜெயிலரை மட்டும் வேலையை விட்டு ஓடும்படிச் செய்தால் போதுமானது எனச் சிதம்பரனார் கூறிட, புலி பதுங்குவது போல அந்த வாரம் சிறை நண்பர்கள் மூவரும் தனது ஆத்திரத்தைத் தணித்துச்சாதுவென வாழ்ந்திருந் தனர்.

தொடர்ந்து அடுத்து வந்த ஞாயிறன்று திடீரென ஜெயிலர் அரங்கு செருக்களமாகியது. அபாய விசிலும் ஆபத்து மணியும் ஒலித்தன. இதனைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்ட சில கைதிகள் பூட்டை உடைத்தனர். தனி ஆயுதம் ஏந்திய காவலர் அரை மணித்துளியில் அங்கு ஓடி வந்தனர். சிறைச் சுவர் மீது ஏறித் தப்பிக்க எண்ணிய கைதிகளை நோக்கிச் சுட்டனர். ஒருவன் உயிர் நீத்தான். வெறும் உடல் கீழே விழுந் தது. பலரைப் பிடித்துச் சிறையுள் அடைத்தனர். பிணம்போல ஜெயிலரைத் தூக்கிக்கொண்டு அநேகர் மருத்துவ மனைக்கே சென்றனர். இவையெல்லாம் கண்டுகொண்ட சிதம்பரனார் தமது அறிவுரைப்படி கொலைத்திட்டம் வெறும்கலகத்திட்டமாக நிறைவேற்றப்படுவதை உணர்ந்து கொண்டார். அன்று இரவி னில் அந்த மத்திய சிறைச்சாலையில் கைதிகட்கெல்லாம் கான் விக்ட் வார்டர்கள் கற்கண்டும் கனியும் கொடுத்துக் களிப்படைந் தனர். பொல்லாத ஜெயிலர் போயினன் என்றே எல்லோரும் கொண்டு இன்புற்றிருந்தனர்.

### கலகத்தின் விளைவு

சிறை அதிகாரியான ஜெயிலர் மருத்துமனையில் சிகிச்சை பெற்று இருந்தான். அவன் நிலைக்குத் துணை ஜெயிலராக

இருந்தவன் ஜெயிலரானான். சிறையினை உடைத்துச் சென்ற தால் பலரும், சிறைக் காவலரைக் குத்தியதாக மூவரும் காவல ரால் குற்றம் சாட்டப் பட்டனர். அவர்களைக் காப்பதற்காகத் தம் ஆருயிர் நண்பரும், கோவை நகரசபை உறுப்பினரும், தமிழறிஞரும் வழக்குரைஞருமான சுப்பிரமணி முதலியார் என் பவருக்கு மடல் ஒன்று வரைந்து கொடுத்து கைதிகள் சார்பில் வழக்காட ஏற்பாடுகள் செய்தார் சிதம்பரனார். நன்றிமறவாத அந்த நண்பரும் கூடவே இருந்த சீனிவாசன் என்ற வழக்கறிஞரு டன் வழக்கினை நடத்தினர். வழக்கின் முடிவில் சிறையினை விடுத்த எதிரிகள் பலருக்கும் ஒன்று முதல் இரண்டு வருடம் வரை கடுங்காவல் தண்டனையினை மாஜிஸ்டிரேட்டு வழங்கினார். அதற்கும் மேலே மேல் முறையீடு செய்யச் சிதம்பரனார் தம் நண்பர்களைத் திரும்ப வேண்ட அவர்களும் செசன்சு நீதிபதிக்கு மேல்முறையீடு செய்து தண்டனையை ஒன்றிரண்டு மாதமாகக் குறைத்தனர். ஆனால் சிறைக்காவல் அதிகாரியைத் தாக்கிய மூவரும் செஷன்சுக்கு மேல் விசாரணைக்கு அனுப்பப்பட்டனர்.

## உயர்நீதிமன்றத்தில் மேல் முறையீடு

சென்னை உயர்நீதி மன்றம் வந்தாரை வாழ வைக்கும், தமிழகம் போலத் தன்னைச் சார்ந்தவர்க்குத் தகுதியான நீதி வழங்கித் தரணியிலே சிறந்த மன்றமெனத் தருபுகழ் பெற்று நூற்றாண்டு கண்டு உயர்ந்திருக்கும் உன்னதமான மன்றம். சென்னை, பம்பாய், கல்கத்தா என்ற மூன்று மாநிலங்களில் மட்டும் முதன் முதலாக நிறுவப்பட்ட சார்ட்டர்டு ஹைக்கோர்ட் (Charated High Court) எனப்படும் நீதிமன்றங்களில் ஒன்று. வெள்ளையர் கறுப்பர் என்ற வேறுபாடின்றியும், விருப்பு வெறுப் பின்றியும் தனி நீதி வழங்குவதில் தனக்கு நிகராகத் தான் என்று இந்த நாட்டில் நிலைத்து நின்று நீதித்துறைக்குப் பெருமை கூட்டிய மன்றம். அத்தகு நீதிமன்றத்தில் அன்று நீதிபதியாக வீற்றிருந்த வெள்ளைக்கார நீதிபதிகளில் இருவரும் (பிரதம நீதி பதி ஆர்னரால் ரைட் மற்றும் நீதிபதி மன்றோ), சிதம்பரனார் தண்டனையை ரத்து செய்ய வேண்டுமென்ற முறையீட்டை முழுவதும் விசாரித்தனர். அரசின் தரப்பில் பாரிஸ்டர் ரிச்மண்ட் வழக்கு நடத்தினார். அரச நிந்தனைக்காக விதிக்கப்பட்ட இருபதாண்டுத் தண்டனை நான்காண்டுகளாகவும், சிவாவைத் தூண்டிவிட்டதற்காகத் தரப்பட்ட இருபதாண்டுத் தண்டனை ஆறு வருடமாகவும் குறைக்கப்பட்டது.

## சிறைக் கலகம் பற்றி விசாரணை

கொலை செய்ய வேண்டுமென்ற வெறியினைத் தணித்துச் சிறைக் காவல் அதிகாரிக்கு மட்டும் துன்பம் கொடுக்க வேண்டும்

என்ற எண்ணத்தில் கலகம் விளைவித்த இராமன், மற்றும் இருவருக்கும் செஷன்சு கோர்ட்டில் வழக்கு நடத்தப்பட்டது. பிள்ளையவர்கள் சொல்லி அவர்தம் நண்பர் சீனிவாசன் என்ற வழக்கறிஞர் இராமன் சார்பாக வழக்கினை நடத்தினார். கைதிகள் வழக்கிற்கு ஆதரவு தரும் வண்ணம் பிள்ளையவர்கள் நீதிமன்றத்தில் சாட்சி சொல்ல முன் வந்தார். தமது சாட்சியத்தில் ''ஜெயில் சூப்பிரண்டெண்டண்டுமடமேபிடிக்கும் கடமையை பூண்டுள்ளான்; ஜெயிலர் தான் நாளும் ஜெயிலை ஆள்கிறான்; அவன் செய்த கொடுஞ்செயல்கள் கூற இயலாதவை. கைதிகளுக்குத் துன்பம் தர வேண்டுமென்ற ஒரே குறிக்கோளில்பழுத்த இலையும் புழுத்த காயும் வெந்நீரில் சேர்த்துக் குழம்பு'' என்று பெயரிட்டு, சாதத்திற்கு வார்க்கிறான்; கைதிகளின் முட்டிகளில் காரணமின்றிக் கம்பால் அடிக்கின்றான். அரசியலுக்கும் இந்தக் கலகத்திற்கும் அணுவளவேனும் தொடர்பு அங்கே இல்லை. இவன் செய்த கொடுஞ் செயல்களின் விளைவாகக் கலகம் பிறந்தது'' என்று சாட்சி சொல்ல வந்த சிதம்பரனாரைக் கண்டு அரசு குற்றவியல் வழக்கறிஞர் (Public Prosecutor) சிறை உமக்கு எப்படி இருக்கிறது என்று கிண்டல் ததும்பக் கேட்டான். அதே முறையில் சிதம்பரனாரும் ''சில நாள் நீ அவண் சென்று அமர்ந்திருந்தால் நன்றாக நலமெல்லாம் காணலாம்'' என்று நவின்றிட, கேட்டோர் பலரும் கொல்லென்றே சிரித்தனர்.

சாட்சியம் சொன்ன பின்னர் திரும்பவும் கொடுஞ்சிறை கொண்டு செல்லப்பட்டார் சிதம்பரனார். இவரை எதிர்நோக்கிய சூப்பிரண்டெண்டண்டு''சாட்சியம்சொன்னாய்;அதன்விளைவாக என்னென்ன நடக்குது என்று எண்ணிப்பார்'' எனச் சவால்விட, சிதம்பரனாரும், ''காணவே வந்துள்ளேன்; காண்கிறேன்;'' என்றார்.

தொடர்ந்து வந்த திங்களன்று சிதம்பரனாருக்குத் தனிச் சிறை தரப்பட்டது. செக்கு வேலைக்குச் சிதம்பரனாரை அனுப்பினால் அங்குள்ள கொடிய கைதிகள் இவரது மொழிகளைக் கேட்டுக் கலகம் புரிந்தாலும் புரிவர். எனவே, சிதம்பரனாரை அவர் சிறையில் இருந்தே நூலை முறுக்கும் வேலைதனைச் செய்யும்படிச் செய்யெனக் காட்சன் மிச்செல்லிடம் சொன்னான். அவ்வாறே மிச்செல்லும் சிதம்பரனார் தங்கிய தனிச் சிறைக்கு அருகிலேயே உள்ள மற்றொரு தனியறையில் இராட்டினம் வைத்துப் பகலில் நூல் முறுக்கும் வேலையினைத் தந்தான். சிதம்பரனாரும் மூன்று நூல் சேர்த்து முறுக்கிக் கொடுத்தார். அப்படி நூல் முறுக்குங் காலத்தில் தமிழ் மற்றும் ஆங்கில நூல்களையும் சுவையுடன் படித்தார். அவருக்கு அமிர்த

பஜார் பத்திரிக்கையும், தமிழ்த்தினசரி மித்திரனும், ஆங்கில தினசரி ''இந்து''வும் சிறையதிகாரிகளின் பார்வையில் படாது தரப்பட்டது.

## தோட்டி வேலை செய்ய மறுப்பு

சிதம்பரனார் சிறையில் பட்ட துன்பங்கள் சொல்லப் போமோ? செக்கிழுத்தார்; தனிச்சிறையிருந்து நூல் முறுக்கினார். அத்தனைக்கும் மேலாக அவரை அதிகமாக இழிவுபடுத்தும் நோக்கம் கொண்டு ஜெயிலர் அவரை அழைத்தான். எப்பொழுதுமே இனிய நா, இன்சொல் வழங்கிடப் பயன்படும். சுடுசொல் மற்றும் இழிசொல் சொல்லுகின்ற நாவினை வெந்நா எனச் சிதம்பரனார் சொல்லுகின்ற முறையிலிருந்தே அந்தச் சொற்கள் அவரை எத்தனை தூரம் சுட்டன எனத் தெரிய வருகிறது. ''இரவில் உனது சிறையறையில் நீ தருகிற உனது மூத்திரம் சேர்ந்த மண் பாத்திரமதனைக் காலையில் எடுக்கும் வேலையை நீ செய்ய வேண்டும். அந்த வேலையை நீ செய்ய மறுப்பதாக எனக்குச் சேதி வந்தது. உன் வழிபற்றி மற்றவரும் மறுக்கின்றாராமே?'' என ஜெயிலர் வெந்நாக் கொண்டு வினவினார். அதற்குச் சிதம்பரனார், ''செக்கு வேலை செய்தல் போதாதென்க் கக்கூஸ் வேலையும் செய்யச்சொல்லுகிறாயா? செய்யேன் எது நீ செய்யினும்'' என எதிர்ப்புத் தெரிவித்துச் செய்ய மறுத்து நின்றார்.

சிதம்பரனார்க்கு என்று இரகசியமாக "இந்து" பத்திரிக்கையும் வீட்டிலிருந்த கடிதமும் இனிய தின்பண்டமும் எடுத்து வந்து கொண்டிருந்த இராமையா என்ற வார்டரை, வழியில் ஒரு ஹெட் வார்டரை வைத்துப் பிடித்திடச் செய்தான் ஜெயிலர். பிடித்த மறுநாள் காலை ஜெயிலர் கோபக்கனல் வீச வந்து சிதம்பரனாரைச் சூப்பிரண்டெண்டண்டிடம் அழைத்துச் சென்றான். சூப்பிரண்டெண்டண்ட் சிதம்பரனாரின் மனைவியின் கடிதத்தைப் பார்த்து திடுக்குற்றவனாய், சிதம்பரனார் ஜெயிலிலிருந்து அனுப்பிய கடிதம் மனைவியைச்சேர்ந்ததாகக் கடிதத்தில் கண்டுள்ளதைச் சுட்டிக்காட்டி, ''சிறையிலிருந்து என் அனுமதியின்றி எப்படிக் கடிதம் எழுதப்பட்டது? என்று வினாத் தொடுத்தான். அதற்குப் பதிலளித்த சிதம்பரனார் தமக்கே உரிய வழக்கறிஞர் மொழி கொண்டு, ''நான் எழுதுவதுபோல என் பெயரை வைத்து வேறெவரேனும் எழுதியிருக்க முடியும்; எப்படி யான் இதற்கு உத்தரவாதி? செப்புக ஐயா தெளிந்து நீ'' என்றார். ''இந்த மறுமொழி ஒன்றே உன்னைத் தூக்கிலிடப் போதுமானது'' என்று சீற்றமுடன் செப்பினான். ''இறைவன்

திருவருளால் நான் செய்த பூர்வ ஜென்ம பலத்தால் நீ நீதிபதி யில்லை; என்னைத் தூக்கிலிடும் அதிகாரம் உனக்கு இறைவன் ஈந்தான் இல்லை'' என்று சிதம்பரனார் சிறையதிகாரிக்குச் சாட்டைமொழி சொன்னார். வெட்கத்தில் மூழ்கியவன்போல கோபத்தில் மூழ்கிய அந்தச் சிறை அதிகாரி சிவந்த முகமேந்தி வந்த வழி சென்றான். யாரிடமோ உள்ள சினத்தை யாரிடமோ காண்பிப்பது இயலாதவன் செயல். அவ்வழியே ஆங்கில நாள் இதழ் ''இந்து'' முதலிய செய்தித்தாட்களை, சிறை விதிகளைச் சிறை செய்துவிட்டுச் சிதம்பரனார்படித்திட விடுதலை கொடுத்த வார்டர் மேல் வழக்குத்தொடரப் பட்டது.

சட்டத்தின் வளையா நிலைமை அங்கு வளம் பெற வார்டருக்கு மூன்று திங்கள் கடுங்காவல் வழங்கப்பட்டது. வெய்யிலில் கல்லுடைக்கும் வேலை அவனுக்கு விருந்து போல ஜெயிலர் வழங்கி நின்றான். அவனது சிறைத் தண்டனை முடிந்த பின்பு சிதம்பரனார் அவன் செய்த சிறந்த உதவிக்காகப் பெருந்தொகை ஒன்று பேணி அளித்திட அவனும் பெருந்தனம் தேடிட வணிகம் செய்து தன் வாழ்விற்கு வழி வகுத்துக்கொண் டான். மற்றொரு நாள் அந்த ஜெயிலர், சூப்பிரண்டெண்டண் டுடன் சிதம்பரனார் அறையினைச் சேர்ந்து, ''சிதம்பரனாருக்கு அதுவரை வேலை ஒன்றும் தரவில்லை. வேலை படிக்க ஒரு வாரம் தந்து விட்டுப் படித்தபின்பு அந்த வேலையைச் செய்வது தான் கைதியின் தண்டனை'' என்றும், ''சிதம்பரனாருக்கு ஒரு திங்கள் முடிந்த பின்பும்கூட வேலை ஏன் தரவில்லை?'' என்றும் வின வினான். சட்டத்தினைத் தம் வாழ்வின் விளிம்பாகக் கொண்டு சுகமான வாழ்க்கை துணை சேர அதனைச் சொகுசான தொழி லாகச் சுவையோடு செய்திடாமல் சிறையினைச் சேர்ந்திட்ட சிதம்பரனார் சட்டத்தின் மொழியினிலே அவனுக்கு விடைகூறித் தமக்குத் தீவாந்தர தண்டனை தரப்படவில்லை என்றும் கடுங் காவல் தண்டனை இல்லாததால் கடுந்தொழில் செய்யமாட்டேன் என்றும் மறுத்தார். கண்களை மறைத்திட்டு ஒருவழிப்பாதை யிலேயே செல்வதற்கு மட்டுமே கற்றுக்கொண்ட குதிரையைப் போலக் கொடுமை ஒன்றையே கற்றறிந்த சிறையதிகாரியும் செய்வது என்ன என்று தெரியாது, ஜெயிலரைப் பார்த்து, ''இனி நீ அவனிடம் ஒன்றும் சொல்ல வேண்டாம்'', என்று சொல்லிச் சென்றான்.

ஏற்கெனவே நடந்த கலகம் பற்றி விசாரிப்பதற்காக ஜெயிலில் இன்ஸ்பெக்டர் ஜெனரல் வந்திருந்து, ஜெயிலரைக் குத்திய செயற்கும், அன்று ஜெயிலை உடைத்த செயற்கும்

காரணம் என்னவென்று சிதம்பரனாரை விசாரித்தான். அந்த விசாரணை முடிவில் அந்தக் கலகத்தின் அடிப்படை அந்த ஜெயிலர் செய்த சிறுமைத்தனமே என்பதனைத் தெளிவரத் தெளிந்துகொண்ட காரணத்தினால், காட்சன் என்ற அந்தச் சிறையின் தலைமையதிகாரியை அழைத்து,''அரசியல் கைதிகளை நயமாக நடத்தினால் நன்றாக நம்மோடு ஒத்துழைப்பர்; அவர்க்குச் சிறுமையளிப்பின் அவரும் நமக்குச் சிறுமை நல்குவர். நம்மால் ஜெயிலை நடத்த முடியாமல் போகும். ஆதலால் அவனை நீ அன்போடு நடத்து. வேலை என்ற பெயருக்கு உன்னுடைய அலுவலகத்திற்கு வேண்டிய விண்ணப்பத்தாட்களை அச்சிட, அச்சுக் கோக்கும் தொழிலைச் செய்யுமாறு ஆணையிடுக'', என்று சொல்லி ஏகினார். அந்தக் கருத்துரைப்படித் தன் நிலைமையைக் கண்டு கொண்ட சூப்பிரண்டெண்டண்டு சிதம்பரனார் நூற்கும் வேலையை முடித்து அச்சுக் கோர்க்கும் வேலையைக் கொடுத்தான். அச்சுத் தொழிலாளியாக மாறிய சிதம்பரனாரும், அன்று முதல் ''தாமே அந்த ஜெயிலுக்கு அரசன்'' என்று அகமகிழ்ந்து கூறுகின்றார்.

## சிறையதிகாரி செய்திட்ட கொடுந்துயர்

சிறையதிகாரியாக இருந்த காட்சன், மேலதிகாரி தந்த முறையான அறிவுரையை ஏற்றுத் தன்னை மாற்றிக் கொண்டான், ஒவ்வொரு காலையும் ஒவ்வொரு மாலையும் தன் முறையாகச் சிதம்பரனார் சிறையறைக்குச் சென்று அன்புடன் அவரது உணவு மற்றும் இதரத் தேவைகளைப் பற்றி இதம்பட விசாரித்து வந்தான். சின்னாள் சென்னை மாகாணச் சிறைகளின் இன்ஸ்பெக்டர் ஜெனரலாக அவனுக்குப் பதவி மாற்றமாக அச்சிறையின் டாக்டர், சூப்பிரண்டெண்டண்டாகப் பணி ஏற்றான். ஏற்ற சில நாளில் அவன் ஆற்றிய கொடுமைகள் எண்ணவொண்ணா; எழுத முடியா; அக்கொடுமைகளின் தலைச்செயலாகத் தடியினை எடுத்து முன்பு ஜெயிலரைக் குத்த முயன்ற மூன்று கைதிகளில் இருவரைக் கண்மூடித்தனமாக அடித்தான். அதனைக்கண்டு மனம் பதைபதைத்த சிதம்பரனார் தன் தந்தையை உடனே வரும்படித் தந்தியனுப்பி வரவழைத்தார். தந்தையிடம் ஜெயிலர் செயலெல்லாம் செப்பி மேலும் அந்த ஜெயிலர் கைதிகள் சிலரைத் தூண்டித் தன்னை அடிக்க முயல்வதாகவும், அதற்காகப் பெரிய கலெக்டர்பால் பிராது கொடுக்கவும் கேட்டுக்கொண்டார். அந்த உரையாடலை ஒளிந்து நின்று கேட்ட டெபுடி ஜெயிலர், நொடியில் ஜெயிலர்பால் நவின்றனன். அந்தச் சேதி கேள்விப்பட்ட தற்காலிகச் சூப்பிரண்டெண்டண்டான டாக்டர் உடனே சிதம்பரனாரைக்

கூப்பிட்டனுப்பி, தந்தையிடம் குறைகள் பல, தொகுத்துக் கூறியது உண்மையா? என வினவ, சிதம்பரனாரும் ''அந்தக்கூற்று உண்மை''யென அஞ்சாமல் ஒப்புக்கொண்டார். ஏற்கெனவே பிறப்பித்திருந்த மேலதிகாரிகளின் உத்தரவுகளை உணர்ந்திருந்த அந்த டாக்டர் தான் பயந்து தவறுகள் செய்திடும் துணிவில்லாது ''யானிவண் இருக்கிறேன்; எதற்கும் நீஅஞ்சேல்; பாலுஞ்சோறும் பரிந்துனக்களிக்கின்றேன்; பிராது வேண்டாமெனப் பிதாவிடம் சொல்லிப் பிராதை நிறுத்தெனப்'' பேசினான். மாற்றானை மயங்கவைக்கும் மனத்திடம் கொண்ட மாமுனியாய்த் திகழ்ந்த சிதம்பரனார் சிறையினில்கூட சிறந்த ஒழுக்கத்தினை நிலை நிறுத்தினார், என்பதற்கு இந்நிகழ்ச்சி ஓர் எடுத்துக்காட்டு. அன்று மாலை முதல் டாக்டர் பால்சோறு வழங்கி மாலையில் சிதம்பரனார் உண்ணுகின்ற காலைத் தன் மனைவியுடன் வந்து சிதம்பரனாரிடம் பற்பல இன்புறப் பேசினான். பின் அதுநாள் முதல் சிதம்பரனாரைச் சீருடன் பேணியே காத்திட்டான்.

தற்காலிக மாற்றுப் பதவியிலிருந்து விடுபட்டு மீண்டும் தனது பதவிக்குக் காட்சன் வந்தான். நடந்தது யாவும் கேள்வியுற்று நலனே என்று பாராட்டினான். அதுகாறும் சிதம்பரனாருக்குத் தனியே சமைத்துச் சாப்பாடளித்த பார்ப்பனக் கைதி தன் ஊர்ப் புறம் சென்றான், செய்தி அறிந்ததும் ஜெயிலர் மிக்சேல் கைதி ஒருவனைக் கால்முகம் கழுவச் செய்து விபூதி சென்னியில் அணிந்து மெய்யில் வெளுத்த வேட்டி உடுத்திக் கஞ்சியும் உணவும் கொண்டு வரச் செய்தான்.

''சாதி இரண்டொழிய வேறில்லை; சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ள படி''

என்ற மூதுரை உணர்ந்த சிதம்பரனார் சாதி வேற்றுமையைப் பாராதவர். எனினும் தனியே சமைத்து வந்த புனித சைவ உணவைக் கொள்ளவே விரும்பினார். அதன் காரணம்பற்றித் தமக்கு உணவு கொண்டு வந்தவன் ஊரும் குலமும் என்ன வென்று விசாரித்திட அவன் மதுரையைச் சார்ந்தவன் என்றும் தன் குலம் சைவக்குலம் என்றும் பதில் பகன்றபோது அவன்ஜாதி என்னவென்று மீண்டும் வினவிட, இயல்பாகத் தன்னை முதலியார் ஜாதி என்று அவன் அறிவித்தான், ''என்னடா முதலி நீ'' என்று திரும்பவும் வினவி ''பார்ப்பான் அல்லது பாண்டி வேளாளர் சாப்பாடாக்கித் தந்தால்தான் உண்பேன் என்று ஜெயிலர்பால் சென்று செப்பிடு'' எனச் சொன்னார்.

வேடிக்கைக்காகப் பிறந்த சவால் வினையாக மாறி மூன்று நாள் அவரை உண்ணாவிரதம் இருக்கச்செய்தது. சேதி கேட்டதும் காட்சன் சிதம்பரனார் முன் தோன்றினான். நடந்ததைச் சிதம்பரனார் நவின்றிட காட்சன் வெறுப்படைந்து சினமுற்று ''ஆறுமுகம்பிள்ளை யாரிடமும் உண்கின்றானே - கூறுக-நின்னுடைய குலந்தான் மேலோ'' என்று கேட்டான். அவன் சொல்லினைச்செவி மடுக்காது சிதம்பரனாரும் சிந்தனையில் ஆழ்ந்து நின்றிட்டார். என்ன செய்வது என்று புரிய இயலாத நிலையில் வெளியினின்று ஒரு பார்ப்பனன் ஒருவனைப் பிடித்து அழைத்து வந்து சிதம்பரனாருக்காக உணவினையாக்கியளித்து அவர் சாப்பிட்டபின் தனக்குச்சேதி சொல்லுமாறு காட்சன் ஜெயிலர்பால் சொல்லிச் சென்றான். அந்த உத்தரவு பிறந்த அரை மணி நேரத்தில் அந்தணன் ஒருவன் உணவு சமைத்துக் கொண்டு வந்து தந்திட அதனை உண்டுமகிழ்ந்தார் சிதம்பரனார். அதன்பின்னர் பார்ப்பனக் கான்விக்டாக வந்த ஒரு சமையல்காரன் உணவினை வழங்கிட அதனை உண்டு சிறையில் வாழ்ந்தார்.

சிறையில் இருந்தகாலை காட்சன் ஒரு நாள் அழைத்து, ''கான்விக்டு ஆபீஸர் வேலையினைப் பார்த்தால் ஆண்டொன்றுக்குத் திங்கள் மூன்று தண்டனை காலத்திலிருந்து குறைக்கப்படும், மற்றும் உறவினர் காண்டலும், கடிதம் எழுதுதலும் பெறுதலும் அனுமதிக்கப்படும். தவிர மாதம் ஒருமுறை வேலையும் இல்லை. மேலும் நல்ல உடையும் அரிசி உணவும் வழங்கப்படுமென்றும் இத்தனை வசதிகள் கொண்ட கான்விக்டு ஆபீஸர் பொறுப்பினை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கின்றாயா?'' என்று சிதம்பரனாரை வினவினான். ஆனால் சிதம்பரனார் தனது குறிக்கோள் ஒன்றையே மனத்தில்கொண்ட கொள்கை வீரராகத் திகழ்ந்த காரணத்தினால் சிறை ஆள்கைக்கு உதவிட சிறை புகவில்லை என்றும், மற்றும் சிறையில் நடக்கின்ற ஆட்சிக்கு இடையூறு செய்திடவே தாம் வந்ததாகவும் பதில் இறுத்தார். கொள்கைபற்றிச் சிறை புகுந்த காரணத்தினால் தமக்கு வசதியும் வளமும் வேண்டாம் என்று வெறுத்து ஒதுக்கினார். எந்த ஒரு வெளிநாட்டினரை, வேண்டாமென்று வெறுத்து ஒதுக்கிச் சிறை சென்றாரோ அந்த மனிதருக்கு ஏவல் தொழில் செய்ய மறைமுகமாக வலைவிரித்த சிறையதிகாரியின் திட்டத்தை நன்குக் கண்டுகொண்டு தமக்குக் கான்விக்டு ஆபீஸராக எள்ளளவும் விருப்பமில்லை என்று எடுத்துரைத்தார். தண்டனை பெற்றுச் சிறை ஏகுகின்ற தரணி மக்கள் ஒவ்வொருவரும் தம் தரம், தகுதியினை முன் வைத்து தனக்கு இந்த வகை வகுப்

சிறையில் தர வேண்டும் என்று தணியாத ஆர்வத்தோடு கேட்கின்ற இந்நாளில், வந்த வசதியை, தானாக வந்த சுகத்தைச் சட்டத்தின் திட்டத்திற்கு உட்பட்டு வழங்கப்பட்ட சௌகரியத்தை வேண்டாமென்று உதறித் தள்ளியது அந்த வெள்ளையுள்ளம்.

சிதம்பரனாரை எவ்வாறாவது மடக்க வேண்டும் என்ற மனம் கொண்டனர் மேலை நாட்டினர். ஒரு நாள் மாலை சிதம்பரனார் மருவிய பின் மிக்சேல் என்பவன் சிறைக்குள் வந்து ஆலோசனைகள் பல அள்ளி வீசினான். அடிக்கடித் தன்னை மடக்கிட நடக்கிற நாடகத்தை வெறுத்திட்ட சிதம்பரனார் வெகுளி மேம்பட அவனைப் பார்த்து, ''நீயோ புத்தி நிகழ்த்துகின்றவன்? வாயைமூடடா மதியிலி, உனக்கும் உன்னப்பனுக்கும் உன் சூப்பிரண்டெண்டண்டு,உன்னையாள் கவர்னர் மன்னாதியர்க்கும் புத்திகள் கூறும் பெற்றிமையுடையேன்'', என்று பல மொழிந்தார். இந்தச் சேதியினை ஜெயில் சூப்பிரண்டெண்டண்டு பால் அவன் எடுத்துச்சென்று சொல்ல மறுநாள் சூப்பிரண்டெண்டண்டு சிதம்பரனாரை அழைத்துத் திட்டிச் சிறுவார்த்தைகள் செப்பியதற்காக இரு நெடுவாரம் அபராதம் என்றான். ஒரு வாரம் சென்று, சிதம்பரனார் கண்ணனூர்ச் சிறைக்கு மாற்றப்பட்டார்.

## கண்ணனூர் சிறைவாசம்

சீரிய சிந்தனையும் சிறந்த பண்பும் நேரிய மொழியும் நிறைந்த பண்பும் கூறிடும் இன் சொலும், சிறையாட்சி செய்த அதிகாரிகளை ஆர்த்தனவோ? என்னவோ? அன்றி, தேசிய விடுதலை என்ற தீபந்தனைத் தேகத்தில் ஏந்தித் தேசத்திற்காகத் திசையெங்கும் விடுதலையோசை எழுப்பியது இயல்புதானே என்று வெள்ளையர் கருதினரோ என்னவோ! சிதம்பரனார்க்குச் சிறந்த செம்மையான சூழ்நிலை சேரப்பெற்ற கண்ணனூர்ச் சிறை வாசம் சேர்ப்பிக்கப்பட்டது. அங்குப் புறப்படுகின்ற நாளன்று பூரிப்புக்குப் பயந்து பொறுமையற்ற தன்மைக்கு உறவாகி இனத்தின் கோரிக்கைதனைச் சிறைப்படுத்திய ஜெயிலர் சிதம்பரனாரின் அறையினை வேகமாகச் சார்ந்து ''வா'' என்று அழைத்தான். ''காப்பது உன் கடன் கனகமணித் தேவா'' என்று அந்த இறைவனைத் தொழுது அவன் பின்னே துரிதமாகச் சிதம்பரனார் நடந்து தொடர்ந்தார். பழுதிலர் வெளிவாயில் பக்கம் சென்றதும் வெளியே ரிசர்வ் போலீஸ் வெள்ளை ஒளி இன்ஸ்பெக்டர் ஒருவனும் கறுப்பு கான்ஸ்டபிள்கள் இருவரும் இவர் வரவை எதிர்நோக்கிக் காத்திருந்தனர்.

இட்டுச் செல்லலாம் என்று ஜெயிலர் கட்டளையிடச் சிதம்பரனார் கையினைத் தொட்டு விலங்கினை இட்டு அவரைத் தம்முடன் கூட்டிச் சென்றனர். செல்லுகின்ற பொழுது தான் கண்ணனூர்ச் சிறையினை நன்னுதற்காக அழைத்து வருவதாக அம்மூன்று காவல்காரர்களும் அறிவித்தனர். அன்று மாலை அச் சிறையினை அடைந்த பொழுது சிதம்பரனார்க்குக் காரண்டைன் பிளாக் ஓரமோர் அரங்கு அளிக்கப்பட்டது, அவர் வசிப்பிற்காக. அந்த பிளாக்கின் எழிலினைப் பார்த்து வியந்திட்ட சிதம்பரனார் அதுபோல அழகான அரங்கு எந்தச் சிறையிலும் இல்லை என்று எண்ணம் கொண்டார். நடுவினில் தோட்டம் நான்கு பக்கமும் தரையினைத் தொடுமளவு கிளைகள் விரிந்து பரந்த பத்துப் பன்னிரெண்டு மரங்கள். அந்த மரங்களின் அழகினை அள்ளிப் பருகும் வகையில் அமைக்கப்பட்ட நல்ல நீண்ட வராந்தா. (முன்வாசல்) நான்கு பக்கமும் காலி நிலம். அங்குள்ள மூலை ஒன்றில் நீர் மொள்ளக்கூடிய கிணறு. மற்றும் குளியல், கழிவறைகள். வேலை செய்கின்ற கைதிகளுக்கு விரும்பி நிழல் தருகின்ற வேப்ப மரங்கள். நடுவில் அமைந்துள்ள பூங்காவில் நடனமாடிடும் குரோட்டன்ஸ் செடிகள். மயக்கும் மணம். மனம் இனிக்கும் தேனொடு வீசும் முல்லை, பிச்சி, மல்லிகை, ரோஜா தவிர, அல்லும் பகலும் அலரும் செடிகளும் அழகுடன் கொலுவீற்றிருந்தன. அந்தக் காட்சி மண்ணுலகின் சொர்க்கமெனச் சொல்லும்படி அமைந்திருந்தது. எல்லாமே இழந்துவிட்ட மனிதன் இயற்கை மீது கொண்ட காதலால் அந்தப்பூவை, செடியை, கனியை, மரத்தை, பச்சைப் புல்லை, பாடும் வண்டினை, முல்லை மலரை, மகிழும் மொட்டினைக் கண்டதுமே எல்லா இன்பங்களும் தன் கையில் கொண்டதாகக் களிப்படைந்து தன்னை மறக்கின்றான். இயற்கையைப்பாட எழுந்து நின்ற இன்பப் புலவர்கள் யாவரும் தன்னை மறந்து இயற்கையோடு இணைந்து நிற்பதை இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன. எந்தவிதப் பயனுமின்றி எந்தவித எதிர்ப்பயனும் நோக்காது இறைவன் சொன்னபடி தன் கடமையினைச் செய்து இந்த உலகத்திற்குத் தன்னையே தருகின்ற இயற்கை வளத்தினை, இயற்கை அல்லது இறைவன் ஒரு கர்ணன் என்பதா? அத்தகு இனிய சூழ்நிலையில் தம்மைக் கொண்டு சேர்த்ததற்கு இறைவனுக்கு எண்ணற்ற நன்றியினை எடுத்துக்கூறிவிட்டு அச்சிறைக்குத் தாம் வந்தது தமது நல்வினை என உளம் கருதி நின்றார் சிதம்பரனார்.

இயற்கையைக் கண்டதனால் தம்மை அந்த இன்பத்தில் இழந்த போதிலும் தமக்கே இயல்பான குணமான மற்றவர் நலனை மனதில் ஏந்தி அவருக்காக வாடுகின்ற குணத்தினை

அவர் இழந்தாரில்லை. நஞ்சினை ஒத்த அந்த கலெக்டர் விஞ்சு சிதம்பரனாரை கண்ணனூருக்கு அனுப்பிய மறுநாள் திருநெல் வேலியில் தீயிட்ட வழக்குகளில். ஆண்டுகள் தண்டனையாகப் பெற்ற சங்கரநாராயணன் முதலாக அச்சிறையிலிருந்த அனை வரையும் டெபுடி ஜெயிலர், கூட இருந்த கைதிகளைக்கொண்டே கம்பு கொண்டு அடித்த கொடுமையான செயல்கள் கேட்டு மிகவும் துன்புற்றார். ரைஸ் என்கின்ற சிறையதிகாரி தும்புகளை ஒழுங்கு செய்கின்ற வேலையினைச் சிதம்பரனாருக்கு நல்க, அதனை அரங்கின் உள்ளிருந்தே நிறைவேற்றி வந்தார். கோவைச் சிறையில் அங்கிருந்த இரண்டரை ஆண்டு காலமும் அவருக்கு ஆவன செய்து வந்த அவர் தம்பி கே. அ. இலக்குமண பிள்ளை கண்ணனூருக்கும் சலியாது வந்து உதவிட ஓடி வந்தார். அங்கிருந்த கணபதி பிள்ளை என்பவரிடம் ஏற்பாடுகள் செய்து ''வேண்டிய வெல்லாம் வேண்டியவர்க்களிக்க வழி செய்து சென்றார்.'' நாளிதழும் நாடிய பிறவும் நலம்பெற வந்து சேர்ந்தன. குணபதியான கணபதி பிள்ளை உதவியால் சிறையில் இருந்த பல வார்டர்களும் டவர் ஆபீஸரும் பழக்கமாயினர். என்றும் இனிய சொல்லும், நின்று மயக்கும் கனிவான கண்ணும் கொண்ட சிதம்பரனாரின் அன்பு வலையில் இவர்கள் சிக்கி மகிழ்ந்தனர் என்பதில் வியப்புமில்லை. சிறைக்கைதி என்ற சிந்தனை அகற்றி, செம்மையான சிறந்த வணிகர் என்ற சிறப்பு மேலிட பண்டங்கள் நல்கினர். வழக்கப்படி நிதம் மரியாதை செய்தனர்.

தும்பு வேலையைத் தொலைத்து அச்செழுத்து கோர்க்கும் வேலை கொடுக்கப்பட்டது. இவ்வாறான நிலையில் ஓர் இரவினிலே நள்ளிரவு நேரத்திலே அரங்கில் அவர் உறங்குகின்ற காலத்தில் அவர் பெயர் சொல்லிச் சத்தமிட்டு அவரைச் சிறை யின் ஜூனியர் சப் அஸிஸ்டெண்டு சார்ஜண்ட் எழுப்பினார். கலெக்டர் ஆஷைத் தெரியுமா என்று அவன் வினவிட, நன்றாய்த் தெரியும் என இவர் பதிலிட, எப்படி என்று மீண்டும் வினா தொடர்ந்திட ''யான் இவண் ஏகியதற்கும், தூத்துக்குடியில் தோன்றிய சுதேசிக் கப்பல் கம்பெனி செத்தொழிந்ததற்கும் அவன் காரணம்'' என்று மறுமொழி தந்தார். அந்த ஆஷ் துரையை ஒருவன் அதற்கு முன்தினம் மணியாச்சி சந்திப்பில் சுட்டுக் கொன்று தன்னையும் சுட்டுச் செத்தான் என்றான். அதைக்கேட்ட சிதம்பரனார் நல்ல செய்தி சொன்ன அவன் நலம் பெறுவான் என்று வாழ்த்தும் வகையில் எடுத்துப் பேச, அவன் அடங்காக் கோபமுற்று சிதம்பரனார்க்கு அந்த ஆண்டு இங்கிலாந்து அரசு முடிசூட்டுவிழாவன்று விடுதலைத்தரப்பட

மாட்டாது எனப் பகர்ந்தான். சற்றும் மனந்தளராத சிதம்பரனார் விடுதலை அன்றும் இல்லையெனினும் ஒன்றே என்று கூறி நின்றார்.

### பணம் என்றால் மயங்காதோர் பாரினில் உண்டோ?

கண்ணனூர் சிறையில் டவர் ஆபீசராக இருந்தவன் சிதம்பரனாரிடம் நிறைய செல்வம் குவிந்திருப்பதாக யாரோ சொல்லக் கேட்டு அதனைச் சிதம்பரனாரிடமிருந்து பறித்துக்கொள்ள ஆசை கொண்டே, வேசை போல, அவர்பால் தினமும் வந்து சிரித்துப் பேசித் தின்பன கொடுத்துப் பண்புகள் செய்தான். அவனது எச்சில் ஆசையினைத் தெரிந்து கொண்ட சிதம்பரனார் சிறிது சிறிதாக அவனுக்குக் கடுமையான மறுமொழி தந்து அவனது ஆசையினை நிராசையாக்கினார். எதிர்பார்த்தது கிடைக்காத ஏமாற்றத்தால் எத்தனையோ இடர்கள் ஏற்படுத்தினான் அவன். இனியன செய்த வார்டர்கள் எல்லாம் வராமல் செய்தான். சைவச் சமையலறையில் தனிப்படச் சிதம்பரனார்க்குச் சமைத்த உணவினைச் சாதியில் பார்ப்பனன் ஒருவன் கொண்டு வரச் செய்தான்; சிதம்பரனார் உறங்குகின்ற அரங்கினை அவரே பெருக்க வேண்டும் என்று ஆணையிட்டான். அதனை மறுத்த சிதம்பரனார், சிறை இன்ஸ்பெக்டர் ஜெனரல் வந்தபோது இவனது செயல்கள் அத்தனையையும் சொன்ன பின்பு தான் அவருக்கு நியாயம் கிடைத்தது. ஒவ்வொரு நிலையிலும் தமது உரிமைக்காகப் பாடுபடுவதுடன் அன்றி, நீதிக்காகப் போராடி நின்றார் சிதம்பரனார். தாம் நடப்பது நீதி வழியில் என்ற உறுதியைக் கொண்ட பின்பு "எவர்வரினும் நில்லேன் அஞ்சேன் எடுத்துரைப்பேன்" என்று இக்காலக்கவிஞர் பாடியபடி எக்காலத்தும் தயங்காது தவறினை இடித்துக் காட்டி நியாயத்தினை எடுத்துக்கூறி உண்மையை எடுத்துக்காட்டினார் என்பதற்கு மேற்சொன்ன நிகழ்ச்சி எடுத்துக்காட்டன்றோ?

### சிறையில் செய்யப்படும் சித்தரவதைகள்

முற்சொன்ன நிகழ்ச்சிக்குப்பின்பு சைவர் ஆக்குப்புரையில் தனியான உணவு சமைக்கப்பட்டுச் சிதம்பரனார்க்கு மட்டும் தரப்பட்டது. ஆனால் சிறையில் கைதிகளாய் இருந்த மற்ற அந்தணர்க்கோ சைவர்க்கோ அந்த உணவு வழங்கப்படவில்லை. மாமிசச் சமையலறையில் ஆக்கிய உணவே அளிக்கப்பட்டது. வாயில்லாப் பூச்சிகளாய் வாழ்ந்த மற்றையோர் எதிர்த்து எதுவும் சொல்லப் பலமற்றுப் போயிருந்தனர். எந்தச்சேதி இயம்பினாலும் அடி விழும், அந்த அடியும் வெற்றடி அன்று; கம்பளம் போர்த்தி அந்தக்கம்பளத்தின் உள்ளே உடம்பு வெம்பும்

அளவிற்கு அநேகர் கூடி அடிப்பது அந்தச் சிறையிலன்றி வேறு எந்தச் சிறையிலும் நடக்காத கொடுமை என்பதனைக் கண்டார். அடிப்பவர் கைதிகள், அடி பெறுவோர் கைதிகள். அடிக்கச் சொல்லுவோர் சிறையினையாளும் சிறையதிகாரிகள். இந்த அடிக்குப் பயந்தே மற்றவர்கள் தமது குற்றம் குறைகளை எடுத்துக்கூற மயங்கி நின்றார்கள். இன்றைய நிலையிலும்கூட தண்டனை பெற்றுச் சிறைக்குள் செல்கின்ற கைதி ஒருவனைச் சிறையினுள் நுழைந்த பின்பு மாற்றுடையணியச் செய்த பின்பு குரூரமான ஒரு அடி கொடுப்பதற்காக ஒரு ஆள் அமர்த்தப் பட்டிருப்பது சிறையைப் பற்றித் தெரிந்த ஒரு சிலருக்கே தெரிய வரும். அந்த அடி கொடுப்பதற்குத் தகுதியான காரணங்கள் பல இருக்கலாம், எனினும் அஹிம்சையைப் பேசுகின்ற இந்த நாளில் அவ்வாறு அடி கொடுப்பது நீதிக்குப் புறம்பானது. இந்த அடியினைப் பற்றிக் குறிப்பிடுகின்ற சிதம்பரனார் ''பிரிட்டிஷ் இந்தியப் பெரிய தேசத்தில் இருக்கும் ஜெயில்களின் இயல்புதான் இஃதே. ஆயிரம் பேர் முன் அடித்துக் கொல்லினும் போயொருவன் உண்மை புகலான்'' என்று மனம் வெதும்புகின் றார். சிறையதிகாரி பற்றி மேலதிகாரியிடம் சிதம்பரனார் பிராது கொடுத்தார் என்பதற்காக அந்தச் சிறையதிகாரி அவருக்கு அச்சுக் கோர்க்கும் வேலையினைக் கடுமையாகச் செய்யும்படி கட்டளையிட்டான். அந்தக் கட்டளையினை எந்த அளவு மீற முடியுமோ அந்த அளவு மீறி அந்நிலையிலும் மெய்யறிவு, மெய்யறம் என்ற இரு நூல்களை இயற்றினார். சிதம்பரனாரை மேலும் திகிலடையச் செய்யக் கொடூர உடம்பு கொண்ட கைதி ஒருவனை இவருடைய திண்ணைக்கு அயல் உள்ள திண்ணையில் இரவில் படுக்கச் செய்து, அந்தக் கொடூர மானவன் ''கம்பளம் போர்த்திக் கைதிகளாலே கம்படி கொடுப் பவனோ, கால் மிதி கொடுப்பவனோ, குத்திக் கொல்பவனோ, கொடுந்துன்பம் இழைப்பவனோ, எத்தைச் செய்வனோ'' என்றெல்லாம் சிதம்பரனார் எண்ணிக் கலங்கிடச் செய்தான்.

சிறையில் சிதம்பரனாரைக் காண வந்த பிச்சனும் கண்ண னூர் இரயில்வே காண்டிராக்டர் கணபதி பிள்ளையும் இந்தச் செய்தி கேட்டுச் சிதம்பரனாரைச் சந்தித்தனர். அவர்கள் வந்த நிலையின் காரணமாக, கொடூரம் விளைவிக்க அனுப்பப்பட்ட கைதி எப்படியோ சிலநாளில் சிதம்பரம் வசம் ஆகினான். பழகி னோர் பிணிக்கும் தகையவாய், பண்பான பணிவும் அன்பும் பாசமும் கொண்ட சிதம்பரனார் தம் அன்பில், கொடுமை தன் உடைமையாகக் கொண்டிருந்த கைதி, இனியனாக மாறியது இயற்கையே.

பின்பு ஜெயிலில் சூப்பிரண்டெண்டண்டாக வந்திருந்த சாமி யார் என்பவன் சிதம்பரனார்க்கு, அளவிலா அன்பு கொண்டு, அரிசி உணவு தந்து, நூல்கள் படிக்கவும் நூல்கள் எழுதவும் அனுமதி தந்தான். சிறையில் இருந்தபொழுதே தன் உரிமைக்கு மட்டு மின்றி மற்றோருக்காகவும் வாதாடி வெற்றி பெறும் வகை கொண்டிருந்தார் சிதம்பரனார். புரொக்ளமேஷன் ரிமிஷனும், எட்வர்டு ரிமிஷனும், ஜார்ஜ் ரிமிஷனும் என்கின்ற ''தண்டனை ரத்துப்பிரகடனம்,'' மற்றும் ''தண்டனை ரத்து உத்தரவின்'' பலனைக் கொடுஞ்சிறையில் இருந்த சங்கர நாராயணன் முதல் பலருக்கும் ஆங்கிலச் சிறையதிகாரிகள் அளிக்காமலிருந்ததை ''இந்து'' பத்திரிக்கைக்கு அவர் எடுத்து எழுத அந்தப் பத்திரிக் கையும் அதனைப் பிரசுரிக்க அவர்கள் அனைவரும் விரைவில் விடுதலை செய்யப்பட்டனர். விடுதலை பெற்ற பின்பு அவர்கள் சிதம்பரனார் இல்லத்திற்குச் சென்றபொழுது விருந்தோம்பலில் சிறந்திட்ட சிதம்பரனார் குடும்பத்திலிருந்து, அவரது மைத்துனர் அவர்கட்கெல்லாம் விருந்தளித்துப் பாராட்டினார். சிறை சூப்பிரண்டெண்டண்டு ஆக இருந்த சாமியார் மேற்றிசை சென்ற போது மற்றொரு வெள்ளை டாக்டர் சிறையின் சூப்பிரண் டெண்டண்டு ஆகப் பதவி ஏற்றார். மறுநாள் காலை 9 மணிக்கு மருவுறு கடவுளை மகிழ்ந்து சிதம்பரனார் கடவுளின் இனிய காட்சியில் ஆழ்ந்து உடல், உளம் நிறைந்து அவன் ஒளி உள்ளே நின்றிருந்தார். அப்பொழுது அவர் அரங்கினுள் வந்த சிறைக் கண்காணிப்பாளரும் சிறை அதிகாரியும் சிறைக் காவலாளியும் கூப்பிட்ட குரலை அவரது செவி ஏற்றிடவில்லை. என்ன செய் தார் என்று சிறைக் கண்காணிப்பாளர் கேட்டிட இறைவனை இறைஞ்சியதாக இவர் தந்த பதிலை அவன் ஏற்றிடாது திடமுடன் வேலையைச் செய்ய வேண்டும் காலத்தில், கடவுளைத் தொழுதது ஏன் என்று வெறுப்புடன் வினவினான். ''பொறுத் தருள்'' என்ற சொல்லை மறுத்து அவன் போயின பின்பு வருத்தும் வகையில் வந்தன தொடர்ந்து தண்டனைகள்-அரிசி உணவு அன்றே நிறுத்தப்பட்டது; வரிசைப்படிக் கேழ்வரகு அடுத்து வந்தது. வருத்தம் அடுத்துவரும்போதும், சோதனை சிம்மாசனம் ஏறுகின்ற போதும் சிந்தனைகள் தீப்பொறிகளா கின்றன. சிதம்பரனாரும் இந்தச் சீரிய தாக்குதலால் தண்டனை யினால் பாதிக்கப்பட்டபோது தான் நினைத்ததைச் சாதிக்க வேண்டுமென்று தணியாத ஆசை கொண்டு திட்டம் ஒன்று வகுத்தார். அதன்படி விடுதலைக் காலம் நெருங்கி நின்றமை யால் அதன்முன் அந்த அதிகாரியிடமிருந்து அரிசி உணவு பெறுதல் வேண்டுமென்று உரமோடு நினைத்தார். உணவினை நிறுத்தினார். உள் விளக்கெண்ணை, தினவோடு கொண்டார்.

அதன் விளைவாக ஒரு வாரத்தில் அவர் எடையில் 10 பவுண்டு குறைந்தது. நிலுவையில் அது தெரிந்ததும் சிறைக் கண்காணிப் பாளன் சோறும் பாலும் சுவையான உணவும் அளித்திடச் செப்பி னான். எனினும் இழந்த பலத்தினை அவரதுடம்பு திரும்பப் பெறவில்லை. அந்த நிலையிலும் அவர் மெலிந்த உடம்போடும் நலிந்த மனமோடும் மெய்ப்பொருள் தொழுது மெய்ப்பொருள் கண்டு மெய்ப்பொருள் ஆகி விளங்கினார். அவரது தண்டனை குறைக்கப்பட்டது. அதிலும் விக்டோரியா மகாராணி 1857-ஆம் வருடம் வெளியிட்ட புரொக்ளமேஷன் பின் வந்த மன்னன் எட்வர்டு ஆங்கிலப் பாராளுமன்றத்தில் வாசித்த காலையில் வழங்கிய ரெமிஷன், (தண்டனை தள்ளுபடி) இறந்த காலையில் தந்த ''ரெமிஷன்'' மன்னன் ஜார்ஜ் முடிசூடியபோது தரப்பட்ட ரெமிஷன் ஆக மூன்றும்கூடிய ஒன்றரை ஆண்டு போக மிகுந்த நாலரை ஆண்டில் சிறைவாசத்தில் சென்றது நீக்கி, அந்நாளில் சிலசில நாட்களே செல்லநின்றிருந்தன. சிதம்பரனார் இதனைக் குறிப்பிட்டு வள்ளி நாயகனை வரும்படி எழுத அவரும் ''தவம் நனிபுரிந்த சிதம்பரனார் மனைவி மக்கள் மைத்துனரோடு மற்றும் கணபதி அவர்தம் மக்களோடு கண்ணனூர் நகரில் சிதம்பரனார் விடுதலை நாள் எதிர்நோக்கிக்கூடி நின்றார். 1912-ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் ஒருநாள் மாலை தம் உடம்பில் எண்ணெய் சிறிது தடவி முழுக நிற்கையில் சிறையதிகாரி அவரை அழைத்து விடுதலை உத்தரவு வந்துள்ளது என அறிவித்தான். தனது மைத்துனன் அன்புடன் அனுப்பிய பட்டு உடை உடுத்தி அவர் தமது வீட்டையடைந்தார். மாண்பீடடைந்தார்.

விடுதலைக்கு முன்பாக எண்ணெய்க் குளியல் செய்து அது வரை ஏற்பட்ட இன்னல்களை மரபின் வழி முழுக்காடி ஒழித்த தாகக் குறிப்பிடுவதைக் காணுகையில் எந்த அளவிற்கு ஏற்ற மிக்க பரம்பரைப் பண்புகள், பாரம்பரிய உணர்வுகள் அவர் உள்ளத்திலே உடம்பிலே ஊறியிருந்தன என்பது தெள்ளத் தெளி வாகிறது. விடுதலை பெற்று வீடு திரும்பும் காலை மைத்துனன் தந்திட்ட பட்டுடை உடுத்திச் சென்றார் என்று கூறுகின்ற பொழுதிலும் மங்கல நாட்களில் மரபுமுறை எப்படிச் செயல்படு கிறது என்பதனை உணருகின்றோம்.

## அரசியல் துறவு

விடுதலை அடைந்த பின்பு சென்னை வந்து மயிலை, சிந்தா திரிப்பேட்டை பெரம்பூர் ஆகிய பகுதிகளில் பல ஆண்டுகள் வாழ்ந்து வந்தார், சிதம்பரனார். சிறை மீண்டதும், சுப்பிர மணிய சிவாவைத் தவிர இவரை வாவென்றழைப்பார் ஒருவரு

மிலர். பல ஆண்டுகள் சிறைக் கொடுமைகளை அனுபவித்துவிட்டு வெளி வந்த சிதம்பரனாரைக் கண்டதும் "அப்பா சிதம்பரம் வந்தாயா" என்று அன்புடன் அணைத்துக்கொண்டார் சிவா.

சிதம்பரனார் அடைந்த துன்பம் கண்டு மிகமிக வருந்திய வர்கள் இருவர். ஒருவர் சிவா; மற்றொருவர் தாலாட்டுப்பாட மறந்த தமிழ்க் கவிஞன் பாரதி. அரச நிந்தனைக் குற்றத்திற் காகத் தண்டனை பெற்றமையால் அவரது வக்கீல் சன்னத்து பறிமுதல் ஆயிற்று. வருவாய்க்கு வேறு வழியின்றி வாடிய போதும் சிறைக்கு அஞ்சாத அவர் நெஞ்சம் வறுமையைக் கண்டு வாடியது. கீழ்வருமாறு பாடியது:-

> வந்த கவிஞர்க்கெல்லாம் மாரியெனப் பல்பொருளும்
> தந்த சிதம்பரமன் தாழ்ந்தின்று - சந்தமில் வெண்
> பாச் சொல்லைப் பிச்சைக்குப் பாரெல்லாம் ஓடுகிறான்
> நாச் சொல்லும் தோலும் நலிந்து.

நல்லவரை நாடிவரும் துன்பத்தின் வயது எண்ணிவிடும் மணித் துளிகளே! எனவே அவரது துன்பம் ஓடிவிட ஈ. எச். வேலஸ் என்ற நீதிபதி தேடிவந்து பேருதவி செய்ய வக்கீல் சன்னத்து திரும்பத் தரப்பட்டது. பின்பு சிலகாலம் கோவில்பட்டியில் தங்கி வக்கீல் தொழில் புரிந்து மீண்டும் தூத்துக்குடியினைச் சேர்ந்தார்.

ஒத்துழையாமை திட்டத்தைத் திறம்பட ஆராய 1920-ஆம் ஆண்டு கல்கத்தாவில் காங்கிரஸ் சிறப்பு மகாசபை கூடியது. சிதம்பரனாரும் பிரதிநிதியாகச் சென்றிருந்தார். உயர்ந்த நிலையில் உள்ளவர்கள் உரைப்பதெல்லாம் உயர்ந்தவைகளாகத் தான் இருக்கும் என்பது நியதியில்லை என்ற உண்மையை உய்த்து உணர்ந்தவர் சிதம்பரனார். எனவேதான் "உலக மெலாம் புகழும் காந்தி மாமுனிவர்" என்று தானே ஏற்றி வைத்த காந்தியடிகள் சொன்ன திட்டம் சென்ற பாதை அவர்க்கு இசைவில்லை. அதில் நம்பிக்கையுமில்லை. எனவே "இந்த ஒத்துழையாமை, தின்பண்டம் முழுதும் தனக்குத் தரும் வரையில் அதன் ஒரு பகுதியை ஏற்காது தாய் தந்தையரோடு கோபித்துக் கொண்டிருக்கும் குழந்தையின் செயலைப் போன்றது" என்றும் "ஒத்துழைத்தலும் ஒத்துழையாமையும் ஏக காலத்தில் நிகழ வேண்டுமென்பதே தமது அவா" என்றும் கூறிக் காங்கிரஸி லிருந்து விலகிவிட்டார். மீண்டும் 7ஆண்டுகள் வனவாசத் திற்குப் பிறகு 1926-ஆம் ஆண்டு சேலத்தில் நடந்த மூன்றாவது அரசியல் மாநாட்டில் கலந்துகொண்டார். எனினும் அந்தத் தொடர்பும் தாமரை இலைத் தண்ணீராக நின்றுவிட்டது.

அதன் பின்பு காங்கிரஸ் மகாசபையுடன் தொடர்பு கொள்ளா மலே இருந்துவிட்டார். இறுதிநாள் வரை ஆங்கில ஆட்சியை எதிர்த்து வந்த சிதம்பரனார் தன் பாதையிலிருந்து விலகவே யில்லை. காலத்திற்கேற்ற கோலம் போடும் பச்சோந்தியாக், சட்டையை மாற்றுவதுபோல கட்சியை மாற்றுகின்ற அரசியல் வாதியாக அவர் என்றுமே இருந்ததில்லை. அப்பொழுது தென்னிந்தியாவில் ஆளும் கட்சியாக இருந்த ஜஸ்டிஸ் கட்சியில் கூடச் சேர்ந்திட விரும்பினாரில்லை. சிதம்பரனார் பிராமணரல் லாதவர்கள் வாழ்வில் பல துறைகளில் பின் தங்கியது கண்டு மனம் வருந்தியவர். ஆனால் அதன் காரணமாய் அரசியல் கட்சி உருவாக்கியதை அவர் விரும்பவில்லை. எனவே அவர் ஜஸ்டிஸ் கட்சியில் சேர மறுத்துவிட்டார். 1935-ஆம் ஆண்டு ஓர் காங் கிரஸ் தலைவர் பாபுராஜேந்திர பிரசாத் தூத்துக்குடி வந்திருந் தார். அப்போது சிதம்பரனார் நோய்வாய்ப்பட்டிருந்தார். இதை அறிந்ததும் பாபு ராஜேந்திரபிரசாத் சிதம்பரனாரின் இல்லத்திற்கு நேரே சென்றார். அன்று மாலை நடந்த பொதுக் கூட்டத்தில், ''சிதம்பரனார் வாழும் தூத்துக்குடிக்கு வரும் பாக்கியம் எனக்குக்கிடைத்தது. அவர் சிறை சென்றது கண்டு வருந்தியவன் நான். அதுஎனது தேசாபிமானம் மேலும் அதிகமாக வும் ஒரு காரணமாயிற்று'' என்றார் பாபு. வீரச்செம்மல் சிதம்பரனாரை வடநாட்டாரே அதிகம் புரிந்து கொண்டிருந்த னர். தென்னாட்டார் அவரைச் சரிவரப் புரிந்துகொள் ளவில்லை.

விடுதலைப் போரினால் நாட்டிற்காகத் தம்மைத் தந்து அதற்காகவே தாமும் வாழ்ந்து சுதேசியம் ஒன்றே மூச்செனக் கொண்டிருந்த சிதம்பரனார் பெற்றபேறு இரண்டு. ஒன்று வறுமை; மற்றொன்று பிணி. இலக்கியம் காட்டும் வாழ்க்கை. தமிழ்ப் புலவர்கள் அனைவரும் அற்றை நாளில் பெற்ற பேறாக இருந்ததனாலோ என்னவோ அவர் ஓர் இலக்கியவாதியாக இருக்கின்றார். பிள்ளையவர்கள் இறப்பதற்குச் சிலநாட்கள் முன்னர் அவரது அருமைத் தோழரான தூத்துக்குடி திருவாளர் மாசிலாமணி பிள்ளையவர்கள் சிதம்பரனார் உடல் நலம் விசாரிக்கச் சென்றபோது, பசிப்பிணி என்ன, பசிப்பிணியின் கொடுமை என்ன என்று விளக்குமாறு கேட்கப் பின்வருமாறு கூறினார். விதவைப் பெண்ணொருத்தி,

''சில்லென்று பூத்த சிறு நெருஞ்சிக் காட்டினுள்ளே
நில்லென்று சொல்லி நெடுவழி போனீரே''

என்று பாடியதைச் சுட்டிக்காட்டி, இதுபோல வறுமையென்றால் சிறு நெருஞ்சிக் காட்டிலே நிற்க முடியாமல், தள்ளாடிக் கீழே

விழுந்த போதும்கூட அந்த முள்ளின் மேலேயே விழுந்து பசிக் காயத்தை விட, உள்காயத்தை விட, மெய்யாகவே மெய்க் காயம் பெற்று அந்தக் காயத்திற்கு நல் மருந்து கிட்டாமல் மயங்கி மாள்கின்ற மக்கள் இந்தியத் தாய்மடிமீது கோடி கோடி யாகத் துயில்கிறார்களே, ''என்று தணியும் அவரது வறுமைத் தாபம்'' என்று சொல்லிச் சொல்லிச் சிறு குழந்தை போலத் தேம்பியழுதார். அந்த நிலையிலும் அவருக்கு ஆறுதல் தர ஆளில்லை. தேறுதல் தரத் தோளில்லை. மேலுலகை நாடி இறைவனின் நேரடி ஆளுகைக்கு உட்படுவதுதான் தனக்கு உய்வு என்று எண்ணியோ என்னவோ இந்தப் பூவுலகை நீத்து அப் பொன்னுலகு சேர்ந்தார் 1936-ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 18-ஆம் நாளில்.

## மறவாதிரு மனமே

மறைந்த மூன்றாண்டுகள் வரை அவரது நினைவுநாள் கூட மக்கள் மனத்தில் தோன்ற மறந்திட்டாலும் 1939-ஆம் ஆண்டு சென்னை இராயப்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் சிதம்பர னாரின் உருவச்சிலை, சத்தியமூர்த்தி தலைமையில் டி.எஸ்.எஸ். இராஜனால் திறக்கப்பெற்றது. சேலம் ஸ்ரீ விஜயராகவாச்சாரி வாழ்த்துடன் இந்தியா சுதந்தரம் ஏற்றபின்பு ''ஜலபிரபா'' என்ற கப்பல் கடலில் மிதக்கவிட்டபோது சர்தார் வல்லபாய் படேல் சிதம்பரனாரைப் போற்றிப் புகழ்ந்து மகிழ்ந்தார். தென்பாண்டி வணிகர்கள் தூத்துக்குடிக்கும் சிங்களத்திற்கும் இடையே செல்லுவதற்காக விட்ட முதற்கப்பலுக்கு வி.ஓ. சிதம்பரம் எனப் பெயரிட்டு அன்றைய கவர்னர் ஜெனரலான ராஜாஜி ''வீரர் வ.உ.சி. வாழ்க'' என வாழ்த்திட, அந்தக்கப்பலின் பயணத்தைத் தொடங்கி வைத்தார்.

## மனிதனின் பிறப்பு-புகழ் பெறுதல்

அந்தப் புகழினைப் பாடப் புலவன் ஒருவன் பிறந்துவிட்டால் அந்தப் புகழ் தெய்வீகத் தன்மையோடு திகழத் தொடங்குகிறது. எனவேதான் மன்னவர்கள் தமக்கு மாசறக் கற்றோர்கள் பாமாலை சூட வேண்டும் என எதிர்பார்த்தமைந்தனர். சிதம்பரனாரின் புகழைச் செந்தமிழ் நாடெலாம் பாடி நம் செவி களில் எல்லாம் தேன் பாய்ந்திடச் செய்திட்ட சீரிய பாரதி பாடிய பாடலைப் பாடிச் சிதம்பரனாரின் புகழினைப் போற்று வோம்.

"வேளாளன் சிறை புகுந்தான் தமிழகத்தார்
மன்னனென மீண்டான்" என்றே
கேளாத கதை விரைவிற் கேட்டாய்நீ
வருந்தலை என் கேண்மைக் கோவே!
தாளாண்மை சிறிது கொலோ யாம் புரிவோம்
நீ இறைக்குத் தாங்கள் ஆற்றி
வாளாண்மை நின்துணைவர் பெறுகெனவே
வாழ்த்துதி நீவாழ்தி, வாழ்தி!

# வ. உ. சி. ஒரு வழக்கறிஞர்

'உரிமை பெற்ற வாழ்வே வாழ்வு. அடிமைப்பட்டு அஞ்சி வாழ்வது வாழ்வாகாது' என்று அந்நியர் ஆட்சிக்காலத்தில் உரிமைக்கு உருக்கொடுத்து உடைமைக்கு வழி கோலும் உள்ளத்தால் உந்தி நின்ற சிதம்பரனார் தமது இருபத்தி மூன்றாம் அகவையில் வழக்கறிஞர் ஆனார்.

கேளானும் வேட்ப மொழிவதாம் சொல்லினைத் திறனாக்கி, கேட்டார்ப் பிணிக்கும் தகையனாய், நீதி கொலுவேறும் மன்றத்தில் வழக்கறிஞராகக் கோலோச்சிக் கொடிகட்டி நின்றார்.

'சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ் சொலின்மை யறிந்து'

என்ற வள்ளுவர் வாய்மொழிக்கு, வாழ்கின்ற இலக்கியமாக அமைந்தது பிள்ளை அவர்களின் பண்பு. அரசு அன்றுமுதல் இன்றுவரை, வறியர்க்கு வாழ்வளிக்க, வாட்டமுற்றோருக்கு வழி செய்ய, காசின்றிக் கச்சேரியின் படிகளிலே ஏற முயலாமல் இன்னலுற்ற ஏழைகள் உயர்ந்திட வழிபல காட்டிவருகின்றது. எனவேதான் உரிமையியல் வழக்குரைச் சட்டம் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் இயற்றப்பட்டபொழுது வறியர்க்கு வழக்காட வழிமுறைகள் வழங்கப்பட்டன. வறியர் எனப்படுவர் நீதிமன்றத்து வழக்குரைக் கட்டணம் செலுத்த இயலாதவர் என்ற வரையறை விதிக்கப்பட்டிருந்தது. எடுத்துக்காட்டாக, உடுக்க ஆடையும் உண்ண உணவும் மட்டுமே பெற்றுத் தனது சொத்துக்களின் மதிப்பு ஒரு நூறு ரூபாய்க்கு உட்பட்டதாகக் கொண்டவர்கள் வறியர் என வரையறுக்கப்பட்டனர். அந்த வறியருக்கும் நீதி தர முன்வந்தது சட்டம். இன்றைய நாளில் 'இலவசச் சட்ட உதவிக் கழகம்' என்று இயங்கிவருவது வறியர்க்கு வாய்ப்பளிப்பதற்காக வகைப்படுத்தப்பட்ட வழியே.

இயற்கையிலேயே இரக்க உணர்வு ஏந்தி நின்ற பிள்ளை அவர்கள் ஏழை எளியவர்மாட்டுப் பேரிரக்கம் கொண்டவராய்த் திகழ்ந்ததில் வியப்பில்லை. அவர்கட்குரிய வழக்காயின் பொருள் வாங்காது வாதிடுவார். இத்துணை இரக்கம் இதயத்தில் ஏற்றுக் கைம்மாறு கருதாது ஏழைகட்கு நீதிமன்றத்தில் வாதிடு வார் என்று அனைவரும் ஆராதிக்க நின்றார். பிள்ளை அவர் களிடம் காணப்பட்ட இப்பண்புக்கு வித்து அவர்களின் நெஞ்சம் தமிழ் தழுவியதாக இருந்தமையே என்பதனை நினைத்தாலே இனிக்கிறது. ஒருகால், தந்தையாரும் சிறந்த வழக்கறிஞருமான உலகநாதபிள்ளையும் இருவேறு கட்சிகளுக்காப் பரிந்து வாதாடும்சமயமும் வந்தது. வெற்றி கண்டவர் சொல் வீரராகிய மகனார்தாம். தந்தையார் அடைந்த மகிழ்ச்சிக்கு,

> 'தம்மில் தம்மக்க ளறிவுடைமை மாநிலத்து
> மன்னுயிர்க் கெல்லா மினிது'

என்ற குறளே இனிய பொருளாகியது. கி.பி. 1900-ஆம் ஆண்டு துவக்கத்திலிருந்து தூத்துக்குடியில் பிள்ளை அவர்களது நீதி மன்றப்பணி தொடரலாயிற்று.

## உரிமையூட்டல்

'யாராண்டால் நமக்கென்ன' என்றிருந்த ஏமாளித்தனமான நிலையால், நாட்டைக் கூறாக்கிப் பிரித்தாள எண்ணி வந்த கும்பினியார் கூட்டத்தார் கொட்டம் மேலோங்கி இருந்தது. அதனைச் சுக்கு நூறாக்கி, பொறி பறக்கும் உணர்வோடு மக்களைச் சீறி எழவைத்தார்; சட்டப்படி என்னென்ன உரிமை உண்டென்று உணர்த்தினார் வ.உ.சி. "ஊமைகளாய் குருடர் களாய்ப் போனாரிங்கே. ஊக்கமெல்லாம் இழந்து நின்றா ரிங்கே தமிழர் நாட்டில்" என்ற சொல்லை மாற்ற "ஏமாற்றும் எத்தர்களாம் ஆங்கிலேயர்" என்று பாமர மக்களுக்கு எடுத்துச் சொல்லி எழுச்சியுறச் செய்தவர் சிதம்பரனார்.

1894-ஆம் ஆண்டு ஒட்டப்பிடாரத்தில் துவங்கிய வழக்கறி ஞர் பணி தேசியப் போராட்டத்திற்கு முதுகெலும்பாகத் திகழ்ந்து நின்றது. 1900-ஆம் ஆண்டு தூத்துக்குடியில் தனது வழக்கறிஞர் பணியைத் துவங்கிய பின்பு 1901-ஆம் ஆண்டு அவரது முதல் மனைவி வள்ளியம்மையார் விண்ணுலகை அடைந் தார். பின்னர் அக்டோபர் 15ம் நாள் 1906ம் ஆண்டு தூத்துக்குடி யில் 'சுதேசிக்கப்பல் கம்பெனியினை' சட்டத்துறைப்படி தெளிந்து ஆலோசித்துப் பதிவு செய்தார். அவ்வாண்டே சென்னையில் பாரதியாருடன் சேர்ந்து 'சென்னை மக்கள்

சங்கம்' என்று அமைத்தார். வழக்கறிஞர் என்ற உணர்வு அவர் உள்ளத்திலே ஆழமாக ஊறியிருந்தது என்பதனை அவரது நடைமுறையின் மடல்வரைவில் காண்கின்றோம். 13-8-1903-ஆம் நாளன்று திரு. ஞானதேசிகம் பிள்ளை என்பவருக்கு எழுதிய மடலில், பணம் தனக்கு அனுப்பவில்லை என்ற ஆதங்கத்தை வெளிப்படுத்தி 'தங்களுடைய மரியாதையையும் அந்தஸ்தையும் பூராவாகக் கெடுத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணமும் நாங்கள் ஒருவரும் இனி ஒரு நாளும் உங்கள் வீட்டுக்கு வரக் கூடாது என்ற எண்ணமும் தாங்கள் கைக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. எத்தனை வாயுதாக்கள் வைத்தீர்கள்' என்ற சொற்களிலே வழக்கறிஞருக்கு இன்றியமையாத கண்டிப்பைக் காண்கின்றோம். 'தர்மம் தவறும்போது தாக்கவேண்டும்' என்ற உணர்ச்சி அவர்தம் உள்ளத்தில் தவழ்வது தெளிவுறத் தெரிகிறது.

'பல்கால் நோக்கும் அறனில் யாயே' என்ற ('அகநானூறு 302:15) பழந்தமிழ்ச் சொல்லின் அறவுணர்ச்சி இன்று இல்லாத நிலைமையை அறிவுறுத்திக் காட்டுகின்றார். மேற் குறிப்பிட்ட மடலை முடிக்கின்ற காலத்தில் 'மரியாதை என்பது கிஞ்சித்து மில்லையே' என்று சாடுகின்ற பொழுது அவரது வாதத்தின் விவேகம் புரிகிறது. 26-8-1903-ஆம் நாளன்று எழுதிய கடிதத்தில் ''தங்களுக்கு, எனக்குத் தாங்கள் சொல்ல வேண்டியிருக்கிற பணம் விஷயமாய், எழுதுகிற கடிதம் இதுதான் கடைசி. நானும் உங்களுடைய பொய்யான பல வாயுதாக்களை நம்பி இதுவரை மோசம் போனேன். உலகத்தில் இத்தகைய மனுஷாளுமிருப்பீர்கள் என்று தெரியாதவனாய்ப் போய் விட்டேன். செப்டம்பர் மீ.5உக்குள் சூட்டுத்தாக்கல் செய்வது பிரமாணம். அதற்கு முன் பணம் அகப்பட்டால் அனுப்புங்கள். வேறு பதில் ஒன்றும் வேண்டுவதில்லை. உங்களுடைய வாயுதாக் களை இனிமேல் நம்பப்போகிறதில்லை. இதுபிரமாணம்'' என்ற சொற்றொடர்களைக் காண்கிறோம். இந்தச் சொற்களில் அவரது உறுதியான முடிவினை, கண்டிப்பினை உணர முடிகிறது.

அதே பொழுது மனித குணம் அறிந்து அவர் செய்கின்ற செயலைப் பாராட்டித் தன்னைத் துன்பத்தோடோ அல்லது இன்பத்தோடோ இணைத்துக்கொள்ளாது தாமரை இலைத் தண்ணீராக உண்மையிலேயே வழக்குரைஞர் நெறியுடன் அவர் வாழ்ந்து காட்டினார் என்பதற்கு 6-8-1928-ஆம் நாள் அதே ஞானதேசிகம் பிள்ளை அவர்களுக்கு எழுதிய கடிதம் எடுத்துக் காட்டு. 'தங்கள் 4-8-28 கார்டுவரப் பெற்றது. வக்கீலுக்கு

ரூ. 200உம் அனுப்பி முடிந்த விவரம் தெரிந்து, சந்தோஷம அடைந்தேன். தாங்கள் இந்தச்சமயம் ரூ. 500/-தயார் செய்தது கடவுள் செயல்தான் என்று சொல்லவேண்டும். இது சாதாரண மனிதர்களால் முடிக்கக்கூடிய காரியமன்று' என வரைந்துள்ளார். வெற்றியும் தோல்வியும் காலத்தின் அடிச்சுவட்டில் மாறி மாறி வருகிற தடங்கள், துன்பமும் இன்பமும் அவ்வகை. வழக்கினை எடுத்து நடத்துகின்ற வழக்கறிஞர் வெற்றியின் போதையிலே தன்னை மறப்பதும் தோல்வியின் காதையிலே தன்னை இழப்பதும் வழக்கறிஞர் தொழிலுக்கு இயைந்த இயல்பல்ல. வழக்கறிஞன் என்பான் தாமரை இலைத் தண்ணீராகத் தட்டில் இட்ட பாதரசமாக ஒட்டாது இருந்தால் தான் உயர்வினைக் காணமுடியும். உலகோடு ஒட்டி ஒழுக முடியும். இந்தக்குணத்திற்கு முத்தாய்ப்பு வாய்ந்தவராக முகிழ்த்தவர் சிதம்பரனார்.

வழக்கறிஞர் தொழிலில் துணிவு அணியாவது தனியான சிறப்பு. துணிவே துணை என்று முழக்கமிட்டு வாழ்ந்திட்ட பலரை இவ்வையகம் வானேற்றிப் புகழ்தலை வரலாறு வரவேற்கின்றது.

> 'எம்மனமும் என் உடம்பும் என்சுகமும் என் அறமும்
> என்மனையும் என் மகவும் என்பொருளும்-என் இனமும்
> குன்றிடினும் யான் குன்றேன்; கூற்றுவனே வந்தாலும்
> வென்றிடுவேன் காலால் மிதித்து'

என்கிற சொல்லோவியத்தில் சுகம் காணுகின்ற துணிவு செங்குட்டுவன் இமயத்தில் நட்ட தமிழ்க்கொடிபோலச் சிறந்து ஒளிர்கிறது. எனினும் விவேகம் இல்லாத வீரம் விழலுக்கு இறைத்த நீராம் என்ற வேதவாக்கினை உணர்ந்திருந்த பிள்ளை அவர்கள் சட்டத்தின் மோதலிலும் ஒரு புது சிந்தனை தரும் வழியில் வாழ்ந்திட்டார். பணியவேண்டிய இடத்தில் அடி பணிந்து, பாய்ந்து அடிக்க வேண்டுமிடத்து இரும்புக்கரங் கொண்டு அடித்து, இடித்துக்காட்ட வேண்டுமிடத்து மற்றவன் தலை தரையைத் தொடுமளவுக்கு இடித்துக்காட்டி வழக்காடு முறைகளுக்கே ஒரு வழிகாட்டியாக வாழ்ந்தார் வ. உ. சி.

வ.உ.சி. சிறையில் இருக்கையில் கலெக்டர் ஆஷ், 1911ஆம் ஆண்டில் மணியாச்சி ஸ்டேஷனில் சுட்டுக்கொல்லப்பட்டார். இச்செய்தியைக் கேள்வியுற்ற சிதம்பரனார்,

'நான் சிறைப்பட்ட பின்னும் என்னைப் பின்பற்றிச் சுதேசிக் கிளர்ச்சியை அறவழியில் நடத்திவரும் அன்பர்களுக்கு

எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால், எனது கோட்பாட்டுக்கு மாறாகக் கொலைச் செயல்கள் நடை பெறுவதற்கு வருந்துகிறேன். நாம் போராடுவது பிரிட்டிஷ் முறையை எதிர்த்தேயாகும். ஆங்கில அதிகாரிகளைக் கொலை செய்வதால் அந்நிய ஆட்சி அழிந்துவிடாது. கொடியவர்களா யினும் அவர்களது உயிருக்குத் தீங்கு செய்யக்கூடாது என்பதே எனது கோட்பாடு' என்று நண்பர் ஒருவருக்குக் கடிதம் எழுதி னார். இதிலிருந்து அவர் தீவிரவாதியாயிருப்பினும் கிளர்ச்சியை அறவழியில் நடத்தவே விரும்பினார் என்பது புலனாகும்,

ஈண்டு 'விநாயக புராண' ஆசிரியர் கூறியது ஒப்பிடற்பால தாகும்.

'அன்புறும் அறத்தினால் அடுக்கும் இன்பமே
இன்பெனத் தக்கதால் ஏனை இன்பெலாம்
துன்படும் பழியையும் தோற்றும்' என்பதனை உணர்ந்தவர்

சிதம்பரனார். ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐந்தாம் ஆண்டின் தொடக்கத்திலிருந்தே தனியாத சுதந்திரத்தாகம் மிகுதியாகிக் கொண்டிருந்தது நாட்டிலே. 'மயிலே! மயிலே! இறகு போடு' என்று அவர்களிடம் கேட்டுக் கெஞ்சிக்கொண்டு இருப்பது பலனற்ற வாதம் என எண்ணி அறப்போர் தொடங்கத் தீவிர வாதிகள் திரண்டனர். மிதவாதிகளுக்கும் தீவிரவாதிகளுக்கும் இடையே ஏற்பட்ட குழப்பநிலையால் காங்கிரஸ் கட்சி 1907-ஆம் ஆண்டு சூரத் நகரிலே நடந்த மாநாட்டில், பிளவுபட்டது. ஆங்கில அரசு தீவிரவாதிகளை அடக்க முன்வந்தது. தலைவர் களை இழந்துவிட்ட, ஆனால் தேசியப்பாலை நன்றாகப் பருகி விட்ட இளங்காளையர் பலர், தீவிரவாதிகளாய் மாறி, அறப் போரில் நம்பிக்கை இழந்தனர். வெள்ளையர் ஆட்சியின் மீதுள்ள வெறுப்பை வெள்ளையர்பால் செலுத்தத் தொடங் கினர். ஆங்கில அதிகாரிகளைக் கொலை செய்வது என உறுதி கொண்டு கையெழுத்திட்டுத் திட்டம் வகுத்தனர். கொலை கொள்ளை, நாசவேலை முதலிய பயங்கரமான செயல்களில் ஈடு பட முன்வந்தனர். இத்தகு புரட்சியாளர்கள் உருவானதாக வரலாறு காட்டுகின்றது. ஆனால் மேற்குறிப்பிட்ட மாநாட்டில் ஏற்பட்ட அமளிக்கும் பிளவுக்கும் செக்கிழுத்த செம்மலின் பங்கு கொஞ்சநஞ்சமல்ல. ஏனோ அவரது பங்கைப் பத்திரிகையாளர் களும் வரலாற்று அறிஞர்களும் இருட்டடிப்புச்செய்துவிட்டனர். உண்மையாக அவரது பங்கை ஆராய்ந்து பார்த்தால் தீவிரவாதி களின் தீவிர செயலுக்கு வித்திட்டவரும் அவரே என்பது நமக்குப் புலப்படும். முதன்முதலாகக் காங்கிரஸ் கட்சிக்குள் பிளவு ஏற்

படுத்தி அதிலிருந்து ஒரு புதிய கட்சியையே தோற்றுவித்த பெருமை சிதம்பரனாரையே சேரும். சிதம்பரனார் தீவிர வாதியே தவிர பயங்கரவாதி அல்ல. சட்டத்தின் வட்டத்திற்குள் திட்டமாக வாழ்ந்த வழக்கறிஞரல்லவா! அவர் வன்முறையாளர் களையும் வன்முறையையும் கண்டித்தும் நிந்தித்தும் வந்திருக் கிறார். மேலே குறிப்பிட்ட மடல் அவர் சேலம் விஜயராகவாச் சாரிக்கு எழுதியது.

முருகன் தந்த தமிழினை முழுதும் உணர்ந்தவர் அவர். அந்தத் தமிழ்ச்சொற்கீறிய நக்கீரன் போல, நெற்றிக்கண் காட்டி னாலும் குற்றம் குற்றமே எனச் சுட்டிக்காட்டத் தயங்காதவர். உள்ளத்தில் ஏற்றிட்ட கருத்தின் உறுதிப்பாட்டால் இறுதிவரை போராடும் வழக்கறிஞர் குணத்தை முழுமையாய்ப் பெற்றனர். 1920-ஆம் ஆண்டு கல்கத்தாவில் நடந்த விசேட காங்கிரஸ் மாநாட்டில் காந்திஜியின் ஒத்துழையாமைத் திட்டத்தைக் கடுமை யாக எதிர்த்தார். அச்செய்கையால் தமது அரசியல் வாழ்விற்கே முற்றுப்புள்ளி வைக்க நேரிடும் என்பதை அறிந்தும் அரசியலுக்கு முழுக்குப்போட்டாரே தவிரக் கொள்கையை விட்டுக்கொடுக்க வில்லை. ஒத்துழையாமை திட்டம் பெரும்பான்மை வாக்கு களால் வெற்றி பெறவே அரசியலுக்கு முழுக்குப் போட்டார் என்றால், என்னே அவர்தம் துணிவு!

ஏற்றதொரு கருத்தை எவர்வந்து சொன்னாலும் மாற்றாத, தன்மையோடு எடுத்துச்சொல்லி அந்தத்தன்மையைக் கொண்டே வெற்றியைப் பிடித்துக் கொள்வது ஒரு வழக்கறிஞரின் இன்றிய மையாத இயல்பாக இருக்க வேண்டும் என்பதை உணர்ந்தவர், சிதம்பரனார் என்பது இதன்மூலம் சொல்லாமலே தெரிகின்றது.

### வக்கீல் தொழில் புரிந்தமை

சிவில், கிரிமினல் என்று செப்பிடும் இருபிரிவினை, தாவா வழக்கு என்றும் தண்ட வழக்கு என்றும் அழகாகப் பாகுபடுத்திப் புரியும்படிச் சொல்கின்றார் சிதம்பரனார். இந்த இருவகை நீதி மன்றத்திலும் எப்படி வழக்கு நடத்த வேண்டும் என்றுவிவரிக்கும் காலை 'இயல்போடு நடத்திச் செல்ல வேண்டும்; வலுவோடு நடத்த வேண்டும்; ஒண்பொருள் இயற்றி ஒலியினைப் பெருக்கிப் பண்புடன் நடத்த வேண்டும்; இறுதியாக அது பயன்தரும் வகை யில் நடத்த வேண்டும்' என்று வரையறுத்துக் காட்டுகின்றார். ஈயினை அடிப்பதற்கு இரும்புத்தடி நாடல் தேவையில்லை; அது போல நாயினை அடிப்பதற்கு வெறும் நாடாக்கள் போதாது. எனவே ஒரு வழக்கினை நடத்துங்கால் அந்த வழக்கினை வழக்கின் இயல்போடு ஒத்து நடத்த வேண்டும். குடிகாரன்

வழக்கை நடத்தும்போது வள்ளுவரை வாதுக்கு அழைப்பதோ, கோடீசுவரன் வழக்கினை நடத்தும்போது குசேலர்களைக் கோடிட்டுக் காண்பிப்பதோ வழக்கின் இயல்பு ஆகாது. இந்தக் கருத்தினைத் தெள்ளத் தெளிவாக உணர்ந்துதான், 'இயல்புடன்' நடத்துக என்று இயம்பினார்.

வருகின்ற விவகாரங்களை வலுவோடு நடத்த வேண்டு மென்ற காலை எடுத்துக் கொள்கின்ற வழக்குகள் மீது கடுகளவு கூட ஐயப்பாடில்லாத முழு நம்பிக்கை கொள்ள வேண்டும் என்று வலியுறுத்துகிறார். கட்சிக்காரர்கள் கூறுகின்ற வழக்கினை ஏற்றுக்கொள்ளும் போது அந்த வழக்குதான் உண்மையானது என்று வாதிட வேண்டிய இக்கட்டான பொறுப்பு ஒரு வழக்கறி ஞருக்கு ஏற்படுகின்றது. கொலை செய்யப்பட்டதாகக் குற்றம் சாட்டப்பட்ட ஒருவனின் வழக்கினை எடுத்து நடத்துகின்ற காலை 'கொலையாளியை நல்லவனாகக் காட்டுகின்றானே' என்று கரிசனம் காட்ட இந்தக் ககனம் காத்திருந்த போதும், சற்றும் அவநம்பிக்கை கொள்ளாது தனது கட்சிக்காரரின்கூற்றின் மீது அசையாத நம்பிக்கை கொண்டு வலிவோடு வழக்காடுதல் ஒரு வழக்கறிஞரின் கடமை. இவ்வுலகிலே உண்மை எது என்பது இறைவன் தவிர வேறு எவர்க்கும் பிடிபடாத ஒன்று. எனவே தான் சட்டத்தின் கண்களில் இருந்து 'ஆயிரம் குற்றவாளிகள் தப்பிக்கவிடப்பட்டாலும் ஒரு நிராபராதியைத் தண்டிக்கக் கூடாது' என்ற பார்வை உலகின் மீது பாய்ச்சப்படுகின்றது. எனவேதான் வழக்கினை எடுக்குமுன்பு சிந்தித்து, எண்ணித் துணிந்த பின்பு, ஏற்றிட்ட வழக்கினை ''வலுவோடு நடத்த வேண்டுமென்று'' வகை சொல்கிறார், வ. உ. சி. அதை நடத் தும் வகையிலும் கூடப் பண்போடும் அருள் ஒளியோடும் நடத்த வேண்டும் என்றும் குறிப்பிடுகின்றார்.

கற்றறிந்த நண்பர்கள் என்று இவ்வுலகில் அழைக்கக்கூடிய தொழில் வழக்கறிஞர் தொழில் ஒன்றே. அப்படிக் கற்றறிந்தோர் தனது தொழிலை நடத்துங்கால் கட்டுப்பாடின்றித் தன்னை மீறித் தனது நிலை மறந்து வழக்கினை நடத்துதல் நலமன்று. நளினமான ''பண்போடு அதனை நடத்துதல் வேண்டும்'' என்று விருமபியவர் வீர சிதம்பரனார். இறுதியாக, நடத்துகின்ற வழக்கு நடத்தப்படுவோருக்கும் யாருக்காக நடத்தப்படு கின்றதோ அவருக்கும் விழலுக்கு இறைத்த நீராக வீணகாது 'பயன்படும் வகையில்' இருக்க வேண்டும் என்று குறிப்பிடுகின்றார். அவர் பலன்தரும் வகையில் என்று குறிப்பிடவில்லை. வழக் கென்று சென்றுவிட்டால் இரு கட்சிக்காரர்களும் வெற்றி பெறுவது என்பது கற்பனைக்கெட்டாத எண்ணம்.

ஒருவர் ஏற்றமும் மற்றவர் வாட்டமும்-தோல்வியும் வழக்கின் வழி இயல்பே. தோல்வியுற்றவன் கூட வழக்கின் இறுதியில் அந்த வழக்கால் பயன்படுவானேயானால் அதுவே அந்த் வழக் கறிஞரின் முயற்சிக்கு ஒரு தோரணமாக அமையும். தோல்வி யுற்ற போதும் அதன் பயனாகத் தன் வாழ்வினை இனி ஒரு நல் ஏடு திருப்புவதற்குப் பயன்படும்வகையில் அந்த வழக்கு நடததப் பெற்றிருக்க வேண்டுமென்பது சிதம்பரனாரின் பேரவா.

இந்த வரையறை காரணமாக வழக்கறிஞர் என்ற வ. உ. சி. யிடம் ஒரு மகத்தான மனிதனைக் காண்கிறோம்.

## வக்கீல் தொழிலில் வல்லமை

வழக்கறிஞர் தொழிலில் தாம் வல்லமைபெற்ற காரணங் களை வகைப்படுத்தித் தருகின்றார் வ. உ. சி. ஒரு கலைஞன் வெற்றியடைய வழிபிறப்பது அவனுக்கு வாய்ப்புக் கிடைப்பதன் மூலமே. வாய்ப்பினைக் காட்ட வழி ஒன்றும் பெறாமையால், வாய்ப்பினைக் காட்ட இயலாத, கலைமுத்துக்கள் பல, கடலின் ஆழத்திலே பிறந்து ஆழத்திலேயே ஐக்கியமாய் விடுகின்றன. ஒரு வழக்கறிஞர் தொழிலினைச் செய்வதற்கு, அவர் நடத்த, வழக்கு கள் வேண்டும். பரம்பரையாக ஒரே தொழிலில் பவனி வந்தவர் களுக்கு அவர்களது தொழில் பயணம் தொடர்ந்து பயணப்படுவ தில் தடையேதும் இருக்காது. இந்த வழியில் சிதம்பரனாரின் தந்தை ஏற்கனவே வழக்கறிஞராக இருந்த காரணத்தினால், சிதம்பரனாரின் தொழிலில் 'பூபாளம்' நாதசுர மேடையேற, சட்டம் என்ற தேவி 'தர்பார்' பாட, சிதம்பரனார் என்னும் தேவன் நல்ல தொழில் நடத்தத் தொடங்கினார். நீதித் தலத்தில் நிதம் வரும் கேஸ்களில் பாதியை அவருக்குப் பலித்தார் தந்தை. பிதாவும் அறிவுயர் பெரிய தந்தையும் அந்தத் தொழிலில் உதார மோடு புகழோடு நின்றதனால் அது சிதம்பரனார்க்குச் சிறந்த நிழல் குடையாக நிலைத்தது. அத்தனைக்கும் மேலாக என்றும் இறை மறவாத சிதம்பரனாருக்குத் தெய்வ நற்கிருபை சேர்ந்து நின்றது. இன்னும் மேலாக, தாம் செய்த செயல் அத்தனையை யும் திருந்தச் செய்தார்; 'செய்வன திருந்தச் செய்' என்ற சொற் றொடர் அவரிடம் பாடம் கேட்டுக் கொண்டது. அவர் வெற் றிக்கு மற்றொரு காரணம், எடுத்த கட்சியை இடையில் விடாது தொடுத்து நடத்தும் துணிவினைக் கொண்டவராய் அமைந்தா ரென்பதே. வந்த கட்சிக்காரரை வரவேற்று மதுரமான சொல் மொழிந்து தன் சிந்தனையை ஓடவிட்டு, நல்கருத்துக்களைப் பிறப்பித்து அதனை ஆறுதல் சொல்லாகக் கட்சிக்காரரிடம் சொல்லிய காரணத்தினால் சிறந்தார். 'ஏறுபோல் பீடு நடை'

என்பது போல உயர்ந்த தோற்றமும் சிறந்த உடையும் கொண்டு நின்றதாலும் தொழிற் சிறப்பு அவரைத் தொடர்ந்தது. எதிர்க் கட்சிக்காரரை அண்டம் கலங்கினும் தம்மை அணுக விடாமல், தமது கட்சிக்காரருக்கு மட்டுமே நன்றி அறிதல் உடையவராக வாழ்ந்த பண்பு, அவர் வழக்காடும் தொழிலுக்குச் சிறந்த வெற்றியைக் வகுத்துக்கொடுத்தது. நீதிபதியின் நெஞ்சம் திருந்திட ஓதி வழக்கினை உணரச் செய்து, கொண்டவன் கட்சி குலைந்திடக் கண்டால் எதிரியை அணைத்துப் பேசி சமரசம் செய்தல் என்ற மரபுகளைக் கைப்பிடித்து, பிடித்த வழக்கினை முடித்து, நின்றதால் சிதம்பரனாரை நோக்கி, அடுத்த வழக்குகள் தொடர்ந்து வந்தன.

## காவல் துறையினர் சூழ்ச்சி

குற்றவியல் வழக்குகளில், காவல் துறையினரைத் தாம் கற்ற கலை நிறைந்த சிந்தனை கூடவர, குறுக்கு விசாரணையில் திக்கு முக்காடச் செய்து வழக்குகளில் வெற்றி பெற்றார் சிதம்பரனார். இது கண்டு பொறாமையுற்ற காவல்துறையினர் ஒரு பொய் வழக்கு ஜோடித்தனர். ஹெட் கான்ஸ்டபிள் சுப்பிரமணியம் பிள்ளை என்பவரைச் சுட்டதாகத் தொடங்கிய வழக்கில் சிதம்பரனார் எதிரிகளுடன் சேர்ந்து எண்ணிச் சதி செய்தார் என்று பொய் வழக்குரை எழுதி 'குற்றம் சாட்டப்பட்டவருக்கு வழக்கறிஞராக' வாதாடக்கூடாதென்று பேச்சுறுதி வேண்டினர் காவல்துறையினர். சமயம் அறிந்து, சிதம்பரனார் ஒப்புதல் தருவதுபோல் தந்துவிட்டு, தேவை ஏற்பட்டபோது தம் சொல்லை மீறி வழக்காடினார். சாட்சியை உடைத்திடும் தகாத செயல் செய்ததாக அந்த ஏட்டு புகார் செய்தான். இறுதியில் தூத்துக்குடி ஜாயின்ட் மாஜிஸ்டிரேட் ஆகப் பணி செய்த லயோனல்வை பர்டு என்பவன் அந்தவழக்கு, பொய்வழக்குஎன்று தன்ளுபடிசெய்தான்.அதன்விளைவாகஅந்த ஹெட்கான்ஸ்டபிள் சுப்பிரமணியம் பிள்ளை வேலையை இழந்தான். இந்த வழக்கின் வெற்றி சிதம்பரனாரின் திறமையைத் தரணிக்கு எடுத்துக்காட்ட, அதற்குப்பின்னர் அந்தக் காவல்துறையினர் அடங்கினர். எதற்கும் சிதம்பரனாரை எதிர்த்திடும் துணிவு இல்லாது ஒழிந்தனர்.

## நீதிபதி மீது வழக்கு

'நீதித்துறை என்பது ஒரு புனிதமான துறை. நீதி என்பது வழங்கப்பட்டால் மட்டும் போதாது. வழங்கப்படுவது போலத் தோற்றமும் பெறவேண்டும்' என்பது மரபுச் சொல். அந்த நீதி பரிபாலனம் செய்கின்ற நீதிபதி நிலவின் களங்கம் கூட இல்லாத

முழு மனிதனாக நிறைந்தால்தான் நீதி பிழைத்து நிற்கும்; தர்மம் தழைத்தோங்கும்; நியாயம் நிம்மதி பெறும். அந்த நீதிதேவனே குற்றம் இழைத்திட்டால் இந்தப் பூமிதான் தாங்குமோ? சிதம்பரனார் தொழில் ஆற்றும் நாளில் துணைக் குற்றவியல் நீதிபதியாகப் பணியாற்றிய ஒருவன், ஏகாம்பர ஐயர் என்பவன், நன்குப் படித்திருந்தும் பிறர்க்கு அடங்குதலின்றி அகங்கொண்டு அமைந்திருந்தான். திடம் கொண்டவரையும் செல்வர்களையும் தண்டித்து அழிக்க முற்பட்டான். அவனை அண்டினோரை எல்லாம் லஞ்சம் கேட்டு நீதியினை அடகு வைத்தான். அவ்வாறு லஞ்சம் வாங்கினான் என்று அவன் மீது இருவர் தொடங்கிய வழக்கினை ஏற்று நடத்தி, நீதிபதிக்குப் புத்திமதி கற்பித்தார், சிதம்பரனார். அதுபோலவே லஞ்சம் வாங்கிய காரணத்திற்காக விருதேவராவ் என்ற எழுத்தரை வேலையிறக்கம் செய்தும் பஞ்சாபகேசன் என்பவரை வேலை நீக்கம் செய்தும் நீதியை நிலை நாட்டினார். இவ்வாறு தந்தை சொல்லிய தொழிலை, துணிவுடன் ஏற்று எல்லையில்லா நீதியியற்றினார் சிதம்பரனார்.

ஈட்டிய செல்வத்தினை மற்றவருக்கு ஈந்து மகிழ்ந்தார். ஏராளமான கட்சிக்காரர்கள் அவருக்கு இருந்தனர் என்பதை அவர் கூறுகின்ற வழி, பிடித்த கட்சியின் பெயரும் விவரமும் எடுத்து இவண் உரைக்க இயலாது' என்ற சொற்கள்மூலம் தெரிகின்றோம். குறிப்பாக, ஒட்டப்பிடாரத்திற்கருகிலுள்ள முடிமன் என்ற சிற்றூரில் அடிமை போதத் தொழில் புரிந்து வந்த வேதநாயகம் என்ற பள்ளன் ஒருவனைப் பல வழக்கில் பிணைத்திட்டனர் காவல்துறையினர். அத்தனை வழக்கிலிருந்தும் அந்த ஏழைமகனை விடுதலை செய்து வெற்றிக்கொடி நாட்டினார். இது அவர் தம் தொழில் தொடக்கத்தில் நடத்திய வழக்குகளில் ஒன்றாகும். பிற்றை நாளில் நடந்த வழக்கொன்றில் தமிழ்த்துறை உணர்ந்த தம்பிரானரான திருவாவடுதுறை மடத்திலுள்ள ஆறுமுகம் பிள்ளை என்பவர் மீது தொடரப்பட்ட குற்றவியல் வழக்கினில் வெற்றிப் பெற்றுச் சிறந்தார்.

வழக்கறிஞரிலே பலவகை உண்டு: வயிற்றுக்காக வழக்காடுதல்; பெயர் பெற வேண்டுமென்று வழக்காடுதல்; பெருமைக்காக வழக்காடுதல்; நீதி, நேர்மை, நியாயம் மூன்றும் தழைத்திட எடுத்த வழக்கின் சிறப்புறக் கவனமாக உழைத்து வழக்காடுதல் என்பவர் உண்டு. இவற்றில் தான் பெற்ற சிந்தனைச்சிறப்பால், ஒழுக்கத்தின் சீலத்தால், உண்மையை நாடுகின்ற மனோபாவத்தால், நேர்மைக்குப் போராடுகின்ற நியாய பாவத்தால், சிறந்தவர்: சீர் பெற்றவர்; செம்மையான தொழிலில் திகழும் வெற்றி பெற்றவர் சிதம்பரனார் என்பது நீதிதேவனே

வழங்கி விட்ட தீர்ப்பாகும். அதற்கு மூவுலகிலும் மேல் முறையீடு இல்லை.

# சிதம்பரனாரின் உயிர்வடிவங்கள்

மனிதன் பிறக்கின்றான்; இறக்கின்றான். இருக்கின்ற சில நாளில் சிறக்கின்ற வகையில் அவன் செயலாற்றக் கருவியாக உள்ளது அவனது சிந்தனை. சிந்தனை வானில் தோன்றுகின்ற நினைவு எல்லாம் ஒளிமயமாக வடிவம் கொடுத்துப் படைத்தால் தான் அதன் அழகை, எழிலை, ஆகர்ஷண சக்தியை இந்த அவனி உணர்ந்து, தெரிந்து, போற்றி உய்ய முடியும். பற்பல சிந்தனை கள் பலவித நிலைகளில் கற்பனைச் சிறகோட்டி விற்பனைகருத்து ஏற்றி உற்பத்தியாவது உண்டு. பிறக்கின்ற எல்லாக் குழந்தை களும் பெருமை தன்னைப் பெறுவதில்லை. அதுபோன்று சிந்த னையில் தோன்றுகின்ற கருத்துக்கள் யாவும் செழுமையாக செம்மையாக, செவ்வானில் துருவ நட்சத்திரமாக மாறி நிற்ப தில்லை. வரலாற்று மனிதர்கள் வடித்திட்ட சிந்தனைகள் இன்று வாழ்வின் நூலாக வளம் சேர்த்து நம் உள்ளங்களைக் கொள்ளை கொண்டு திகழ்கின்றன. இவ்வழியில் எண்ணத் தக்க வண்ணச் சிந்தனைகள் வாழ்ந்த இதயம் கொண்ட சிதம்பரனார் தந்து நின்ற நூல்கள் பல தரணிக்குப் பெருமை தந்து நிற்கின்றன.

அவர் எழுத்துக்களிலே தேசிய உணர்வு ஊடுருவிச் செல் வதைக் காணமுடிகின்றது. 1902-ஆம் ஆண்டிலே அவர் எழுதிய கடிதங்கள் பலவற்றைக் காணுங்கால் அவர் உள்ள உறுதியைச் செயலின் தீர்மானத்தை அறுதியிட்டுக் கூறும் உறுதியான எண்ணத்தை அவை ஏந்தி வருவதைக் காண்கிறோம். பணம் கேட்டுத் தமது, அம்மான் ஞானதேசிகன் பிள்ளையவர்களுக்கு எழுதிய கடிதம் ஒன்றில் 'நான் எவ்வளவோ ஆத்திரப்பட்டுத் தங்களுக்குக் கடிதங்கள் எழுதியும் ஒரு பிரயோஜனமும் இல்லை. இது பார்த்தவுடனே பணம் தயாராய் உள்ளதா இல்லையா என்ற விபரத்திற்குப் பதிலெழுதும்படிப் பிராத்திக்கிறேன். இவ்விதம் நாள் கடத்துவது தங்களுக்குநியாயமாயிருந்தால் சரி,' என்ற எழுத்துக்கள் அவரது அடித்துக்காட்டும் உறுதிப்பாட்டை 'மோகத்தை கொன்றுவிடு, அல்லாது என்றன் மூச்சை நிறுத்தி விடு' என்ற பாரதியின் வழியில் முடிவான பதிலை எதிர்நோக்கும் தன்மையும் எழுத்தாற்றலும் இருப்பதை உணர்கிறோம். அதன் பின்னர் 11-7-1903 ஆம் நாள் சுவாமியவர்கள் சமூகத்திற்குத்

தார் எழுதிய விண்ணப்பத்தில், 'தங்களிடம் ரூ.1500/-தற்சமயம் வந்திருப்பதாகச் சரியான மனுஷாள் மூலமாய்க்கேள்வியுற்றேன், ஆதலினால் இது பார்த்தவுடனே எனக்கு வேண்டிய ரூபாய் பூராவையும் பீற்றர் பிள்ளையவர்களிடம் கொடுத்துத் தங்கள் நோட்டை வாபஸ் வாங்கிக் கொள்ளுங்கள். இந்தத்தடவையும் தாங்கள் பணம் செலுத்தாமலிருந்து விடக்கூடாது', என்று கடைசித் தவணை கொடுத்துவிட்ட பின்பு தமது கண்டிப்பினை ஐயம் திரிபறத் தெரிவித்திருந்தார். அதற்கும் அந்தச் சுவாமி யவர்கள் அசையவில்லை. எனவே தொடர்ந்து 13-8-1903-ஆம் நாளன்று எழுதிய கடிதத்தில், 'தங்களுடைய மரியாதையையும் அந்தஸ்தையும் கெடுத்துக் கொள்ளவேண்டுமென்ற எண்ணமும் நாங்கள் ஒருவரும் இனிமேல் ஒருநாளும் உங்கள் வீட்டுக்கு வரக் கூடாது என்ற எண்ணமும் தாங்கள் கைக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. எத்தனை வாயிதாக்கள் வைத்தீர்கள். என்ன வெல்லாம் எழுதினீர்கள், இப்படிக்கான மனுஷாளை நான் இது வரைப் பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை. உடனே பணத்தை அனுப்பவேணும் அல்லது 18இல் அவ்விடம் வருகிறேன். அதற்கு முன் பணம் தயாரித்து வைத்திருக்கவேணும், மரியாதை என்பது கிஞ்சித்துமில்லையே', என்று சொல்லுகின்ற பொழுது நியாய மும் தர்மமும் அவர் உள்ளத்திலே எத்தனை ஆழமாக ஆட்சி செய்தன என்பது உள்ளங்கை நெல்லிக்கனியாய்த் தெரியவரு கிறது. அந்த வரிசையில் கடைசியாக எழுதிய கடிதத்தில் வக்கீலுக்கே உரிய பாணியில் 'தங்களுக்கு எனக்குத் தாங்கள் சொல்ல வேண்டியிருக்கிற பணம் விஷயமாக எழுதுகிற கடிதம் இதுதான் கடைசி. நானும் உங்களுடைய பல வாய்தாக்களை நம்பி இதுவரை மோசம் போனேன். உலகத்தில் இத்தகைய மனுஷாளுமிருப்பார்களென்று தெரியாதவனாய்ப் போய் விட்டேன். செப்டம்பர் மாதம் 5-ஆம் தேதிக்குள் சூட்டுத்தாக்கல் செய்வது பிரமாணம். அதற்கு முன் பணம் அகப்பட்டால் அனுப்புங்கள். வேறு பதில் ஒன்றும் வேண்டுவதில்லை. உங்களுடைய வாயுதாக்களை இனிமேல் நம்பப்போறதில்லை. இது பிரமாணம்' என்று நிறைந்துள்ள சொற்கள் எந்த அளவிற்கு அவர் ஒரு யதார்த்தவாதியாக வாழந்திருக்கின்றார், மனித உணர்வுகளைத் தெளிவாகத் தெரிந்திருக்கின்றார் என்பதற்கு எடுத்துக்காட்டு. இத்துணை வேகமாக எழுத்துமூலம் தாக்கிய தமது அம்மானுக்குப் பிற்றை நாளில் எழுதிய மடலொன்றில், சுவாமியவர்களின் பாதகமலங்களுக்கு நமஸ்காரம் தெரிவித்து அவரது சஷ்டியப்த பூர்த்தி சிறப்பாக நடந்தேறும்படி கடவுளைப் பிரார்த்தித்து எழுதியுள்ளார். இது அவரது மன்னித்து மறக்கும் மனப்பான்மையை மகுடமென வலியுறுத்திக்காட்டுகிறது.

சிதம்பரம் பிள்ளை வாழ்க்கையிலே எல்லோர் வாழ்க்கையும் போலப் பணத்தட்டுப்பாடு ஏற்பட்ட காலங்கள் பற்பல. எனினும் கைம்மாறாகக் கூடப் பணம் கேட்பதற்கு அவர் மனம் கொண் டாரில்லை. 1-6-1935-ஆம் நாளன்று தனது மாப்பிள்ளை சிரஞ்சீவி ஞா. சுப்பிரமணிய பிள்ளைக்கு எழுதிய கடிதத்தில் 'உன் கடிதங்கள் எல்லாம் வந்தன. என் கையில் ரூபா இல்லை. கனம் முதலாளி அவர்களிடம் ரூபா கேட்கவெட்கமாயிருக்கிறது' என்று குறிப்பிடும் நேரத்தில் நல்லோர்களின் நாணம் கடனாளி கள் நாணம் நளினத்துடன் அவரிடம் நிலைத்திருந்தது என்பதைப் பார்க்கின்றோம். தமது புத்தகத்தை வெளியிட்டோரில் ஒருவ ரான சைவ சித்தாந்தக் கழகத்திற்கு எழுதிய மற்றொரு கடிதத் தில் ''அகமே புறம், மெய்யறம் என்ற புத்தகங்களை ஒவ் வொன்றும் நான்கணாவாக விலையினைக் குறைத்த போது பதிப்பாளருக்கு 25 சதவீதம் கழிவு தந்தபின்பு அனுப்பப்படும் புத்தகங்களில் விற்பனையாகாதவற்றைத் திரும்பப் பெறமுடி யாது'' என்று தெரிவித்தார். மேலும் நூலின் விலையைக் குறைத்து விட்ட காரணத்தால் அதனை அனுப்புகின்ற கட்டணத்தைப் பதிப்பாளரே ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றும் கண்டிப்புத் தெரிவித்தார். இது வணிகத்துறைக்குத் தேவையான கண்டிப்புகூட அவரிடம் வாழ்ந்திருந்தது, என்பதனை விளக்கு கின்றது.

நாவலர் சோமசுந்தர பாரதி அவர்களுக்கு 12-9-1935ஆம் நாளன்று எழுதிய கடிதத்தில், ''சிவஞான போதத்திற்கு ஓர் உரை எழுதி 'தினமணி' வருஷ அனுபந்தத்திற்கு அனுப்பி யுள்ளேன். ஸ்ரீசிவஞான சுவாமிகள் உரையைக் கண்டித்தால் சைவர் பலர் மனம் நோகுமென்று கருதி அது செய்யாது விடுத் துள்ளேன். என் உரை சுவாமிகள் உரைக்குப் பல இடங்களில் வேறுபட்டும் மாறுபட்டும் உள்ளது. அதற்குப் போலிச் சைவர் குழாம் என்னை நிந்தித்தல் கூடும். அந்நிந்தனையை வந்தனை யாகவே கொள்ளும் மனநிலையுடையேன் நான் தற்காலம்'' என்று குறிப்பிட்ட வாசகம் அவர் நயத்தக்க நாகரிகம் உடையவ ரென்பதை நினைவூட்டுகிறது. உலகொடு ஒட்ட ஒழுகுதலறிந்த உத்தமர் என்பதையும் உணர்த்துகின்றது. உடன் பிறந்தோரை ஊக்குவிப்பதில் உயர்ந்தவர் என்ற பண்பு 5-4-1936-இல் தமது தம்பிக்கு வரைந்த கடிதத்தில், 'தம்பியுடையான் படைக் கஞ்சான்' என்னும் பழமொழியைக் குறிப்பிட்டு, 'தம்பியுடை யான் யார்க்கும் அஞ்சான் என்று உணர்கின்றேன்' என்று கூறும் கூற்றில் காட்டப் பெறுவதைக் காண்கின்றோம்.

## திருக்குறள் மணக்குடவர் உரை பதிப்பு

பரிமேலழகர் உரையைப் படித்த சிதம்பரனார்க்கு, தருமர் மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிமேலழகர், பருதி, திரு மலையர், மல்லர், கலிப்பெருமாள், காளிங்கர் இவர் எல்லோர் உரைகளையும் 'பார்க்க' வேண்டுமென்ற அவா உண்டாயிற்று. அது முதல் தமிழ் நூல்கள் இருக்கும் இடங்களில் அவற்றைத் தேடவும் தேடுவிக்கவும் முயன்றார். அம்முயற்சியின் பலனாக அவருக்குக் கிடைத்தவற்றில் மணக்குடவர் உரைப்பிரதி ஒன்று. அது வள்ளுவர் கருத்துக்களைத் தெள்ளென விளக்குவதாதகவும் இனிய செந்தமிழ் நடையிலே எழுதப் பெற்றதாயும் அவருக்குத் தென்பட்டது. எனவே ஆண்பாலரும் பெண்பாலருமான வித் யார்த்திகள் இந்நூலை எளிதில் கற்குமாறு இதன் மூலத்தையும் உரையையும் மணக்குடவர் கருத்துக்கு இயைந்தபடி சந்திப் பிரித்து பதிப்பித்துள்ளார்.

''இந்நூலை யான் அச்சிடுதல் சம்பந்தமாக மஹா மஹோ பாத்தியாய மகா. ஸ்ரீ. ஸ்ரீ. ஸ்ரீ. உ. வே. சாமிநாத அய்யரவர் களும், ஸ்ரீ சகஜாநந்த சுவாமியவர்களும், ஸ்ரீமான் ஸ்ரீசெல்வ கேசவராய முதலியார் அவர்களும், ஸ்ரீமான் த. கனக சுந்தரம் பிள்ளையவர்களும், தென் ஆப்பிரிக்காவிலுள்ள இந்திய சகோதரர்களும் எனக்குச் செய்த மேற்குறித்த நன்றிகள் 'காலத் தினாற் செய்தலையும்' 'எழுமை எழுபிறப்பும்' உள்ளத்தக்கவை யுமாகும்'' என வரைகின்றார். தாம் பதிப்பிக்க முயன்றதற்குக் காரணம் என்ன என்று விளக்குமாறு ''திருவள்ளுவரின் திருக் குறளைக் கற்கும் ஒவ்வொருவரும், தத்தமக்குக் கிடைக்கும் உரைகளைத் துணையாகக் கற்றுக்கொண்டு, குறள்களின் பொருள்களைத் தாமே ஆராய வேண்டுமென்பது என் விருப்பம்'' எனக் கூறுகின்றார். இந்தப் பதிப்பு 1917-ஆம் ஆண்டு சென்னை கே. ஆர். அச்சகத்தில் அச்சிடப்பட்டு வ. உ. சிதம்பரம் பிள்ளை பிரம்பூர், சென்னை என்று குறிப்பிடப்பட்டே பிரசுரிக்கப் பட்டது.

அந்தப் பதிப்புரையில், 'புகழுடைமை' என்ற அதிகாரத்தைக் குறிக்கையில் புகழ் ''வள்ளியோரால் செய்யப்படுவதொன்றா கலின் இவ்வதிகாரம் செல்வரால் செய்யப்படும் ஈகையின் பின் கூறப்பட்டது'' என்ற ஒரு புதிய கருத்தினை வழங்கி நின்றார். அதுபோன்றே 'இனியவை கூறல்' என்ற அதிகாரத்தில், 'அருளு டையாரிடத்து நிகழ்வது ஒன்றாகலின் அருளுடைமையின் பின் கூறப்பட்டது என்று குறிப்பிடு முகத்தான் இனியவை கூறுபவர் அருளுடையார் என்ற புதிய கருத்தினைப் பேசுகின்றார். அது

போல 'வெஃகாமை அதிகாரத்தை வருணிக்கையில் தன்னியக் கத்தைக்காரணமாகக் கொண்ட கூடா ஒழுக்கங்களுக்கெல்லாம் வெஃகுதல்காரணமாதலினால் இவ்வதிகாரம் அழுக்காறாமையின் பின் கூறப்பட்டது'' என்றும், 'புறங்கூறாமை' என்ற அதிகாரத் தைப்போற்றுகையில் ''புறங்கூறுதல் வாக்கால் நிகழும் குற்றங் களுள் மிகக் கொடியதாதலால், இவ்வதிகாரத்தை மனத்தால் நிகழும் அழுக்காற்றையும் வெஃகுதலையும் நீக்கவேண்டுமென்ற பின்னர் கூறினார்'', என்றும் குறிப்பிடுதலைக் காண்கையில், சிதம்பரனார் கருத்துக்களை அலசி ஆராய்ந்து தக்க காரணம் காட்டி வாதித்து ஒரு முடிவினைத் தருகின்ற இலக்கிய வழக்கறி ஞராக விளங்குவதைக் காண்கிறோம். இறுதியாகப் 'பயனில சொல்லாமை' என்ற அதிகாரத்தைப் பரிந்துரை செய்கையில் ''வாக்கினால் நிகழும் பாவம் நான்கினுள், பொய்யை, 'வாய்மை' யாலும், கடுஞ்சொல்லை 'இனியவை கூற' லாலும் குறளையைப் புறங்கூறாமையாலும், விளக்கிப் 'பயனில் சொல்லை' இவ்வதிகாரத்தால் விளக்குகின்றார்'' என்று எடுத்துக் கூறுகின்றார். எனவே 1917-ஆம் ஆண்டிலேயே வள்ளு வத்துக்குப் புதுவழி காட்டும்புதியவனாக வாழ்ந்தவர் வ. உ.சி. என்பது வரலாறு.

## மனம் போல வாழ்வு

1920-ஆம் ஆண்டில் மூன்றாம் பதிப்பாக, சென்னை சரசுவதி அச்சு இயந்திர சாலையில் விலை அணா எட்டு என்ற முறையில் பதிப்பிக்கப்பட்ட நூலான 'மனம் போல வாழ்வு' என்ற நூல், ஜேம்ஸ் ஆலன் எழுதிய நூலின் மொழி பெயர்ப்பு. அந்த நூலின் முயற்சியின் வலிமையைப் பற்றி,

> 'உலையா முயற்சிகளை கணா ஊழின்
> வலி சிந்தும் வன்மையும் உண்டே —உலகறியப்
> பால் முளை தின்றுமறலி யுயிர் குடித்த
> கால் முளையே போலும் கரி'

(உலையா-கெடாத களைகணா- ஆதரவாக. பால்முளை- ஊழின் அங்குரம். மறலி-எமன்-கால்முளை- பிள்ளை மார்க் கண்டன். கரி- சான்று) என்ற செய்யுள் இடம் பெற்றுள்ளது. அதைத் தொடர்ந்து முதனூற்பாவாக

> 'ஆக்கல் திருத்தல் அமைப்பவன் மனனே;
> மனிதன் மனனே; மற்றவன் நினைப்பாம்
> கருவியை யெடுத்துக் கருதிய திருத்தி
> ஆயிரம் இன்பு துன்பாக்கிக் கொள்ளுவன்;

தனித்து நினைப்பான், சாரும் அஃதாங்கே;
நிலைமைகள் அவன் மன நிலைமை காட்டாடியே''
(காட்டும் ஆடி - காட்டும் கண்ணாடி)

என்ற செய்யுளைப் பாடியுள்ளார். 'தம்மை ஆக்குபவர் தாமே; என்னும் உண்மையைப் புருஷர்களும் ஸ்திரிகளும் கண்டு உணருமாறு செய்த சிறு நூலே ஆலன் நூல்' எனக் கூறுகின்றார். இந்த நூலை உருவாக்கியது குறித்து ''இந்நூலை மொழி பெயர்க்க வேண்டும் என்ற விருப்பம் என் மனத்தில் நெடுநாளாக இருந்ததேனும் அது நிறைவேற வாய்த்த சமயத்தை நோக்குங்கால், எல்லாம் வல்ல இறைவன் கருணை நினைந்து உருகும்படியிருக்கின்றது. இராஜ நிந்தனைக் குற்றம் செய்ததாக எனது ஆயுள் வரையில் நாடு கடத்தப்படவேண்டுமென்று திருநெல்வேலி அடிஷனல் செஷனஸ் கோர்ட்டால் தீர்ப்பு விதிக்கப் பெற்று, ஹைகோர்ட் உத்தரவுப்படி எனது அப்பீல் முடிவுவரை நான் வேலையினின்றும் நீக்கப்பட்டுக் கோயமுத்தூர் சென்ட்ரல் ஜெயிலில் வெறுங்காவலில் வைக்கப்பட்டிருந்தது அநேகருக்குத் தெரிந்திருக்கும். உயிர்களுக்கு உதவுதலே கடவுளை ஆராதித்தல் என்னும் கொள்கையையுடைய எனக்கு இங்ஙனம் கிடைத்த அவகாசம் எனது விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள அவன் அருளால் உண்டான நல்ல தருணமாகத் தோன்றியது'' என்ற எழுத்துக்களில் எழுதப் பெறுவது வ. உ. சிக்கு இறைவன் ஈடுபாடு எவ்வளவு உண்டென்பதை உணர்த்துகின்றது. அந்த நூலில் சிறந்த கருத்தாக, ''செயல் நினைப்பின் மலர்கள்; இன்பமும் துன்பமும் அதன் கனிகள். இவ்வாறாக, மனிதன் தனது சொந்த வேளாண்மையின் தித்திப்பும் கசப்புமுள்ள கனிகளடங்கிய களஞ்சியத்தை உண்டு பண்ணிக் கொள்ளுகிறான்'' என்று பேசி,

'மனமெனும் நினைப்பே நமையாக்கியது;
நினைப்பால் நாம்நம் நிலைமையை உற்றனம்
ஒருவன் நினைப்புக் கருமறம் பற்றிடின்
எருதுபின் உருளைபோல் வரும்நனி துன்பமே
ஒருவன் நினைப்புத் திரு அறம் பற்றிடின்
தன்னிழல் போல மன்னும் இன்பமே'

என்றும் குறிப்பிட்டு, நாலடியார் பாட்டான,

நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும் — நிலையினும்
மேன்மேல் உயர்த்து நிறுப்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானும் தான்'

என்பதினை நினைவூட்டுகின்றார். மனித வாழ்வின் வெற்றிக்கு அடிப்படையாக ஒழுக்கம் தேவை. ஆன்மசுத்தி தேவை என்று வலியுறுத்தி,

''எந்நிலைமை நீ அடைய எண்ணுவையோ நின்னுள்ளுள்
அந்நிலைமை நீ அடைவாய் அப்பொழுதே; - தந்நிலைமை
தந்ததென்பர் தோல்வியெலாம் *சாரமிலார்; நின்று நகும்
பந்தமில் ஆன்மா அவரைப் பார்த்து''

என்று பாடுகின்றார்,

* (சாரம் இல்லார் - அறிவில்லார்)

மனத்தின் உயர்வினை விளக்க வந்த காலத்து,

''அறவினைக்கும் அரும்பொருள் இன்பொடு
பெறுவதற்கும் பெருங்கல்வி கற்றுயர்
விறலினுக்கும் நல்வீரம் தனக்கும் ஒண்
துறவினுக்கும் துணை மனம் என்பதுவே''

என்றும்,

''நல்ல செய்து நரரையுயர்த்தவும்
அல்ல செய்தங் களற்றிடை யாழ்ப்பவும்
வல்ல திந்த மனமல தையனே
இல்லை யென்ன இயம்பும் மறையெலாம்''

என்றும் தாம் சொல்ல வந்த கருத்தைக் கவியிலே சொல்லிக் களிப்புறுகின்றார். மொழி பெயர்த்தல் என்பது மொழியினைப் பெயர்த்தல் அன்று, மூலவரைவிட உற்சவரை அலங்கரித்து உலா விடுதல் போல, மூல நூலைவிட, மொழிபெயர்ப்பு நூல், அறிவால் அலங்காரம் செய்யப்பட்டு, மொழியியக்கம் செய்யப்பட்டு அமிழ்தான கருத்து என்னும் தெளிவான தேரில்ஏறி நன்னூல்கள் என்னும் ஊரிலே வலம் வருவதற்கு ஒப்பாக நிறைவதே நல்ல மொழி பெயர்ப்பாகும். இந்த அழகினைச் சிதம்பரனாரின் சிறந்த படைப்பிலே காண்கின்றோம்.

## அகமே புறம்

1916- ஆம் ஆண்டு சென்னை புரோகிரஸிவ் பிரஸின், இரண்டாம் பதிப்பாக எட்டணா விலையில் வெளியிடப்பட்ட 'அகமே புறம்' என்ற நூல் ஜேம்ஸ் ஆலனின் மற்றொரு ஆங்கில நூலின் மொழி பெயர்ப்பு. ஏற்கனவே முதற்பதிப்பு 1916-ஆம் ஆண்டிலேயே வெளியிடப்பட்டது. நூலின் தொடக்கத்தில்

'அறத்தைக் காணா அறிவே மரமாம்;
அறத்தைப்பிழைத்த அறிவே மிருகம்;
அறத்தைப் புரியும் அறிவே மனிதன்;
அறத்தைக் காக்கும் அறிவே கடவுள்'

என்று அறத்தைப் பற்றி அறிவுறுத்துகின்றார். முதனூற் செய்யுளாக மனத்தின் தூய்மையை வலியுறுத்திப் பின்வருமாறு பாடுகின்றார்.

'நின்னுடையகத்தை நீ தூய தாக்கின்
நின்னுடை வாழ்வு நிதியழ கினிமை
மன்னியெஞ் ஞான்றும் வளர்ந்து நிற்கும்
நின்னுடை மனத்தை நீ தினங்காப்பின்
நின்னுடை வாழ்வு நீடித்து நிற்கும்
ஆண்மையும் வலிமையும் அழகும் எய்தும்
நின்னுடை பகையெலாம் நின்னுடையகத்துள்ளும்
நின்னுடை மனத்துளும் நிற்ப; ஆதலின்
ஒன்று நினை வெல்லா தூ றுநோய் செயாது,
நின்னுயர் வீடும் நின்னுடை யகத்துளும்
நின்னுடை மனத்துளும் நிற்ப தறிகவே'

தத்துவப் பலனறிந்த இந்நூலில், பணத்தின் தன்மையும் வன்மையும், செய்தலும் அறிதலும், உயர்தர வாழ்வு பற்றியும், மனோ நிலைகளும் அவற்றின் காரியங்கள் பற்றியும் விரிவாக விளக்கமுற, ஜேம்ஸ் ஆலன் கருத்துக்களை வகைப்படுத்தி வ. உ. சி வரைகின்றார். இறுதியாக இந்தக் கருத்துக்களைச் சுருக்கமாகக் கூறுகின்றார்.

''மெய்ப் பொருளை நேசிக்கிறவர்களே! உங்கள் மனத்தை ஒழுங்கு செய்யுங்கள். எச்சரிக்கையோடும், ஆலோசனையோடும் உறுதியோடும் இருங்கள். உங்கள் முத்தி உங்கள் அருகில் இருக்கிறது; உங்கள் ஆயத்தமும் முயற்சியும் வேண்டுவன. நீங்கள் பத்துத் தடவை தவறினும் ஊக்கத்துடன் எழுந்து உங்கள் வழியைத் தொடருங்கள்; நீங்கள் ஆயிரம் தடவை தவறினும் தளர்ச்சி அடையாதீர்கள். சரியான மார்க்கத்தில் பிரவேசித்த பின்னர் அந்த மார்க்கத்தில் நின்று சிறிது தவறிடினும் வெற்றியடைதல் நிச்சயம்.''

''முதலில் யுத்தம், முடிவில் வெற்றி. முதலில் வேலை; முடிவில் ஓய்வு; முதலில் எளிமை; முடிவில் வலிமை; தொடக்கத்தில் தாழ்ந்த வாழ்வு. யுத்தத்தில் சந்தடி. யுத்தத்தில் குழப்பம். இறுதியில் உயர்தர வாழ்வு, மௌனம், சாந்தி.''

அந்த நூலினை உருவாக்கி வெளியிட்ட பொழுது ''அற நூல்களைக் கற்று நிற்போரே இந்நூலைச் சொல்வதற்கு உரியர். கைம்மாறு கருதாது, சுருதி, யுக்தி, அனுபவங்களால் விளக்கிச் சொல்லுதலே இதனைச் சொல்லும் முறை. இம்மை மறுமைப் பயன்களை அடைய விரும்புவோரே இதனைக் கற்றற்கும் கேட்டற்கும் உரியர். இதன் பொருள்களைக் கசடறக் கற்றுக் கைக் கொண்டு ஒழுகுதலே இதனைக் கற்கும் முறை என்று விளக்கி இதில் கூறியுள்ளவாறு ஒழுகுபவர் தாம் வேண்டும் இகபர நிலைகள் எல்லாம் அடைவர்'' என்ற பாராட்டைப் பெற்றார்.

## மெய்யறம்

1917 ஆம் ஆண்டு இரண்டாம் பதிப்பாகச் சென்னை கலாரத்நாகர அச்சியந்தரசாலை மூலமாக வெளியிட்ட ''மெய்யறம்'' என்ற நூலின் தொடக்கத்திலேயே 'இதன் காகிதம் முதலிய யாவும் சுதேசியம்' என்று வியத்தகு வகையில் குறிப்பிட்டது அவரது ஆழ்ந்த நாட்டுப்பற்றை எடுத்துக்காட்டு கிறது. சிறப்புமிக்க ஆங்கில நூல்களைப் படிப்பதில் வல்லுனராக விளங்கி அவற்றின் பலனைச் செந்தமிழரும் சேர்த்துப் பெற வேண்டுமென்று தமிழாக்கித் தந்தது அவரது உயர்ந்த குணத் திற்கு ஓர் உதாரணம். ஆங்கிலேயரின் ஆட்சியே பிடிக்கவில்லை என்பதற்காக ஆங்கிலேயன் இந்த நாட்டின் சுதந்திரத்தைப் பறித்து விட்டான் என்பதற்காக அவனைச் சார்ந்த அனைத்தி லும் வெறுப்போ வெறியோ கொள்ளாது ஆங்கில மொழி மீது ஆர்வம் கொண்டு அங்கிருந்த நல்லறிஞர் சாத்திரங்களை நம் தமிழில் வார்த்துத் தந்து செந்தமிழ்க் கவிஞன் சீரான பாரதியின் கனவினை நனவாக்கி நின்றார்.

'மெய்யறம்' என்ற நூல் மாணவரியல், இல்வாழ்வியல், அரசியல், அந்தணரியல், மெய்யியல், என்று ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டு, மானுடப்பிறப்பை அடைந்த ஒவ்வொருவரும் முறையே மாணவராய், இல்வாழ்வாராய், அரசராய், அந்தண ராய், மெய்நிலையை அடையலாம் என்ற பிள்ளையவர்களின் கோட்பாடும் அவர்கள் அவ்வாறு அந்நிலைகளை அடைய வேண்டுமென்ற விருப்பமும் சேர்ந்து வடிக்கப்பட்டது. அவர் தமது சமர்ப்பணத்தைக் குறிப்பிடும் முகமாகப் பின்வருமாறு கவி புனைகிறார்.

> 'உலக மனைத்தினு மொளிமிக வுடைய
> நாவலந் தீவெனு மாவல மகளின்
> முகமென விளங்கும் பரதகண் டத்தின்
> செவ்விய நுதலாஞ் செந்தமிழ் நிலத்தின்

திலகமாமென விலகுபுன் னாட்டின்
செஞ் சொலார் பெருகுந் தஞ்சைமாநகரில்
தாளாண்மை செய்து வேளாண்மை புரியும்
கார்காத்தாருட் சீர் மிக வாய்ந்த
நற்குடிப்பிறந்து பொற்புற வளர்ந்து
தமிழுமாங் கிலமுஞ்சால்புறக் கற்று
நடுவு புரிந்து நற்புகழ் பெருக்கி
இராசாங் கத்தார் இராவ் பகதூ ரெனும்
பட்டம் வழங்கப் பண்புடன் பெற்றுத்
தமிழினை வளர்த்துத் தமிழ் நாடளிக்கும்
வலனார் சீனிவாசபிள்ளை
யவர்களீகை யாதிய நற்செயல்
கண்டுள மகிழ்ந்தவர்கட்குத்
தகவொடு ''மெய்யறம்'' சமர்ப்பித் தேனே !

'நன்றியினை இதனினுமேலாய் நவிலல் இயலாது! இந்நூலில் மாணவரியல் என்றபகுதியில்,

'தக்க ஆசிரியராற் றன்னிய லறிதல்' என்பது மாணவர் கடமை என்றும் 'தாய் தந்தையர் அடி முப்பொழுதும் அநுதின மும் தொழுக'' என்றும், 'தீயன எல்லாம் நோயென விலக்குக' என்றும், 'தினமும் நல்லினம் தெரிந்து சேர்ந்திடுக' என்றும் 'தன்னை அறியும் வழியில் மனத்தை யாளும் வழியும் உடம்பை வளர்க்கும் வழியும் கொலை, புலால், களவு, சூது, கரபு, மயக்கும் பொருட்கள், பொய்மை, புறஞ்சொல்லல், போன்றவையை' விலக்கும் வகைகளையும் ஆத்திசூடி வடிவில் ஓரடிப்பாவாக இயற்றினார். அடுத்து, இல்வாழ்வியலில் 'இல்வாழ்வார் கடன் இல்லறம் இயற்றல்' என்று தொடங்கி இல் அமைத்தலைப் பற்றி விரிவாகக் கீழ்வருமாறு கூறியுள்ளார்:

அகல நீள மரைக்கான் மைல் கொள்ல்.
ஈரிரு புறமதி லெதிரெதிர் வழிசெயல்.
மத்தியிற் புறமதின் மட்டமே லிற்செயல்.
இல்லிற் கீராயிரமடி சதுரமாம்.
நிலமேன் மதிற்கு நேர்கால் கீழ்செயல்.
வளியன் னீர்மா வழியா வகை செயல்.
வளியொளி யளவினுள் வரச்செல வழிசெயல்.
பொருட்குஞ் செயற்கும் பொருத்தமாய் பகுத்திடல்.
நிலவறைதான் செய னிதிமிகின் மேற்செயல்.
நற்றரு செடிகொடி பிற்புறத் தமைத்திடல். ''என்பதில்

'பொறியியல்' திறமை புலப்படுகின்றது.

'உயிர்த்துணைக் கொள்ளல்' என்ற அதிகாரத்தில், 'துணை இழந்தாரை மணப்பது புண்ணியம்' என்றும் 'விரும்பாதவரை விரும்புதல் பாவம்' என்றும் எடுத்து ஓதி, 'உயிர்த்துணை ஆளுதல்' என்ற அதிகாரத்தில், 'ஆண்பால் உயர்வெனல் வீண் பேச்சென்க' என்றும் 'இருவராய்த் தோன்றினும் ஒருவரே யுள்ளின்'' என்றும் பாடி, 'இன்பம் துய்த்தல் என்ற அதிகாரத்தில் 'துணையோடு இன்பம் துய்த்தலே சொர்க்கம்' என்றும், 'இரந்தும் புணர்ந்தும் உணர்ந்திடச் செய்க' என்றும் 'காமம் விலக்கல்' என்ற அதிகாரத்தில், 'காமம் அகப்புறக் கண்களைக் கெடுத்திடும்', எனவும் 'பரத்தை விலக்கல்' என்ற அதிகாரத்தில் 'மது, சூது இரண்டினும் பொதுமகள் கொடியவள்' எனவும் 'அவளுளம் நினைந்தால் தவசியும் கெடுவன்' என்றும் அறிவுரை அறைகிறார். 'மடிவொழித்தல்' என்ற அதிகாரத்தில் 'காலை மெய்ப் பயிற்சி சோலை நீர்க் குளிகொளல்' என்றும் 'இளம் பகலுணவரை யிராஉணவரை கொளல்' என்றும், 'இரவினில் யாமத்தென்று முறங்குக' என்றும், 'பயனுள சில சொல் பார்த்துப் பேசுக' என்றும் ஆலோசனை கூறுகின்றார். இவ்வாறு இல்வாழ்வியலிலும் அரசியலிலும் சிறப்பான கருத்துக்களை எளிய இனிய தமிழில் எடுத்தோதும் எழில் என்றும் போற்றிப் பாராட்டத்தக்கது.

## திருப்பொய்கையார் இன்னிலை

1930-ஆம் ஆண்டு அம்பாசமுத்திரம் அகத்தியர் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டுத் 'திருப் பொய்கையார் இன்னிலை' சிதம்பரம் பிள்ளையவர்கள் விருத்தியுரையுடன் தில்லையாடி தா. வேதியப் பிள்ளையால் பதிப்பிக்கப்பட்டது. 'இன்னிலை' என்ற நூல் கீழ்க்கணக்கு நூல்கள் என்பனவற்றுள் தொகுக்கப்பட்ட நூல். இந்நூலையியற்றி அருளினவர் தெய்வ அருளும் செந்தமிழ் ஞானமும் சிறக்கப் பெற்ற ஆழ்வார் பன்னிருவர்களில் ஒருவர். அவரே இந்நூலை இயற்றினார் என்பதற்கான காரணங்களைப் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்து சிதம்பரனார் எழுதியிருப்பது இங்கு எடுத்துக்காட்டற்பாலது.

''இந்நூலைத் தமிழ்த் தொல்லாசிரியர்கள் பலர் எடுத்துத் தமது நூலின் கண்ணே ஆண்டுள்ளார்கள். அவர்களில் நமது தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் ''முன்னோர் மொழிப் பொருளேயன்றி அவர் மொழியும் பொன்னேபோல் போற்றுவம் என்று இந்நூற் செய்யுள்களில் பலவற்றின் பொருள்களையும் சொற்களையும் எடுத்துத் தமது திருக்குறளின் கண்ணே ஆண்டிருப்பதை ஈண்டுக்காட்டுகின்றேன். இந்நூலின் 25-ஆம் செய்யுளிற்

கண்ட 'அன்னத்தின் பெற்றியரின் என் பெறும் பேறு' என்பதன் பொருளன்றோ 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள' என்னும் குறளடி? இந்நூலின் 26-ஆம் செய்யுளில்கண்ட 'தூவி நெருஞ்சிக் காய் நீர் முள்ளி தும்பையலர்' என்பதன் வேறு மொழியன்றோ, 'அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்' என்னும் திருக்குறள்? இந்நூலின் 27-ஆம் செய்யுளிற்கண்ட 'காமம் வீழின்பக் கடலாமே' என்பதன்றோ, ''இன்பக் கடல் மற்றுக் காமம்'' என்னும் குறளடி? இந்நூலின் 28-ஆம் செய்யுளிற் கண்ட 'ஊடி யுணர்வாரே தாமிசைவர் பல்காலம், ஈடிலதோர் இன்பவிருந்து' என்பதன் சாரமன்றோ 'ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம் கூடி முயங்கப் பெறின்' என்னும் குறள்? இந்நூலின் 29-ஆம் செய்யுளாகிய 'தோற்றாரே வெல்வர் துணை மிசையார் கோட்டியானை, யேற்றுக்கழறொடியார் மிக்காரை யாவரைவர், போற்றளி கூடல்கரி' என்பதன் தொகையன்றோ?

'ஊடலிற் றோற்றவர் வென்றா ரது மன்னும்
கூடலிற் காணப்படும்' என்னும் குறள்? இந்நூலின் 35-ஆம் செய்யுளிற் கண்ட,

''ஐம்புலத் தோர் நல்குரவோர் ஓம்பி'' என்பதன் விரி யல்லவோ ''தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென் றாங் கைம்புலத்தார் ஓம்பல் தலை'' என்னும் குறளும் ''துறந் தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும் இல்வாழ் வானென் பான் துணை'' என்னும் குறளும்? இந்நூலின் 34-ஆம் செய்யுளிற் கண்ட 'கைப் பொருள்வாய் இட்டிலுய் வாயிடுக்க' என்பதன் விளக்கமன்றோ,

ஆகா றளவிட்டதாயினும் கேடில்லை
போகா றகலாக் கடை'

என்னும் குறள்? இந்நூலின் 38-ஆம் செய்யுளிற் கண்ட, 'ஒல்லும் வாய் இன்னார்க்கினிய புரிதல்' என்பதன் விரியன்றோ,

'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு'

என்னும் குறள்? இந்நூலின் 39-ஆம் செய்யுளில் கண்ட, 'நனி காக்கும் ஒண்மை உறைப்படுத்தும் பண்போன்; பனி நிலத்தின் வித்தாய்ப் பெயரான்' என்பதன் வேறு மொழியன்றோ,

'உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து'

என்னும் குறள்? இந்நூலின் 42-ஆம் செய்யுளிற்கண்ட 'மாசகல வீறுமொளியன்ன நோன்புடையோர் முசா வியற்கை நிலதிணர் வார்' என்பதன் விரியல்லவோ,

'சுடச்சுடரும் பொன் போல் ஒளிவிடும் துன்பம்
சுட்ச்சுட நோற்கிற் பவர்க்கு'

என்னும் குறளும்,

'அற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு'

என்னும் குறளும்? அச்செய்யுளிற்கண்ட, 'இன்னல் இனிவாயாக் கொள்வார் பிறப்பிறப்பில், துன்னார் அடையும் நிலன்' என்ப தன் வேறு மொழியன்றோ,

'இன்னாமை இன்பம் எனக் கொளின் ஆகும் தன்
ஒன்னார் விழையும் சிறப்பு'

என்னும் குறள்? இந்நூலின் 43-ஆம் செய்யுளாகிய 'பேராய் பெருநிலன் சேய்த்தே யுடம் பொன்றா, பேரா ஒருநிலனா நீங்கப் பெரும் பொருளை ஏரா அறிந்துய்யும் போழ்து' என்பதன் தொகையன்றோ,

'ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து'

என்னும் குறள். இந்நூலின் 44-ஆம் செய்யுளிற் கண்ட ஐயுணர் வான் அறஞ்சார்பாச் சார்பொறுக்க நையா நிலை வேண்டுவார்' என்பதன்றோ,

'சார்புணர்ந்து சார்பு கெட வொழுகின்
மற்றழித்துச் சார்தரா சார்தரு நோய்'

என்னும் குறள்? இந்நூலின் 45-ஆம் செய்யுளிற்கண்ட (மெய்ப் பொருளைப்) ''பற்றித் தலைப்பட்டொர், நன்பால் அறிந்தார் துறந்தார் வரலுயந்தாய் என்பதன் விரியன்றோ,

'கற்றீரண்டு மெய்ப் பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி'

என்னும் குறள்? இக்குறளின் பொருள்களையும் சொற்களையும் இந்நூலாசிரியர் எடுத்துத்தமது நூலின்கண் ஆண்டுள்ளாரென்று கொள்ளலாகாதோ வெனின், ஆகாது. என்னை? இந்நூலாசிரியர் போன்றதக்க புலவர் திருக்குறளின் பொருள்களையும், சொற் களையும் எடுத்து ஆண்டிருப்பின், இந்நூற் செய்யுள்களது அழகு

முதலியவை திருக்குறட் செய்யுள்களது அழகு முதலியவற்றிற்கு மிக மேம்பட்டனவாயிருக்கும்.''

முன்னுரையில் இவ்வாறு அவர் எழுதுவது அவரது ஆழ்ந்த அறிவையும் ஆராயும் திறனையும், அலசிப் பார்க்கின்ற தெளிவையும் எடுத்துக் காட்டுகின்றது. எந்த நூலை எடுத்துக் கொண்டாலும், அந்த நூலோடு செம்புலப் பெயனீர் போலத் தம்மைக் கலந்து ஐக்கியமாய் விடுதல் அவரது சீரிய பண்புகளில் ஒன்றாகும். இந்தத் தன்மை அவரது பல்வகை முகமன் திறமையைப் பாருக்கு உணர்த்துகிறது. அறம், பொருள், இன்பம் என்பதற்கு இந்நூல் கூறும் கூத்தினைத் தொகுத்துச் சிதம்பரனார் விளக்கும் விதம் வியந்து போற்றத்தக்கது.

இவ்வுலகின் கண்ணுள்ள நல்ல உயிர்கள் துன்பங்களினின்று நீங்குவதற்காகவும் இன்பங்களை அடைவதற்காகவும் நாம் நினைக்கும் ஒவ்வொரு நினைப்பும், சொல்லும் ஒவ்வொரு செயலும் அறமாம். விலைமதிப்புடையனவும் ஒருவர் மற்றொருவருக்கு மாற்றத்தக்கனவுமான நிலம் முதலியனவும், மரம் முதலியனவும் பிராணிகள் பலவும் செயப்படு பொருள்கள் யாவும் பொருளாம். அறநெறியில் மெய், வாய், கண், மூக்கு. செவி என்னும் ஐம்பொறிகளாலும் நாம் நுகரும் சுகங்களெல்லாம் இன்பமாம். அறத்தைப் புரிதற்கும், பொருளை ஈட்டி நன்னெறியிற் செலவிடற்கும், இன்பத்தை நுகர்தற்கும் கர்த்தாவாயுள்ள 'யான்' என்னும் சீவத் தன்மையை விடுதலே வீடாம்! என்று அவர் வரைவது என்றென்றும் வாழ்கின்ற உரையாகும். இந்நூலின் உரைப்பாயிரத்தை முடிக்கும் போது, 'இந்நூலை வாசிக்கும் பெரியோர் எனது உரையிலுள்ள குற்றம் குறைகளை எனக்குக் காட்டியருளி, 'நன்றியறிதல்' என்னும் நற்குணம் என்னிடம் உண்டாகும்படிச் செய்வார்களாக' என்று அவர் எழுதுவது அவரது தன்னடக்கத்தையும் தமிழ் மீதுள்ள தணியாத ஆசையோடும், குறைவிலா நிறைவோடும் செய்ய வேண்டும் என்கின்ற எண்ணத்தையும் ஈடற்ற நிலையில் எடுத்துக் காட்டுகிறது.

'இன்னிலையின் பாடல்கள் அத்தனைக்கும் கருத்துரையும் விசேட உரையும் மிக எளிய நடையில் அனைவரும் புரிந்து கொள்ளுமாறும் மனத்திலே நிறைந்திடம் பெறுமாறும் அவர் தந்துள்ளமை பாராட்டத்தக்கது. குறிப்பாக,

''காமம்வீ ழின்பக் கடலாமே காதலரி
னேம விருக்கையே தூந்திரையா—மேமத்தீண்
டாம்பரலே தோன்று மளியூட லாம்பரலிற்

றெற்றித் தெறிப்பா மொளியொளிபாய் கண்ணே சேர்த்
துற்றுகப்பாய்ப் பெற்ற மகவு''

என்ற பாட்டிற்கு மிக மிக எளிய முறையில் பின்வருமாறு கருத்துரை எழுதியுள்ளார். ''இன்பத்திற்கு இருவரது வேட்கையும், இருவரது சேர்க்கையும், இருவரது அன்பும், இருவரது புலவியும், இருவரது தெளிவும், இருவரது கூட்டமும், இருவகை மக்களும் சிறப்பு.''

இவ்வாறு ஒரு மிகப்பழம் பெரும் பாடலுக்கு அகத்தில் படியும் அளவிற்குச் சுகமாகச் சுந்தரத்தமிழில் இலகுவான பொருள் தந்தவர் இவரன்றி வேறொருவர் இலர் என்று உறுதியாக இயம்பலாம்.

## வலிமைக்கு மார்க்கம்

1930-ஆம் ஆண்டு ஒரு ரூபா விலையில் வி. இராமஸ்வாமி சாஸ்துருலு அண்ட் ஸன்ஸ் அவர்களால் பிரசுரிக்கப் பெற்ற திரு ஜேம்ஸ் ஆலன் எழுதிய 'வலிமைக்கு மார்க்கம்' என்ற நூல் வ. உ. சியால் மொழி பெயர்க்கப்பட்ட நூலாகும். முதனூற் செய்யுளாக,

''அன்பிரவி நல்லொளி நீ ஆள்மனத்தில் பாரிக்க
இன்பமைதி நற்சுகம்நிற் கெய்துங்காண் துன்புதரும்
தன்னயத்தின் கார்நிழல்கள் சாயநனி எஞ்ஞான்றும்
நன்னயத்தில் வாழ்ந்திருப்பாய் நன்கு.''

என எழுதப்பட்ட பாடல் நன்னயத்தில் வாழ்ந்திருக்க ஆசிகூறும் விதமாக அமைந்திருப்பதே ஓர் அழகு. இந்நூலினை மொழி பெயர்க்கத் தூண்டுகோலாக இருந்தது ஜேம்ஸ் ஆலனின் கீழ்க் கண்டவாசகமே,

''உலகத்தைச் சுற்றிப் பார்த்தேன், அது துன்ப நெருப்பால் சுடப்பட்டுத் துக்கப்புகையால் முடுண்டிருக்கக் கண்டேன். அதன் காரணத்தைக் காண நினைத்தேன். அதனை உலகமெல்லாம் தேடினேன். அதனை அங்குக் கண்டிலேன்; அகத்துள் தேடினேன். அதனையும் அது அவரவரால் ஆக்கப்பட்டுள்ள தன்மையையும், அங்குக் கண்டேன். மறுபடியும் அகத்துள் ஆழ்ந்து நோக்கினேன். அதனைப் பரிகரிக்கும் மருந்தினைக் கண்டேன். அம்மருந்தாவது ஒரு சட்டம். அன்பாகிய சட்டம்; அஃது ஓர் ஒழுக்கம்; அச்சட்டத்திற்குஅடங்கி ஒழுகும் ஒழுக்கம்; அஃது ஓர் உண்மை; மனத்தை வென்றுகீழ்ப்படுத்தி அமைதியாக்கும் உண்மை.'' எனவே தான், அந்நூலுக்குப் பாயிரம் எழுதிய சிதம்பரம்பிள்ளை ஆலனின்

நூல்களை வள்ளுவர் மறைக்கு ஒப்பப் போற்றி, தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் அந்நூல்களால் நன்மையடைய வேண்டும் என்பதற்காகவே மொழி பெயர்த்ததாகக் காரணம் கூறுகின்றார். 'துன்பத்தின் கற்பனை' என்ற பகுதியை மொழிபெயர்த்த பின்பு அதனின் சாராம்சத்தை நேரிசை வெண்பாவிலே வடிக்கின்றார். வ. உ. சி. குறிப்பாக, 'துன்பமெலாம் ஓட வேண்டும். என்று கூறியிருக்கின்றார்.

'இரவி லெழும் பேயோ டிருட்குழுவை யோட்டும்
இரவிவருகின்றான் காண்இஃதோ; இரவிருளை
ஓட்டும் அவன்கிரணம் உன்முன்பார்; துன்பமெலாம்
ஓட்டும் அவன்ஒலிகேள் உற்று'.

'என்றும் இன்பமாக வாழ வேண்டும்,' அனைவருக்கும் இன்பம் சேரவேண்டும் என்ற கருத்தினை வலியுறுத்தி,

'நீண்டஇருள் இன்னினியே நீங்கிவிடும் நீளிரவும்
மாண்டஒளி வேண்டாது மாஇருளை வேண்டும்
பொருளனைத்தும் இன்னினியே பொன்றிவிடும் இன்பம்
மருவுமென்கின் றூன் தூதன் வந்து'

இன்பத்தைப் பற்றி இதைவிடச் சிறப்பாக,எளிமையாக வேறு எவரும் பாடினதாக வரலாறு இல்லை.

உலகம் மனத்தின் பிரதிபிம்பம் என்ற கட்டுரையின் கருத்தினை இரத்தினச் சுருக்கமாக,

''அன்புகொள வேண்டினுயிர்க் கன்புசெய்வாய்; மெய் வேண்டின்
இன்பமொடு மெய்மொழிவாய்; ஏனையர்க்கு — முன் பெதனை
நல்குவையோ அஃதுநினை நண்ணும்; நினதுள்ளம்
நல்குபிம்பம் நின்னுலகம்; நாடு.''

என்றே தெரிவிக்கின்றார். மூலக்கருத்தினைச் சிந்தாமல் சிதறாமல் கொண்டு வேறு மொழியில் அதனை அவ்வாறே வடித்தல் நல்ல மொழிபெயர்க்கும் சிறப்பாகும். அதில் எளிமையோடு இனிமை கலந்து அதனைப் பாட்டில் படைத்தல் பார் வியக்கும் திறன் அன்றோ? பாரதியின் நண்பர் சிதம்பரனாருக்கு இது கைவந்த கலை. மேலும் உலகம் உய்ய உயர்வழி காட்டும் முகமாக,

''உலகின் மரணக் கனவி னின்றும்
அமரினின்றும் உலகையெழுப்பி அஃ
தன்பும் நட்பும் அறிவும் அழிவிலா

வாழ்வின் ஒளியும் மன்னிடச் செய்ய
எண்ணுவையாயின், எழுப்புக நின்னையே''

என்று உயர்த்துவதைப் பார்க்குங்கால் மூலக்கருத்து சிறப்பாக இருந்ததோ என்னவோ, அதனை எடுத்துக்காட்டும் கண்ணாடியாக விளங்குகின்ற இந்நூல் தரும் கருத்துக்கள் தத்துவத்தின் மணிமகுடங்களாகத் திகழ்கின்றன. 'விரும்பாத நிலைமைகளை விலக்கும் வழி' என்ற கட்டுரையின் சாரமாக,

'தவறல்கள் மேன்மைத் தலைசேர்க்கும் ஏணிக்
குவவார் படிகளெனக் கொள்வாய்; கவலைதரும்
நட்டம் இலாபத்தை நல்கும்; பருவத்தில்
கட்டம் சுகம்நல்கும் காண்.
துன்பம் கடவுளியல் தூயசெயல் சொல்நினைப்போ
டின்பம் தரும்நெறிகள் எய்துவிக்கும்;— மன்பதைகள்
மேம்பாடுறு நெறியில் மேகஇருள் எல்லொளிகள்
தாம்பா டுறமன்னும் சார்ந்து.'

என்று மிகத் தெளிவாக யாவர்க்கும் எளிதில் புரியும் வண்ணம் வெள்ளித் தட்டில் வெற்றிலைப் பாக்கென வழங்குகிறார். நினைப்பின் மௌன வலிமை என்பதனை விளக்குமாறு,

நின்னினைப்பே நின்மேல் நிலவும் சுவர்க்கமாம்;
நின்னினைப்பே நின்கீழ் நிரயமாம்; — நின்னினைப்பை
யன்றியிவன் இன்பம் அணுவுமிலை; நின்னினைப்பை
யன்றியிவன் துன்பமிலை யாங்கு.

விழையும் இரவியது வெள்ளொளியே யீங்கு
மழைவில்லின் பன்னிறமா மாறும்; — தழைவோ
டிலகுமாறு மெய்ப்பொருளே எல்லாருங் காணும்
உலகினது பல்பொருளாம் ஓர்
மெய்ப்பொருளோ நின்மனத்துள் வீற்றனது;
நின்னான்மா
மெய்ப்பொருளை யெய்திநிற்க வேண்டுவையேல்—
கைப்பொருளை
நின்மனமெஞ் ஞான்றும் நினைக்கும் படிசெயல்நின்
கன்மமென நன்றாகக் காண்'',

என அவர் சுருக்கித் தருவது சுவர்க்கத்தின் திறவுகோலாக அமைகிறது. ஆரோக்கியமும் வெற்றியும் வலிமையும் என்ற கருத்தை உணர்த்தவரும்பொழுது,

''ஓடியே கழியும் ஒவ்வொரு கணத்திலும்
அன்பும் பொறுமையும் அளவிலா தாற்றி
மாசெள் ளளவும் மனத்துறா தாண்டு
வாய்மையி னின்று வழுவா தென்றும்

உயிர்கள் தமது செயிர்விட உதவின்
ஆரோக்கியமும் அழகும் வலிமையும்
அமைந்துள இடத்தை நாம் அடைந்துநின்
றழியா வீட்டினை அறிந்து ணரலாமே''

என்று சுகம் காணும் வழியைச் சுந்தரத் தமிழில் சொல்லி மகிழ்கிறார்.

வளரும் இன்பத்தின் மர்மம் என்னவென்று மிகச்சிறப்பாக அவர் சொல்லி மகிழ்கின்ற வகை நம்மையெல்லாம் சொக்க வைக்கற்பாலது.

'இன்பமெனும் மங்கையை என்பொரு ளாக்கத்
தேக்கு திராட்சை பாக்கு வனம் கடந்
தேகினேன்; ஓடினள்; வேகமா ஓடினேன்;
பொள்ளெனக் குன்றினும் பள்ளத்தாக்கினும்
நுண்ணிய வயலிலும் தண்ணிய நிலத்தினும்;
நீரினோட்டங்களை வீரமொடு கடந்து
கழகல றும்மலை தழுவிமேல் ஏறினேன்;
ஒவ்வொரு நாட்டையும் ஒவ்வொரு கடலையும்
விரைந்தே கடந்தேன்; விரைந்தவள்
தந்திரமாக முந்தி ஓடினளே.
யான் மிகக் களைத்துக் கான்மிகத் தளர்ந்து
பாழங்கரை யொன்றில் வீழ்ந்தயர்ந் தெழுந்தேன்;
ஒருவனுண வென்றான்; ஒருவனிதி யென்றான்
என்புதெரி கரங்களில் அன்புடன் அளித்தேன்;
ஒருவனது தாபமும் ஒருவனுறையிடமும்
அளித்தருள் என்றனர்; களித்துடன் அளித்தேன்;
இல்லார்க் கியன்றன எல்லாம் ஈந்தேன்;
இனியநல் லின்பம் கனியுமெய் ??ருவொடு
வந்துநின் றுனக்குச் சொந்த
மாதா னேனெனக் காதிலோதினளே ''

சுயநலம் விட்டொழித்துப் பிறர் நலம் நோக்குகின்ற பார்வையே இன்ப ஒளிக் கற்றையாம் என்பதனை வலியுறுத்தும் வண்ணம்,

''அழுகையும் துக்கமும் அணுவும் அணுகா
விழுமிய வீட்டை விரும்புகின்றனையா?
சுயநய அகத்தினைத் துறந்து
பரநய அகத்தினைப் பார்த்தடை வாயே''

என்று எடுத்துக் கூறினார். வலிமையை அடையும் மார்க்கம்

இறைவனை வேண்டி நிற்றலே என்பதனைத் தெள்ளத் தெளி வாகக் கீழ்வரும் இரு வெண்பாக்களில் தெரிவிக்கின்றார்.

> ''தீயவினை நோவு செறிதுன்பம் உட்கவலை
> தூயமன வெள்ளுடையில் தோய்ந்ததனால்— ஆயகறை
> பின்னிரங்கற் கேணி பிரார்த்தனையூற் றால்நீங்கி
> முன்னிருந்த வெண்மை வருமோ?
> யான்உள்ளே யின்றாக இம்மண்நீர் தீக்காற்று
> வான்உள்ளே நிற்கின்ற வாலறிவாம் — தேன்உள்ளே
> ஊறிப் பெருகியெங்கும் ஓடி நிறைந்துவெளி
> ஏறிப் பெருகிநிற்கும் இங்கு.''

இந்நூலின் முடிவில் முடிகின்ற முத்தான கருத்துக்கள் சிதம்பர னார் இந்நூலினை ஏன் மொழி பெயர்க்க முற்பட்டார் என்ப தனை உணர்த்துகின்றன. இறையோடு என்றும் ஒட்டிவாழும் முறை பெற்ற அவர் ஆலனின் கருத்துக்களில் இறை அறி வகை கள் எளிதாகவும் இனிமையாகவும் எடுத்தியம்பப் பெற்றிருக் கின்றன என்பதால் ஈர்க்கப்பட்டார். எப்பொழுதுமே ஒரு நூலினை மொழி பெயர்க்கும் முன்பாக அந்நூலின் மீது காமுற்றுக் கருத்து ஒன்றினால் தான் அந்த நூலின் முழுச் சாரத்தையும் மொழி பெயர்க்கப்படும் நூலின் மூலம் வழங்க முடியும். சிதம்பரனாரின் சிறந்த ஈடுபாடு ஆலனின் கருத்தோடு ஒன்றியிருந்ததால் இம்மொழி பெயர்ப்பு நூல் மூலத்தினை விடச் சிறந்ததாக மலர்ந்தது.

## சாந்திக்கு மார்க்கம்

'சாந்திக்கு மார்க்கம்' என்ற நூல் 1934-ஆம் ஆண்டு வ. உ.சி. அவர்களால் பதிப்பிக்கப்பட்டது. முதனூற்பாவாக,

> 'அன்பின் ஒளிநின் அகத்துட் புகவிடின்.
> இன்பம், அமைதி, எழில் சாந்தி—ஒன்றும்.
> சுயநயத்தை முற்றும் துறந்துவிடின், என்றும்
> பரநயத்தைப் பெற்றுயர்வாய் பார்த்து.

என்று தொடங்கி, செய்ந்நன்றி அறிதல் எனத் தலைப்பிட்டுத் தன்னை வளர்த்தோர்க்கு வாழ்த்துவோர்க்கு நன்றியினைத் தெரிவிக்கின்றார். ''என்னை ஆக்கி அளித்து, இந்நிலையில் வைத்திருக்கின்ற எல்லாம்வல்ல இறைவனுக்கும் என்னைப் பெற்றுவளர்த்து எனக்கும் கல்வி பயில்வித்த என் பெற்றோர் களுக்கும் தமிழையும், ஆங்கிலத்தையும் எனக்குக் கற்பித்து என்னை மேம்படுத்திய என் ஆசிரியர்களுக்கும் யான் நன்றியறித லுள்ளவனாயிருக்கின்றேன்.

1908-ஆம் வருஷம் ஜூலை மாதம் முதல் 1912-ஆம் வருஷம் டிசம்பர் மாதம் முடிய என் மனைவி மக்களுடைய வாழ்க்கைச் செலவுகளுக்கு மாதந்தோறும் ரூபா ஐம்பதுக்கு மேலாகத் தென் ஆப்பிரிக்காவிலிருந்து அனுப்பிக் கொண்டிருந்தும், அதற்குப்பின் எனக்குத் தந்தி மணியார்டர் மூலமாக முதல் முறை ரூபா ஐந்நூறும் இரண்டாம்முறை ரூபா இரண்டாயிரமும் அனுப்பியும், மூன்றாம் முறை ரூபா இரண்டாயிரமும் தங்கக் கைக் கடிகாரம் முதலியனவும் கொண்டு வந்து என்னிடம் நேரில் கொடுத்தும் உதவிய எனது மெய்ச் சகோதரர் தஞ்சை ஜில்லா தில்லையாடி திரு. த.வேதியப்பிள்ளை யவர்களுக்கு யான் நன்றியறிதலுள்ள வனாயிருக்கின்றேன். எனது நன்றியறிதலின் ஓர் அடையாள மாக அவர்கள் பெயரை முன்னரே என் இரண்டாவது மகளுக்கு 'வேதவல்லி' என்று இட்டுள்ளேன்.

எனது வக்கீல் உத்தியோகத்தினை மறுபடியும் அடைய யான் சென்ற 1929-ஆம் வருடத்தில் முயற்சித்தபோது சென்னை பெரிய நீதிமன்றத்து நீதிபதிகளுக்கெல்லாம் சிபாரிசு செய்து எனக்கு வக்கீல் உத்தியோகம் கிடைக்கும்படிச் செய்தவரும் அந் நீதிமன்றத்து அக்காலத்து நீதிபதிகளில் ஒருவராயிருந்தவரும் பின்னர் உபகாரச் சம்பளம் பெற்று லண்டன் நகரில் வசித்து வருகிறவருமான ஸ்ரீ. இ. எச். வாலேஸ் அவர்களுக்கு யான் நன்றியறிதலுள்ளவனாயிருக்கிறேன். என் நன்றி யறிதலின் ஓர் அடையாளமாக அவர் பெயரை முன்னரே எனது கடைசி மகனுக்கு 'வாலேஸ்வரன்' என்று வைத்துள்ளேன்.

யான் கோவிற்பட்டியை விட்டு இங்கு வந்த 1932-ஆம் வருஷம் மார்ச் மாதம் முதற்கொண்டு என் குடும்பச் செலவு களுக்கும், என் குடும்ப விசேஷங்களுக்கும் யான் வேண்டிய காலங்களில் யான்வேண்டியாங்குப் பொருள் அளித்தும், யான் வேண்ட நாணிய காலங்களில் என் குறிப்பறிந்து பொருள் அளித்தும் என்னைப் பேணி வருகின்ற தூத்துக்குடி திரு. க. செ. சு. கந்தசுவாமி ரெட்டியாரவர்களுக்கும் அவர்களுடைய குடும்ப மைத்துனர் திரு. க. செ. சு. முத்தையா ரெட்டியாரவர்களுக்கும் யான் நன்றியறிதலுள்ளவனாயிருக்கிறேன்.

எனது நிலைமையை அறிந்து எனது 'சஷ்டி பூர்த்தி நிதி' என்ற பெயரால் ஓர் ஆயிரம் ரூபாய்க்கு மேல் சேர்த்து எனக்குத் தந்துதவிய எனது நண்பரும், சிறந்த தேசாபிமானியும் பெரிய இராஜ தந்திரியுமான நமது 'தமிழ் நாடு' ஆசிரியர் டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு அவர்களுக்கும், அவர்கள் விருப்பப்படி அந்நிதிக்குப் பொருள் கொடுத்து உதவிய ஏனைய தேசாபிமான

சீலர்களுக்கும் யான் நன்றியறிதலுள்ளவனாயிருக்கிறேன்'' என்று நன்றி நவிலல் நயமான புதுமை.

'சாந்திக்கு மார்க்கம்' என்ற இந்நூலை நன்றியறிதலுக்கு மார்க்கமாக அவர் மாற்றி, நூலின் முகப்பிலேயே அதனை எடுத்துக் காட்டியிருப்பது அவரது பண்புக்கும் பணிக்கும் சிறந்த அணிகலனாகத் திகழ்கின்றது. இறைவனில் தொடங்கி பெற்றோரை வழுத்தித் தொழில் முறை நன்றி சொல்லியும் நலிவுற்ற போதும் வயது மிக ஒடிந்த காலத்திலும் நன்றிக்கரம் நீட்டிய அந்த நல்லோரை நினைவுகூரும் தன்மையாலும் சிதம்பரனார் வள்ளுவர் வாய்மொழிப்படி ஒரு 'மாபெரும் மனிதராகத்' திகழ்கிறார். உலகிலுள்ள மக்களெல்லாம் ஒள் ளறிவு சான்று வளர்நெடு செல்வமுடனும் வாழ்ந்து நலனுறவே இந்நூலை இயற்றினதாக இயம்புகின்றார்.

தியான வலிமையைத் தெரிவிக்கும் முகமாக,
'பெரியார் அடைந்துள பீடார் நிலைகள்
ஒருநாள் முயற்சியால் ஒன்றியவையல்ல;
பலநாள் பிறர்கண் படுத்துறங்குங்கால்
இரவில் முயன்றதால் எய்தியவைகளே'

என்று வரைகிறார்.

''தெய்வ அன்பை, தெய்வ நீதியை, தெய்வப் பரிசுத்தத்தை அல்லது கடவுளை நீங்கள் அடையுங் காலையில் உங்கள் இன்பம் பெரியதாகவும் உங்கள் சாந்தி ஆழ்ந்ததாகவும் இருக்கும். மாற்ற மும் மரணமும் இனிமேல் உங்களுக்குக் கவலையையும் துக்கத்தை யும் கொடுக்கமாட்டா. ஏனெனில் நீங்கள் மாறுதல் இல்லாத பொருளை அடைந்து மரணமில்லாத பொருளின் ஹ்ருதயத்தில் வாழ்ந்து கொண்டிருப்பீர்கள்'' என்று விளக்கிக் காட்டுகின்றார். 'ஞான மீன்' எனக் குறிப்பிட்டு ''விஷ்ணு மூர்த்தியும், கிருஷ்ண சுவாமியும் புத்த தேவரும் கிறிஸ்து நாதரும் பிறந்த நன் மீனே!'' எனத் தொடங்கி,

'சமயங்களில் புறச் சடங்குகளோடும்
உயிரும் பயனும் ஒன்றும் இராத
கைசெய் விக்கிரகங்களோடும்
பாவங்களின் தீப் பலன்களோடும்
எதிர்த்துப் போராடி இளைத்து மெலிந்து
மதத்தின் இருளில் வருந்தி நின் றொளியை'
நாடி நிற்றாய் நல்லறிவாளர்க் (கு)
உற்சாகத்தினை ஊட்டி யருளினை!''

என்று இறையருள் பெறும் மார்க்கத்தினை ஆலன் கருத்து வழி அறைந்து இஞ்ஞாலத்திற்கு ஞான அறிவு வழங்குகின்றார். இரண்டு தலைவர் என்று குறிப்பிட்டுக் கிறிஸ்துவின் அவதார மாகத்தோன்றிய இயேசுநாதர் கூறிய கீழ்க்கண்ட கூற்றை,

'எந்த மனிதனும் இரண்டு தலைவனிடம்
வேலை பார்க்க முடியாது; ஏனென்றால்
அவன் ஒருவனை வெறுப்பான், மற்றொருவனை
நேசிப்பான்; அல்லது ஒருவனைப் பற்றி
கொள்ளுவான்; மற்றொருவனை விட்டு
விடுவான்; நீ கடவுளுக்கும்
பிசாசுக்கும் ஊழியம் செய்ய முடியாது!''

என்று எடுத்துக் காட்டி, புத்தர் கூறிய சுற்றான' 'யான்' இருக் கின்ற இடத்தில் மெய்ப்பொருள் இல்லை. மெய்ப்பொருள் இருக்கின்ற இடத்தில் 'யான் இல்லை' என்பதனைச் சுட்டிக் காட்டி இறைவனோடு ஒன்றவேண்டும் என்று அழைக்கிறார். ஸ்ரீ கிருஷ்ண பகவான் மெய்ப்பொருளின் அன்பைத் தெரிந்த கொள்வதற்கு அடையாளமாகப் பகவத் கீதையில் பின்வருமாறு கூறுகின்றார் என்று அந்த கீதையின் சாரத்தை அற்புதமான தமிழில் அணிவகுத்துத் தருகின்றார்.

''அறிவினை அடைதற் கநுதினம் முயறல்
ஒருவினை குறிக்கோள், உயிர்க்கூறு செயாமை,
அடங்கிய பசிகள், அஞ்சாமை, ஈகை,
அடக்கம், கடவுள்பால் அன்புநன் னேர்மை,
மெய்ம்மை கூறுதல், வெகுளி கொள் ளாமை
மற்றையோர் பெரிதா மதிப்பவர்க்களித்தல்
இன்பம் துன்பம் இரண்டிலும் சமநிலை,
பிறர் குறை காணாப் பெருமை, இரக்கம்,
ஆசை களினால் அசைக்கப் படாமை
மெல்லிய தன்மை, மேம் பாடுடைமை
பொறுமை, தூய்மை, உறுதியுடைமை,
தீங்குசெய் தார்க் கெதிர்த் தீங்கு செய்யாமை,
இவை அறி குறிகள் எம் இள அரசே!
மெய்ப் பொருள் வழியில் மேவி நிற்போர்க்கே.''

யான்' என்பதனைத் துறத்தல் மெய்ப்பொருளுக்குவழி. ஆதலால்,

'அவ்வழி செல்லுக: அவாப்போல் துன்பிலை
வெறுப்பின் துயரிலை; பொறிபோல் கரவிலை
அவ்வழி செல்லுக; அருமிகை யொன்றை
விடுத்தோன் நடந்தான் வெகுதூரம் தானே'

என்றும், முடிவில், ''உங்கள் சுயநல விருப்பங்களை யெல்லாம் அன்பாகிய சுத்தத் தங்கமாக மாற்றுங்கள்; 'யான்' என்பது மெய்ப்பொருளில் மறைந்து போம். பின்னர் நீங்கள் அடக்க மாகிய சுத்தத் தெய்வ உடையால் உடுக்கப் பெற்று பணிவாகிய ஏரில் பூட்டப் பெற்று, குற்றமற்றவர்களாய் மனிதர்களுள் நடப் பீர்கள்'' என்றும்,

''மெலிந்தசோ தரனே! மெய்ப் பொருளிறைபால்
முயற்சியும் சண்டையும் முடிவடைந்திடுங்காண்.
மெய்ப்பொரு ளுடைய மென்புனல் விரும்பி
'யான்' எனும் பாலையில் ஏன் செல்கின்றாய்?''
''அழியிடம் விடுவாய்; அனைத்தும் துறப்பாய்;
விரும்பிய எல்லாம் விட்டொன் றிலனாய்
உள்ளுள கோவிலுள்; பொள்ளெனச் சென்றிடு;
தூயன், பரமன், மாறிலான் அங்குளன்''
''மௌன அகத்துள் வாழ்கிறான் அவன் தான்
மறமும் துக்கமும், வருந்தி அலைதலும்
நீத்த அவன் ஆனந்த நீரில் மூழ்குவாய்;
உன்னுயிர் வேண்டுவ உரைப்பான் அவனே''

''மெலிந்த சோதரனே விடு அமர் முயற்சி
காண்பாய் சாந்தியைக் கடவுளின் அகத்தே.
'யான்' எனும் பாலையில் அலைதலை நிறுத்தி
வந்துடன் மெய்ப்பொருள் வண்புனல் பருகுவாய்.''

மேற்கூறியவாறு இறைவன் ஏற்கும் வழி மெய்ப்பொருள் அறிதலே என்பதனை வலியுறுத்திச் சொல்லுகின்ற தன்மை வியப்பினை மேலிட வைக்கின்றது. தத்துவக் கருத்துக்களைச் சிறுவரும் புரியும் சித்திரத் தமிழில் பரிமாறி மகிழ்கிறார். அது வழி 'ஆன்ம வலிமை அடைதல்' பற்றியும், 'சுயநலமற்ற அன்பை அனுபவிக்கும்' முறையும், 'கடவுளொடு ஐக்கியமாகும்' முறை யும், ''ஊழியம் புரிந்து பூரண சாந்தியை அடைதல்'' பற்றியும் மிக அருமையாக இந்நூலில் மூலக்கருத்தினை விவரிக்கின்றார். ஒவ்வொரு கட்டுரை முடிவிலும் அந்தக் கட்டுரையின் உட் கருத்தைக் கவினுறு தமிழ்க் கவியில் புலப்பட வைத்திடும் அவரது புலமைக்கு ஈடில்லை. இணையில்லை.

'மலையும் மடுவும் ஒன்றே அதனைப் புரிந்திடும் மனமும் நன்றே' என்பதனை எடுத்துக் காட்டும் வகையில் பின்வருமாறு பாடுகின்றார்.

''கடற்கரை நின்றேன்; திடக்கடல் தாக்கலை
மலைகள் எதிர்க்கும் மாட்சியைக் கண்டேன்;
எண்ணில் தாக்கற் கிடையில் எப்படி
மலை நிற்கிறதென மனத்தெண் ணுங்கால்,
'மலையைக் கரைப்பதற் கலையின் இடைவிடா
முயற்சிகள் பயனில' என மொழிந் தேன் காண்.
ஆனால் மலைகளை அலைகள் எப்படி
உடைத்ததென் றெண்ணினேன்; உடனென் தாட்கீழ்

மலையுதிர் கல்மணல் அலையுடன் ஓடலைக்
கண்டேன்; பின்னர்க் கடலலையின்கீழ்
பழைய புவிநிலை அடையாளம் கண்டேன்;
அலைக்குக் கற்கள் அடிமையென் றறிந்தேன்.

எளிமையோடு இனிமை கலந்து ஊஞ்சலாடும் கருத்துக்கள் இளமையின் பூபாளம் என இனிக்கின்றன. நமது சிந்தனைகளை வரவேற்கின்றன.

'உண்மை சாந்தியை உணரும் வகை என்ன' என்பதைக் கூறும் முகமாக'

தன்னை நேசிக்கும் தவறையும் வாழ்க்கையிற்
கொண்டுள ஆசைக் கூரையும் வெல்லலும்,

ஆழ்ந்தகா மத்தை அகத்தை விட் டோட்டலும்,
அகச்சச் சரவை அகத்தினின் றகற்றலும்
உண்மைச் சாந்தியை உண்டாக்கும்மே''

என விளம்புகின்றார். இவ்வாறாக மொழிபெயர்ப்பு நூலாகத் தொடங்கி மூலநூலுக்கு மேலாகக் கருத்தினை வழங்கிச் சிறந் திட்ட சிதம்பரனாரைச் சீர்தூக்கிப் பார்க்கையிலே அவர் பேசு கின்ற தத்துவங்கள் என்னென்ன' சித்தாந்தங்கள் என்னென்ன இறை பொருள் என்னென்ன என்றெல்லாம் உணருகின்றோம். இற்றை நாளில் வெறும்பேச்சுப் பேசி இறைவன் நிழலில் நிற்ப தாக நடித்துக் காட்டி ஆள் அம்பு ஏராளம் எனப்படை திரட்டு கின்ற பெரியவர்கள் ஏராளம். அவர்களைச் சுற்றி எழுகின்ற ஒலி உலகின் எதிரொலி என விளம்பரப்படுத்தப்படுகிறது. இவ் வுலகின் தேவ தூதர்களாக அவர்கள் வருணிக்கப்படுகிறார்கள்.

அந்நாளில் இவ்வரிய கருத்துக்களை அடக்கமான முறையில் எந்தப் படாடோபமுமின்றிப் பாருக்கு உரைத்த பெருமை வ. உ. சிக்கு உரியது என நாம் காண்கின்றோம். இன்று கூட இக்கருத்துகள் இவர் இயம்பினாரா என்று உலகம் அறியாமல் கிடக்கிறது என்றகூற்றுஉண்மையோ?

## வ. உ. சி. உரை எழுதிய சிவஞான போதம்

1935-ஆம் ஆண்டு தூத்துக்குடி அய்யனார் பிரஸில் அச்சாகி வெளிவந்தது 'சிவஞான போதம்' வ. உ. சியின் உரையுடன். அவர் அந்த நூலுக்கு எழுதிய உரைப் பாயிரத்தைப் பார்க்குங்கால் சமுதாய நலனுக்காக அவர் எவ்வளவு அக்கறை கொண்டார் என்பது தெரிய வருகின்றது. அவர் கூறுகின்றார்:

'திருவள்ளுவர், திருக்குறள், சிவஞான போதம், கைவல்லிய நவநீதம் என்னும் நூல்கள் முறையே நீதி நூல்களிலும், சித்தாந்த நூல்களிலும் வேதாந்த நூல்களிலும் ஒப்புயர்வற்றவையென்பது எனது அபிப்பிராயம். இம்மூன்று நூல்களிலும் முந்திய இரண்டின் உரைகளுடைய கடின நடையும் பெரிய அளவும் அவற்றைத் தமிழ் மக்கள் கற்பதற்குக் கையில் எடுக்காதவாறு அச்சுறுத்துகின்றன. அவ்வச்சத்தை நிவர்த்திக்கும் பொருட்டு எளிய நடையிலும் சிறிய அளவிலும் அவற்றிற்கு உரைகள் எழுத வேண்டுமெனப் பல ஆண்டுகளுக்கு முன் நினைத்தேன். பின்னர்த் திருவள்ளுவர் திருக்குறளுக்கு ஓர் உரை எழுதி வெளிப்படுத்தினேன்.

இவ்வுரையில் ஏனைய உரைகளில் காணப்படும் பல மதக் கோட்பாடுகளும் அவற்றின் கண்டனங்களும் காணப்படா. அவை காணப்படாமைக்குக் காரணம் மக்கள் பலவேறு பெயர்களோடும் வடிவுகளோடும் காணப்படினும் அவர்களெல்லாம் மக்கட் சாதியினரே யாவது போல், மதங்கள் பலவேறு பெயர்களோடும் கொள்கைகளோடும் காணப்படினும் அவைகளெல்லாம் ஒப்புயர் வற்ற ஒரே இறைவனைப் பற்றியே பேசுகின்றன என்று யான் கருதுகின்றமையே. அன்றியும் மத வேற்றுமையைக் காண்பவர்களும், பேசுபவர்களும், 'யான்' 'எனது' என்னும் மத வெறி பிடித்த மாக்களே என்றும், நமது நாடு தற்காலம் இருக்கின்ற ஒற்றுமையற்ற நிலைமையில் மத வேற்றுமைகளையோ சாதி வேற்றுமைகளையோ வேறு வேற்றுமைகளையோ காண்பவர்களும் பேசுபவர்களும் தேசத்திற்குத் தீங்கிழைப்பவர்களேயென்றும் யான் கருதுகின்றேன். அதனாலும், இவ்வுரையில் யான் பல மதக் கோட்பாடுகளையும் அவற்றின் பொய்யான உயர்வு தாழ்வுகளையும் பற்றி ஒன்றும் பேசவில்லை. அந்த உரையின் இறுதியில் ஆத்திகத்திற்கும் நாத்திகத்திற்கும் பாலமமைத்து அவற்றின் வேற்றுமைகள் என்னென்ன என்பதனை வாதித்து எடுத்தோதி அவர் காணுகின்ற முடிவு வியக்கத்தக்கது. அந்த வரத்தினைப் பார்த்தால் அவரது தீர்க்கதரிசனமும் திடமான எண்ணமும் திட்டவட்டமாகத் தெரியவரும். அதனைப்

பின்வரும் மொழியில், சிவஞான போதச் சிற்றுரையில் தாம் கண்ட உண்மையெனத் தருகிறார்.

''இவ்வுலகத்தின்கண் தோன்றி நிலவுகின்ற சமயங்கள் பல. அவற்றுள் கடவுள் இல்லையென்று சொல்லும் சமயம் ஒன்று. அதனை நாஸ்திக சமயம் என்பர், ஆன்றோர். மற்றைய சமயங்களெல்லாம் கடவுள் உண்டென்று சொல்பவைகளே. அவற்றை ஆஸ்திக சமயம் என்பர் ஆன்றோர். நாஸ்திக சமயத்தினர் அண்டங்களின் அமைப்பும் அண்டங்கள் ஒன்றையொன்று ஒழுங்காகச் சுற்றி வருதலும், ஒவ்வொரு அண்டத்திலும் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஒழுங்காக நிகழ்ந்து வருதலும் இயற்கையின் சக்தியால் என்று சொல்லுகின்றனர். ஆஸ்திக சமயத்தினர்களோ அவைகளெல்லாம் ஒழுங்காக நிகழ்ந்து வருதல் கடவுள் சக்தியால் என்று சொல்லுகின்றனர். நாஸ்திகரது இயற்கையைத் தான் ஆஸ்திகர் கடவுளென்று கூறுகின்றனரென்று நாஸ்திகரும், ஆஸ்திகரது கடவுளைத்தான் நாஸ்திகர் இயற்கையென்று கூறுகின்றனரென்று ஆஸ்திகரும் கொள்வரேல், இவ்விரு சமயங்களுள்ளும் வேற்றுமையில்லை.

இவ்வுலகத்திலுள்ள ஆஸ்திக சமயத்தினர்களெல்லாம் தத்தம் சமயக் கடவுள் சர்வசக்தியும் சர்வ ஞானமும், சர்வ வியாபகமும் வாய்ந்தவரென்று ஒப்புக் கொண்டும் ஒவ்வோர் ஆஸ்திக சமயத்தினரும், தத்தம் சமயமே மெய்யான அல்லது உயர்ந்த சமயமென்றும், தத்தம் சமயக்கடவுளே மெய்யான அல்லது உயர்ந்த கடவுளென்றும்,மற்றைச்சமயங்களெல்லாம் பொய்யான அல்லது தாழ்ந்த சமயமென்றும் மற்றைய சமயக்கடவுளெல்லாம் பொய்யான அல்லது தாழ்ந்த கடவுளென்றும் கூறி வேறுபடுகின்றனர். சர்வ சக்தியும் சர்வ ஞானமும், சர்வ வியாபகமும் உள்ள பொருள் ஒன்று தான் இருக்க முடியுமேயன்றி, ஒன்றிற்கு மேல் இருக்க முடியாதென்பது அறிவுடைய ஒவ்வொருவரும் ஒப்புக் கொள்ளத் தக்க உண்மை.

ஒவ்வொரு சமயக் கடவுளுக்கும் ஏற்பட்டுள்ள பெயரும் வடிவும் ஒவ்வொரு சமயத்தையும் கண்டுபிடித்த ஆசிரியர்களாலும், அவர்களைப் பின்பற்றியோர்களாலும் அவரவர் பாஷைக்கும் உள்ளத்திற்கும், செவிகளுக்கும் கண்களுக்கும் இயைந்தவாறு கற்பிக்கப்பட்டவைகளே. ஒவ்வொரு சமயத்தினரும் தத்தம் கடவுளையே மற்றைய சமயத்தினர்கள் அவர்களுக்குப் பிரியமான பெயர்களாலும், வடிவுகளாலும் வணங்குகின்றார்களென்று கொள்ளின் ஆஸ்திக சமயங்களெல்லாம் ஒன்றேயாய் விளங்கும்.''
என்ற சிறு உரை பேரின்ப வீடுபற்றிப் பேசுகின்ற ஆன்றோரும் படித்து உணரவேண்டிய பாடம்.

## மெய்யறிவு

மெய்யறிவு என்ற நூலினை எழுதிய சூழ்நிலையைச் சிதம்பர னாரே பின்வருமாறு கூறுகின்றார்.

''இராஜ நிந்தனைக் குற்றத்திற்காக யான் நாடுகடத்தல் தீர்ப்புப் பெற்றுக் கண்ணனூர்ச் சிறையில் வசித்தகாலத்தில் என் பக்கத்தில் வசித்துக் கொண்டிருந்த மற்றைக் குற்றவாளிகளுக்குப் பல பாவங்களையும் அவற்றால் இம்மையிலும் மறுமையிலும் விளையும் கேடுகளையும் அவற்றை நீக்குதற்குரிய மார்க்கங்களை யும் அடிக்கடி யான் எடுத்துக் கூறுவதுண்டு. ஒரு நாள் அக்குற்ற வாளிகளில் சிலர், பல பாவங்களையும் தொடுத்துச் சில பாக்களா கச் செய்து கொடுத்தால் அவற்றை நாங்கள் மனப்பாடம் செய்து வைத்து அடிக்கடி நினைத்துக் கொள்வோம் என்று கூறினர். அவர் சொற்படி அன்றிரவு இந்நூலின் 'மறங்களைதல்' என்னும் அதிகாரத்திலுள்ள பத்து வெண்பாக்களையும் பாடி மறுநாள் அவர்களுக்குச் சொன்னேன். அவற்றை அவர்கள் மனப்பாடம் செய்த பின்னர் அவர்களது விருப்பப்படியே இந்நூலின் 'அறம் புரிதல்' என்னும் அதிகாரத்திலுள்ள பத்து வெண்பாக்களையும் பாடி மறுநாள் அவர்களுக்குச் சொன்னேன். பின்னர், அவ்விருபது வெண்பாக்களையும் இரண்டு அதிகாரங்களாக்கி, அவற்றிற்கு முன்னும் பின்னும் சில அதிகாரங்களைச் சேர்த்து மொத்தம் நூறு வெண்பாக்களாக்கி, அவற்றை 'மெய்யறிவு' என்னும் பெயருள்ள இந்நூலாக உருப்படுத்தினேன். அறத்தைச் செய்ய அவாவி நிற்கின்ற ஓர் ஆண்மகனை நோக்கி அவனுடைய ஆசிரியன் கூறுகின்றதுபோல் இந்நூல் இயற்றப்பட்டுள்ளது. இது சில புதிய கோட்பாடுகளையும் கூறுகின்றது.''

''உன்னையறிந்தால்—நீ உன்னை அறிந்தால் உலகத்தை நீ ஆளலாம் இன்பமே உன் நாளெல்லாம்'' என்று, தற்காலக் கவிஞன் ஒருவன் பாடியது போல் 'தன்னையறிதல்' என்ற அதிகாரத்தில் சிதம்பரனார் ஒரு மனிதன் தனது இலக்கணங் களைத் தெரிந்து கொள்ளத் தக்க திறமை இல்லாதவனாக் இருந்து கொண்டு இவ்வுலகத்தினது பொருள் நிலைமைகளை் ஆராய்ந்து அறிய முற்படுதல் பயனில செயலாம் எனப் பாடுகின்றார்.

''தன்னியல்பைக் காணுந் தகுதியிலா ரிவ்வுலகின்
பொன்னியல்பைக் காணப் புகுதலென்றோ?
-உன்னியல்பைக்
கூறுகின்றே னென்மெய்க் குருவினடி போற்றியறத்
தேறுகின்றாய் கேட்பா யினிது.''

அது வழியே உடம்பு என்பது என்ன என்பதை விளக்கி, பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் உண்டாய நாதம் முதலியனவும் சேர்ந்து பாதம் முதல் சிரசு வரையுள்ள பல உறுப்புகளாகிக் காட்சிக்குப் புலப்பட்டு நிற்பது உடம்பு, எனப் புனைகிறார். இந்தக் கருத்தை விளக்குமுகமாக,

''பாதமுதலாகப் பலவுறுப்பா யாகாயம்
வாதமனல் நீர்மண் மருவிவந்த—நாத
மிரத்த நரம்புதசை யென்புபிற கூடி
யுரத்தினொடு நிற்ப துடம்பு.''

எனப்பாடுகின்றார்.

தன்விதியை விதிக்கும் தலைவன் தானே, இறைவன் அல்லன் என்பதனை விளக்குமாறு விதியியல் அறிதல் என்ற அதிகாரத்தில் கீழ்வருமாறு பாடுகின்றார்.

''விதிவிதியென் றாழ்கின்றார் வீணாகத் துன்பில்
விதிவிதிக்கத் தம்மையன்றி வேறு—பதியொருவ
னுண்டென்று நம்பியொருசிலரிங் கன்னாரிற்
கண்டறியேன் பேதையரைக் காண்.''

அதே அதிகாரத்தில், பாவ கருமம் இன்பத்தைக் கொடுக்க மாட்டாது. புண்ணியக் கருமம் இன்பத்தைக் கெடுக்க மாட்டாது என்பதனை வலியுறுத்தி வரைகிறார். இந்த வெண்பாவில்,

''வேலவிதை மாங்கனியை மேவச் செய்யாததுபோற்
பாவவினை யின்பத்தைப் பார்க்கவிடா—தாவிங்
கெருக்கிலையின் பாலீயா தீயாது துன்பம்
பெருக்கநல்கு நல்வினைதான் பின்.''

இறையுணர்வு என்றும் நினைந்து விட்டு அந்த வீடே கதி என்று வாழ்ந்து விட்டாலும் இம்மையொடு இயைந்து வாழ்தல் இயலாததாக இருக்கக் கூடாது என்பது சிதம்பரனாரின் சீரிய எண்ணம். எனவேதான் உடம்பை வளர்த்தலைப் பற்றியும் உரைக்கின்றார். மனித உடம்பு பெறுதற்கரிய தொன்றாகலின் அதனை எவ்வித வியாதியும் பொருந்தாதவாறு காத்து, வலிமை யுறுமாறு வளர்த்து, உனக்குக் கீழ்ப்படியுமாறு அடக்கி ஆள்வாய் எனக் கூறி நின்றார்.

இதனை எடுத்துக்காட்ட இயம்பப்பட்ட பாடல் இது.

''மன்னுமிந்தப் பூவுலகின் மாண்புற்ற பல்பொரு
ளுன்னுடம்பிற் கொப்பிலையா லூக்கியதைப்-பன்னும்
பிணியெஃதுஞ் சாராது பேணிவளர்த் தென்றும்
பணியுமா றாள்வாய் பரிந்து.''

அந்த உடம்பினை எவ்வாறு வளர்க்க வேண்டும் என்றும்வழி காட்டுகின்றார். சூரிய உதயத்திற்கு ஒரு சாம நேரத்திற்கு முன்னர்ப் படுக்கையை விட்டு எழுந்திருந்து ஜலமலங்களைக் கழித்து, அறங்களைச் செய்யும் பாக்கியத்தைக் கொடுக்கவேண்டு மென்ற பிரார்த்தனையோடு கடவுளைத் தியானித்து, அறநூல் களைக் கற்று சிலம்பப் பயிற்சிகளைச் செய் என விளக்க வந்த வெண்பா இதோ:

''வைகறையில் கண்விழித்து மாசொழித்து மெய்யறங்கள்
கைவருதற் கீசனருள் கண்ணிப்பின்-மையல்
அறுத்ததற்கா நூனன்காய்ந் தியானையுர மெய்யிற்
செறுத்தற்கா நற்சிலம்பஞ் செய்.''

உடம்பை வளர்த்தபின்பு மனத்தை வளர்ப்பது மேலான முயற்சி. எனவேதான், மனத்தை ஆளுதல் என்னும் அதிகாரத்தில், ''கண்போன போக்கிலே கால் போகலாமா? கால் போன போக்கிலே மனம் போகலாமா? மனம் போன போக்கிலே மனிதன் போகலாமா'' என்கின்ற வினாக்களை நினைவு கூர் கின்றார். அதனைப் பாடல் மூலமாக,

மனத்தின்பின் செல்லாது மாணறங்கள் சார்ந்த
புனத்தின்பி னித்தமதைப் போக்கின்-றனத்தும்
பிறவற்றுஞ் சால்பெய்திப் பேரின்பவெள்ளத்
திறவற்று வாழ்வா யிவண்.

எனப் பாடுகின்றார்.

''தூங்காதே தம்பி தூங்காதே தூங்கிவிட்டு பின்னாலே ஏங்காதே'' என்ற கருத்தினை மனத்தில் கொண்டு எப்பொழுது தூங்கவேண்டும் என்று எடுத்தோதி, மற்ற நேரத்தில் அறநூல் களை ஆய்வு செய்ய வேண்டும். மனமானது பிறருக்குத் தெரியாமல் கொள்ளவேண்டும் என்று கருதுகின்ற கெட்ட பொருள்கள் உனது ஞானேந்திரியங்களை நெருங்காதபடி அவை யுள்ள இடங்களைவிட்டு விரைந்து நீங்கு என்ற கருத்தினை உலகிற்கு உணர்த்துகின்றார், இந்த அறிவு உதயகானத்திலே:

''இரவு நடுச் சாமத்தில் லெஞ்ஞான்றுந் தூங்கு
பரவுபிற நேரமெலாம் பார்நூல்—கரவி
லுனதுமனம் வேண்டுமென வுன்னுகின்ற தீய
வுனது பொறியைச்சேரா தோடு.''

''மழித்தலும் நீட்டலும் வேண்டாம் உலகிற் பழித்தது ஒழித்து விடின்' என்ற வள்ளுவத்தை வாழ்வாகக் கொண்டு வாழுகின்ற மனிதர்கள் துறவறம் பேணவேண்டுமென்று தோன்றுகின்ற

பொழுதெல்லாம் தூய வனம் நோக்கிச் சென்று அங்குள்ள இயற்கையில் தனை மறந்து நின்று, இல்லறத்தின் இன்பமும் துறவறத்தின் மேன்மையும் ஒன்று சேர இரண்டறக் கலந்து இன்பம் துய்ப்பர். அத்தகு அழகுக் கருத்தினை அகத்திலே அமர்த்தி ஆனந்தப்படுவர் இன்றைக்கு இன்பத் தமிழை அள்ளித் தெளிப்போர் என்று பெயர்பெற்ற, தமிழகத்தில் உறைவோரான தனிப் பெரும் சி.பா. அவர்கள். இதனை அன்றைக்கே சிதம்பரனார்,

'வனத்தை யடைந்தங்கண் வாழ்தனித்து நன்குன்
மனத்தை வசப்படுத்து மட்டுந்—தனத்தை
நிலத்தை மகளிரை நெஞ்சத்துட் கொள்ளா
வலத்தை யணைந்து மகிழ்ந்து.

என வழங்கி நின்றார்.

'தன்னிலையில் நிற்றல்' என்ற அதிகாரத்தில் 'தன் நிலையை எய்தியவரே மெய்ப்பொருளில் ஐக்கியமாய் எஞ்ஞான்றும் பேரின்பத்தில் வாழ்ந்து நிற்பர் என்ற கருத்தினை உட்படுத்தி உருவாக்கினார் இந்த வெண்பாவை:

''பொன்னுலகிற் கந்தமுண்டு புன்னரகிற் கந்தமுண்டு
தன்னிலையி னிற்பவரே சந்ததமு—மன்னுமொரு
மெய்ப்பொருளி லைக்கியமாய் வீடுற்று வாழ்ந்திருப்பர்
மெய்ப்பொருளெல் லாநீக்கிப் போந்து.''

தனது இலக்கணங்களை அறிந்து தன்னை அனுபவமாக உணர்ந்து, தனது சரீரத்தைப் பலப்படுத்தி, தனது மனத்தை அடக்கி நடாத்தி, உலகத்தின் அரசனாகி அறங்களை யெல்லாம் செய்து, தவத்தைச் செய்து முடிப்போன் கடவுளது சர்வ வல்லமைகளையும் பெற்றுக் கடவுளாய் நிற்பான்; என்பதனை உணர்த்த எழுந்த வெண்பா இது.

''தன்னையறிந்துணர்ந்து தன்னுடம்பைச் சீர்படுத்தித்
தன்னுளத்தை யாண்டென்றுந் தாரணியின்—மன்னா
யறனெல்லாஞ் செய்துதவ மாற்றிடுவோன் மெய்யின்
றிறனெல்லாங் கொள்வான் சிறந்து.''

பொய் என்றால் என்ன? என்பதனைப் புரிய வைக்கும் முகமாக பாடிய பாடல் இதோ.

'பொய்யுரைத்த லாக்கல் புறங்கூற னிந்தித்தன்
மெய்மறைத்தல் கோள்குறளை மேவிடுதல் - வெய்ய
வுரைபகர்தல் பொய்ந் நட்புறுதியில் கூறல்
புரைபடுவ சொல்லலெலாம் பொய்.''

உன் கடமைகள் என்னென்ன என்பதை உணர்த்திக் காட்டு கின்றார். உண்ணுதற்கும் உறங்குதற்கும் முன் கடவுளை வணங்கி அதற்கு முன் நாம் செய்த கருமங்களையெல்லாம் எண்ணித் தீயவற்றை விலக்கி நல்லவற்றைச் செய்ய வேண்டும் என நயம்பட உரைகின்றார். அந்த நயத்தை நிலைப்படுத்தும் நல்வெண்பா இதுவே.

'உண்ணுதற்கு முன்னு'முறங்குதற்கு முன்னு-மெய்யை
யுண்ணினைந்து போற்றி யுனதொழுக்க - மெண்ணிக்
கடிந்தவற்றை நீக்கிக் கடியாத செய்யின்
முடிந்தனவன் வேலை முறை.'

பொய்யினைப் புரியும்படி பகர்ந்த பாமலர், வாய்மையானது நல்ல நினைப்பையும் நல்ல சொல்லையும் பொருந்துதலும் உள்ளதை உள்ளவாறு கூறுதலும் உயிர்களுக்குத் துன்பம் விளைக் கும் சொற்கள் சொல்லாமையும் உயிர்களுக்கு இன்பம் விளைக் கும் சொற்களைச் சொல்லுதலே யாகுமாம். இதனைப் பாருக்குச் சுட்டிக் காண்பிக்கின்றார் இப்பாடலில்,

''வாய்மையென்ப தென்று மனம்வாக்குக் காயத்திற்
றூய்மையொன்றி நிற்றலுண்மை சொல்லலிவண்
சேயமையினு ந்
தீமை தருபவற்றைச் செப்பாமை நன்மைதரு
நீர்மையன சொல்ல னினைத்து.''

அறம்புரிதலுக்கு அரும் பொருள் தரும் நிலையில் கூறுகின்றார். நீ நித்திரையினின்று எழுந்திருந்த கணம் முதல் நீ நித்திரைக்குச் செல்லும் கணம் வரை உனது பார்வைக்கு எட்டக்கூடிய எல்லைக் குள் அற்ப உயிர்களும் உனது செயல்களாலாவது வேறு உயிர்களாலாவது உணவு இல்லாமையாலாவது தமது பகை உயிர் களாலாவது வருந்துமாறு விடற்க என்று கட்டளையிடும் முக மாகப் பாட்டினில் காட்டிநிற்கின்றார். அது இதுவே :-

''கண்விழித்த நேரமுதற் கண்டுயிலு நேரம்வரை
கண்ணளவுக் கெட்டுகின்ற காட்சிக்கு-ணுண்ணுயிரு
முன்செயலால் வேறுயிரா லூணின்மையாற் பகையின்
வன்செயலால் வாடவிடாய் மற்று''

தவம் செய்தலுக்குத் தகுதி தேவை எனினும் தகுதி பெறுவதற்கு முன்பாக முக்கியமான காரணமான மூன்றினை முறியடித்துக் கொள்ளல் முக்கியம் என்று மொழிகிறார். அவை சாதி பேதமும், மத பேதமும், காமமும் ஆம் என்று கூறுகின்றார். அதனை அழகு தமிழ்ச் செய்யுளாகப் பின்வருமாறு அமைக்கின்றார்.

''சாதியெனும் பொய்கொண்டுந் தன்சமயப் பேய்கொண்டு
மாதினது நோய்கொண்டும் வாழுயிர்க—ளாதி
மகவென்று நோக்காது மாணாத செய்வர்
தகவென்றும் போணாதவர்.''

'சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம் சுடச்சுட நோக்கிற் பவர்க்கு' என்றார் திருவள்ளுவர். இறைவன் உன்முன் தோன்றினால் என்னென்ன கேட்பாய் என்ற வினா எழுகின்றது. ''பொன்கேளேன்; புதுச் சுகம் கேளேன்; மண் கேளேன்; மது மாது இன்பம் கேளேன்; கண் காணும் ஆசை கேளேன்; கதிரடியில் களிப்பான வாழ்வு கேளேன்; துன்பம் ஒன்றே தா'' என்றேகேட்கவேண்டும். துன்பம் துய்த்தால்தான் அதனின்றும் மீண்டுவர வழி தேடும் வளமை எண்ணம், பிறக்கும். நமது மூளைக்குவேலை கிடைக்கும். தீயிடத் தீயிட மின்னிடும் தங்கம் போலத் துன்பப்படத் துன்பப்பட மனிதனின் ஆன்மா மேலும் மேலும் பொலிவுறுகிறது. இந்தக் கருத்தில் அசையாத நம்பிக்கைகொண்ட சிதம்பரனாரும் அதனைச்செய்யுளில் செப்புகின்றார்.

''உன்னுடலிற் குன்னுளத்திற் கூறுற்றா லஃதவற்றை
மன்னுதலி யற்கையென்று மற்றதனா—லுன்னறிவின்
மாசொழிய வஃதொளியை மன்னுமென்று முன்னன்மைக்
கீசனருளொன்றென்று மெண்.''

தவம் செய்த பின்பு மெய்யுணர்தல் வேண்டும், 'அறுமின், அறுமின், ஆசை அறுமின்' என்ற ஆன்றோர் மொழிப்படி அகப்புறப் பற்றுக்களை ஒழிப்பதற்கு மார்க்கம் கடவுளைப்பற்றுதலே. கடவுளைப் பற்றி அவ்விரண்டு பற்றுக்களையும் நாம் ஒழித்த காலத்தில் இவ்வுலகில் நிகழும் சகல காரியங்களுக்கும் கடவுளே கர்த்தாவென்று தெளிவாகத் தெரியப்பெறும். 'யான்' 'எனது' என்னும் செருக்கறுப்பான்' என்றார் வள்ளுவர். இம் மேலான கருத்தை மேன்மையுறச் செய்ய, நெய்யப்பட்ட பாடலே கீழ்வருவது,

''பற்றறுக்க வெஞ்ஞான்றும் பற்றில்லா மெய்ப்பொருளை
பற்றுகவென் றான்குரவன் பற்றியதைப்—பற்றறுத்த
காலத்தே மெய்ப்பொருளைக் காரியத்தில் கர்த்தாவா
ஞாலத்தே கண்டிடுவோ நன்கு''

இவ்வுலகத்தில் ஒவ்வொரு காரியத்தையும் அதனதன் காரணத்தையும் அக்காரணங்களைக் காரியங்களாக்கும் கர்த்தாக்களையும் நீ அறிவாயே யானால் 'கடவுளே அறிவு, மனம், பொறி

என்பவற்றின் காட்சிகளில் புலப்படும் நினைப்புகளும் உயிர்களும் பிறவுமாகி அவற்றைக் காப்பது என்று அறிவாய் என்ற அரிய பெரும் இனிய கருத்தைக் காட்டும் வெண்பாவே:

> ''காண்பாயேற் காரியமும் காரணமும் கர்த்தாவுங்
> காண்பாய்நீ மெய்ப்பொருளே காட்சிதனின்-மாண்பார்
> மனமுயிர்மெய் யாழிபுவி வானவற்றைச் சார்ந்த
> வினமா யவையளிப்ப தென்று'' எனப் பாடியது.

'மெய் நிலை அடைதல்' என்ற இறுதி அதிகாரத்தில் ஒரு நாடு எவ்வாறு அமைய வேண்டும் என்றெல்லாம் நினைந்து வேண்டு கிறார். பல இடங்களிலும் விவசாயமும் கைத்தொழில்களும் விருத்தியாகுமாறு செய்து நகரங்களையும் அரண்களையும் கலா சாலைகளையும் நல்ல மத ஆலயங்களையும் அழகோடும் மதிற் காப்போடும் படைக் காப்போடும் சேர்ந்து அமையப் பெறுவதே செம்மையான நாட்டின் இலக்கணம் என்று எடுத்துக்காட்டும் வகையில் இயற்றப்பட்ட செய்யுள்:

> ''ஏர்த் தொழிலுங் கைத்தொழிலு மெங்கும் பெருகிவரப்
> பார்த்தெழிலுங் காப்பும் படைநலனுஞ்-சேர்த்து
> நகரரண்கல் விச்சாலை நற்சமயக் கோவி
> னிகரறவாங் காக்கு நினைத்து.''

கடைசியாக 'மெய்வீடு' பற்றிப் பேசுகிறார். ''பகுத்தறிவுடைய மனிதசமூகம் முழுவதும் நல்ல செயல்களையே செய்து, மனத்தை அடக்கி, நடுவு நிலைமையில் நின்று, கருணையால் கடவுளை உணருமாறு எந்நாளில் இவ்வுலகம் மேம்படுமோ, அந்நாளிலே நீ கடவுட்டன்மையைப் பூரணமாக அடைந்து மேம்படுவாய். அம் மேம்பாடே மெய்வீடு''. இதையே மெய்யறிவு என்னும் நூலில் இறுதிப்பாட்டாகக் கீழ்வருமாறு பாடுகின்றார்.

> ''நன்றறியு மாந்தரெலா நல்வினையைச் செய்துளத்தை
> வென்றுநடு நின்றருளான் வெய்யுணர-வென்றுலக
> மேம்படுமோ வன்றேநீ மெய்ந்நிலையை யெய்திநனி
> மேம்படுவா யஃதேமெய் வீடு.''

வள்ளுவனின் மொழியினை வாழ்வில் நிதம் வகைப்படுத்தி அந்த இறைவனை நாட அந்நெறிகாட்டும் வழியினை எடுத்தோதி, சிவஞான போதத்தினைச் செம்மையுடன் சிந்தனையில்ஏற்றி, மேலைநாட்டு அறிஞரின் கருத்துக்களை தமிழுலகிற்குத் தரமுன் வந்து நின்ற சிதம்பரனார் நலம்பட நூற்றிட்ட மெய்யறமாம் இந்நூல் அவர் தத்துவச் சாரத்திற்கு ஒரு சக்கரவர்த்தி என நிரூபித்துக் காட்டுகிறது.

இன்பத்தினை ஏற்றுத் தன் வாழ்வினை இயக்கி மேலாம் நிலை அடைந்த போதும் தன்னை மறவாது வாழ்ந்தார். துன்பம் அவர் தோளில் சாய்ந்தபோதும் மடியில் வீழ்ந்தபோதும் மனம் கலங்காது அதனோடு இணைந்து சென்று வென்றார். வாழ்க்கை துன்பமும் இன்பமும் கலந்து உய்த்த வெவ்வேறு நிலைகளே என்ற காரணத்தால் தத்துவத்தின் ஒளிகாண அவரது மனவிழிக்கு ஞானம் ஏற்பட்டது. அந்த ஞானமே அவர் ஆற்றிய பல்வேறு பணிகளுக்கு அரும் சுனை ஊற்றாக அமைந்தது. அதன் விளைவாக எழுந்ததே, இந்த 'எளிய பகவத்கீதை' என்று ஏற்றமுற இயம்பக் கூடிய மெய்யறிவு என்னும் நூல். சிறையில் வாழ் கைதிகட்கு, சிந்தனைத் திருத்திட உருவாக்கப்பட்ட நூலாக அமைந்த போதிலும் இம்மை பிறப்பென்னும் சிறையில் உழன்று வருகின்ற எண்ணற்ற மக்கள் விடுதலை பெற்றுவிண்ணகத்தில் இறையடியாம் சுதந்திரச் சோலையினைச் சேர்ந்து விடச் சித்திரமாய் வடிக்கப் பட்டதே மெய்யறிவு என்கின்ற சிதம்பரனாரின் நூலாகும் என்ற ஏற்றமுற்றது. அவரது சீரான சிந்தனையைச் செறிவோடு பாராட்டிச் சுகப்படுவோம் நாம்.

## தொல்காப்பியம்-இளம்பூரணம்

1941-ஆம் ஆண்டு தானே பதிப்பாசிரியராக, தூத்துக்குடி விக்டோரியா பிரிண்டிங் பிரஸில் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் பதவுரையினை வெளியிட்டார். இந்நூலின் மூலம் அவரது தமிழின் பரிமாணம், அவரது அறிவாய்ந்த நோக்கு, ஆழ்ந்த பார்வை தெளிவான சிந்தனை, தேர்ந்த ஞானம் அத்தனையும் தெரிய வருகின்றது. பதிப்புரையில் சிதம்பரனார் கூறுகின்ற கருத்து வியக்கற்பாலது.

'ஆண் பெண் அலிகளை ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால் விகுதிகளால் உணர்த்துவது தமிழ்மொழி ஒன்றே. ஆண்பால் விகுதியைப் பொருந்தி ஆணைக் குறியாமலும் பெண்பால் விகுதியைப் பொருந்தி பெண்ணைக் குறியாமலும் ஒன்றன்பால் விகுதியைப் பொருந்தி அலியைக் குறியாமலும் நிற்குஞ்சொற்கள் ஆரியம் முதலிய மொழிகளில் எண்ணில உண்டு. உயர்திணை, அஃறிணை என்னும் தமிழ் இலக்கணப் பாகுபாடு ஆரியம் முதலியவற்றில் இல்லை. நிலத்தின் பாகுபாடுகளையும், அவற்றின் உரிப்பொருள், கருப்பொருள்களையும், அவற்றின் மக்களது ஒழுக்கங்களையும், கூறுவது தமிழ் இலக்கணம் ஒன்றே.'

'இவ்வகைத் தனிச் சிறப்புப் பொருந்திய இத்தமிழ் இலக்கணத்துள்ளும் ஆரிய மொழிகள் சிலவற்றையும் ஆரியர் பழக்க வழக்கங்கள் சிலவற்றையும், ஆரியர் கொள்கைகள் சிலவற்

றையும், இந்நூலாசிரியன் நுழைத்திருத்தலை ஆங்காங்குக் காணலாம், ஆயினும், தமிழ் மக்களின் முற்காலப் பழக்க வழக்க ஒழுக்கங்களும், தமிழ் மொழியின் நேர்மையும் மாண்பும் ஏற்றமும் இந்நூலின்கண் தெற்றெனக் காணலாகும். இந்நூலின் எழுத்ததிகாரச் சொல்லதிகாரச் சூத்திரங்களைக் கற்போர் நன்னூலாகியவற்றைப் புன்னூலாகியனவாகக் காண்பரென்பது திண்ணம்' என்ற விளக்கத்தை நோக்குங்கால் இலக்கியத் தமிழின் இமயத்தில் இவர் கோலோச்சி நின்றார் என்று இயம்பாமலேயே புலப்படுகிறது. எனவேதான் அரசவைக் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை கூட வீரர் சிதம்பரம் பிள்ளை பற்றி வரைந்த பாட்டொன்றில் பின்வருமாறு பாடுகிறார்.

''கள்ளமற்றுக் கலகலத்த பேச்சுக் கேட்கும்
கறுப்பெனினும் சிரித்தமுகம் கருணை காட்டும்
குள்ளமென்னும் ஒருருவம் இருகை கூப்பிக்
குண்டெடுத்துக் கடைந்ததெனக் குலுங்க நிற்கும்;
வெள்ளையன்றி வேறுநிறம் அறியா ஆடை
வேதாந்த சித்தாந்த ஒளியே வீசும்
கொள்ளை கொள்ளை சிறையிருந்த குறிகள் தோன்றும்
குலவுபிள்ளைச் சிதம்பரத்தை நினைவு கூர்ந்தால்.''

## வ. உ. சி. பற்றிய பாடற்றிரட்டு

1935-ஆம் ஆண்டு பி. வேலாயுதம் பிள்ளை என்பவர் 19 புலவர்கள் வ. உ. சி. அவர்களைப் பற்றிப் பாடிய பாடல் திரட்டை வெளியிட்டார். அந்தப் பாடல் திரட்டு 1911-ஆம் ஆண்டு பாடப்பட்ட பாடல் முதல் 1935-ஆம் ஆண்டு பாடப் பட்ட பாடல் வரை 131 பாக்களைக் கொண்டு மதுரைத் தமிழ்ச் சங்கக் கலாசிரியர் திரு. சு. நல்லசிவம் பிள்ளையவர்கள் வ.உ.சி. வேண்டுதல்படி எழுதித் தந்த அரும்பத உரையுடன் தூத்துக் குடியிலிருந்து வெளிவந்தது. 30-7-1911-ஆம் ஆண்டு திரு. வி சண்முகம் பிள்ளையவர்கள் எழுதிய நிருபம் ஒன்றில் சிதம்பர னாரைப் பற்றிப் பின்வருமாறு பேசுகின்றார்.:

"சந்ததி யளிக்கச் சென்றாள் கார்குழ லென்னு மாற்றம்
தொந்தம துணர்த லாலே சோகம தொழித்துப் போக்கி
நொந்தனை யுறுத்து மேனு நொய்தின்மற் றதனை நோக்கா
சிந்தனை சிதம்ப ரத்தே சென்றிடா தெனவுந் தேர்ந்தேன்.''

கற்றாரைக் கற்றாரே காமுறுவர் என்பது போலச் சிதம்பரனா ரைச் சூழ்ந்திருந்த நண்பர்கள் யாவரும் தமிழினைத் தமதாக்கித் தனித்தன்மையானவர்கள். எனவேதான் மலாக்கா ஜேசின், திரு.

நெ. வை. செல்லையா அவர்கள் 14-7-1919-இல் தமது வேண்டு கோளை எழுதிய நிருபத்தில்,

மாற்றாரு மடிவணங்கு மாண்புடைய சிதம்பரவேண்
மகிபமூவா
றேற்றாண்டு மேடமதி பிரம்பூர்நும் மில்லணுகி யினிதளாவி
வீற்றிருந்த வமயமிளம் பூரணமச் சிடுவதையும்
விள்ளக்கேட்டு
நூற்பிரதி தனிலெமக்கு மொன்றளித்தல் வேண்டுமென
நுவன்றிட்டமால்''

என்றே பாடுகின்றார். திருவாரூர் திருவள்ளூர் மடாலயம் ஸ்ரீ வி. வைத்திய நாத சுவாமி ஸ்தபதி அவர்கள் 11-5-1915-இல் எழுதிய நிருபத்தில்,

தேசாபி மானியாயச் செகமெலாந் துதிக்கும்
நேசனிற் சிறந்தோய் நினக்கு வந்தனம்

எனத் தொடங்கி வேறுபல பேசி,

குங்குமம் பூதியும் குணமுட னனுப்பினேன்
எங்கணு முங்களின் இசையது பெருகவே

என்று முடிக்கின்றார்.

17-5-1915-இல் எழுதிய மடலில், வ. உ.சி யின் பெருமையைப் பின்வருமாறு பாடி மகிழ்கிறார்.

''திருநெல் வேலியிற் றேசாபி மானியாய்
உருவெடு த்து மெய்யுற்றவர்க் கன்பராய்த்
திருவுங் கல்வியுஞ் சேர்ந்துமே வாழ்வுறும்
பெருமையோய் நிற்குப் பேசினேன் வந்தனம்.''

சிதம்பரம் பிள்ளையவர்களின் குணங்களை வரிசைப் படுத்தி வரைவதில் உளம் மகிழ்வு கொள்கின்றார் ஸ்தபதி அவர்கள்.

''தருமமும் பொறையும் வாய்மையும் வீரச்
தன்மையும் ஒழுக்கமும் நடுவுந்
திருநற் குணமுந் திருந்துபே ரழகுஞ்
சிறப்புமொண் கீர்த்தியுங் கொடையும்
அருளுமா தவமும் புனிதமும் அன்பும்
அறிவுமோர் உருவுகொண் டாழி
இருநில முதித்தால் என்னவந் துதித்தான்
என்னருஞ் சிதம்பரப் பெயரோன்'' (31-5-1935)

''கற்றறிவு குலமேண்மை கருணைபெரும் புகழ்ச்செல்வங்
கைமா றொண்ணா
துற்றதுவுங் கொடைசீர்மை ஒழுக்கம் அருந்தவநியமம்
உறவின் கேண்மை
மற்றெதிரி லாத்திண்மை வாய்மைமிகுந் தூய்மைகுணம்
வனப்புயாவும்
பெற்றுலகில் வாழ்ந்துவரும் சிதம்பரமாம் பிள்ளைபதம்
பேசி வாழ்வாம்.'' (6-6-1935)

ஆசாரத்திங் கொடையில் அறிவில் விவகாரத்தில்
அன்பிற் சொல்லும்
வாசால கத்திலுயர் மதியில்நிறை சம்பத்தில்
வாய்மை தன்னில்
கேசாதி பாதம் வரை வடிவழகில் பெரும்புகழிற்
கெம்பீ ரத்தில்
ஈசாதி தேவதைக ளிடத்திலன்பிற் சிதம்பரமாம்
பிள்ளை யென்பார்.'' (5-8-1935)

எனப் போற்றிப் பூரிக்கின்றார்.

சிதம்பரம்பிள்ளை எழுதிய கட்டுரைகளைப் பாராட்டி ஆசிரியப் பெருமகனாரும் ஆசி கூறுகிறார் என்பதனைக் காண்கிறோம். திருநெல்வேலி இந்துக் கல்லூரித் தமிழ்ப் பண்டிதர் திரு. த. மு. சொர்ணம்பிள்ளையவர்கள் 27-3-15 அன்று எழுதிய நிருபத்தில்,

''உள்ள இயல் உளத் துள்ள படிஉரைத்த
கள்ளமிலாய்! தூயநின் கட்டுரைகள் — உள்ளில்
உளங்களிக்கும் ஊறடைவார்க் குற்றதுணை ஆகும்
தெளிவளிக்கும் நன்மருந்தாம் தேர்''

என்று குறிப்பிடுகின்றார்.

உன்னைப் பார்க்கின் உலகை மறப்பேன் என்ற நண்பர் லால்பேட்டை திரு. நா. குப்புச்சாமிப் பிள்ளை நட்பால் ஆசையுற்று சிதம்பரம்பிள்ளையின் திருமுகத்தினைவருணிக்கும் விதம் நம்மையெல்லாம் மெய்சிலிர்க்கவைக்கின்றது.

''நம்மையுந் திருவாக்கிடும் பெருகு
நலமெலாந்தரும் ஞானமும் பயக்கும்
இம்மை வேண்டிய பலன்களைக் கொடுக்கு
மின்பமுந் தருமில்லறம் பெருக்கும்

தம்மையுந் தலைவன் றனைக் காட்டுந் தான
தருமமுந் தவறிடா நெறியும்
செம்மை யென்பன யாவையு மளிக்கும்
சிதம்பரம்பிள்ளை திருமுகந்தானே.''

ஆழ்வார் திருநகரி பென்ஷன் ரெவினியூ இன்ஸ்பெக்டர் திரு. அனந்தபத்மநாபபிள்ளை அவர்கள் 16-2-15 அன்று எழுதிய நிருபத்தில், நண்பர் மீதுள்ள அரிய ஒரு பிணைப்பையும் காட்டும் வண்ணம்,

''அருளது வடிவாய்த் தோன்றி அமரர்கட் கரசையீந்து
குருமுனிக் குபதே சத்தைக் கூறிய முருகா நாளும்
அரியவென் சினேக னென்றே அறைந்திடுஞ் சிதம்பரத்தைக்
கருணையால் காப்ப துன்றன் கடனெனக் கழறினேனே''

என்று குறிப்பிட்டுள்ளார்.

ஸ்ரீ சகஜானந்த சுவாமிகளார் எழுதிய நிருபத்தில் சிதம்பரனார் வள்ளுவம் தனக்குச் சொல்லிக் கொடுத்தனர் என்று குறிப்பிடும் பாங்கினைக் காண்கின்றோம்.

''சாவா மருந்தெனவே தற்பரனார் வள்ளுவர்செய்
பாவா லறிவெனக்குப் பாலித்த—தேவா
சிதம்பரமென் சற்குருவே சிந்தையினில் நின்னின்
பதம் பெற்றே னென்றும் பணிந்து.''

'ஜெய வீர சிங்காரச் சிந்துவில்' அவரைப் பற்றிக் கீழ்க்கண்டவாறு பாடப்பட்டுள்ளது:

''நாமகள் மாமி கமலப் பூமகள் பூமிபுகழ்
நண்ணு செல்வ வாச துரை ராசனே—பக்தி
பண்ணுவோர்க் கருள் சிதம்பரேசனே யெந்த
நாளுமே துணை யாளுமே யவனாகுமே யென—நாடியே தொழு
ஞானதாச னாகவந்தா னென்னவே—மந்திர மாநகரில் வாழு மணிமின்னவே''

கொடையில் கர்ணனென்றும், குமணனென்றும் வாழ்ந்தார்; எல்லோர்க்கும் எல்லாமும் ஈந்தார். எவர்க்கும் இல்லாமை இல்லாத நிலை இருக்க வேண்டுமென ஏங்கினார் என்பதன் எடுத்துக்காட்டாக ஸ்ரீ வைகுண்டம் திரு. ஆறுமுக தேசிகர் அவர்கள் சொல்லியது இன்று நினைக்கற் பாலது.

''கல்வியிற் செல்வந்தன்னிற் கருணையிற் புகழ்பெற்
றோங்குஞ்
செல்வனாஞ் சிதம்பரப்பேர் மன்னனைச் சென்று
கண்டா
லல்லல்செய் வறுமைதானு மகன்றுபோய் நீங்கிற்றன்றே
மல்குதாம் புறநல் லூச லெனச்சுழல் மடமை நெஞ்சே.''

ஆலமரம் நாடும் புள்ளினம் போலக் கற்றோர் நாடுகின்ற கருவூல மாகச் சிதம்பரனார் திகழ்ந்தார் என்பது மதுரைத் தமிழ்ச் சங்க வித்துவான் திரு. சுப்பிரமணிய கவிராயரவர்கள் பாடிய கீழ்க் கண்ட பாட்டிலிருந்து தெரிய வருகிறது.

''திருவிருந்து வாழ்மனையன் சிதம்பரசற்
குணன்றன்னைச் சேர்கற் றோரை
வருவிருந்து திகவிசொல்வீ ரெனக்கேட்டுப்
பரிசுதவி மகிழ்ந்தன் னார்க்குப்
பெருவிருந்து புரிநயத்தைக் கம்பனுங்கும்
பனுமெனப்பேர் பெற்றீர் நீவி
ரிருவிருந்துங் கமுறவுரைப் பீரெனிலப்
பாவடங்கா தெனச் சொல்வாரே.''

இந்தப் பாடற்றிரட்டு நூலிலிருந்து நமக்குத் தெரிய வருவது சிதம்பரனாரின் சிறந்த பண்புகள், குணங்கள் என்பது மட்டு மின்றி அவர் அற்றை நாளில் ஒரு பாட்டுடைத் தலைவராகப் பரவி நின்றார் என்பதே. நாட்டுப்பற்றுடைய நல்லவராக மட்டு மன்றி நாளும் நீதியின் கூற்றினால் ஏற்றமுடைய வல்லவனாக வாழ்ந்தது மட்டுமன்றித் தமிழ்த்தாயின் அகத்திலே வீற்றிருக்கும் புலவனாக மலர்ந்து புலவரே போற்றும் புரவலனாகப் பிரகாசித் தார் சிதம்பரனார்.

## சிதம்பரனாருக்குப் புகழாஞ்சலி படைப்பு

பம்பாய் மாதுங்கா தமிழ்ச்சங்கம் 18-11-51-இல் வெளியிட்ட வ. உ. சிதம்பரம்பிள்ளை மலர் புகழாரங்கள் இதோ: கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்கள்,

''மஞ்சிலா வான மதீயின் ஒளிபோல
விஞ்சிநீ டூழி விளங்குகவே—வன்சிறையில்
செக்கிழுத்த வீரன் சிதம்பரன் மெய்ப்புகழ்தான்
மக்க ளிடை ஓங்கி வளர்ந்து.''

எனவும், யோகி சுத்தானந்த பாரதியார்,

''எங்கள் சிதம்பரம் என்னில் — வீரம்
 ஏறுது நெஞ்சினிற் சேர்ந்து துன்பம்
பொங்குதோர் ஆவேச வெள்ளம் — தளை
 பொட்டென்றறுந்து விடுதலை சேர
வங்கம் அழைக்குது நம்மை — அதில்
 வாழி சிதம்பரம் என்றிசைத் தாடும்
தங்கக் கொடிதோன்றுதையே — தமிழ்
 தந்த சிதம்பரம் சந்ததம் வாழ்க!''

எனவும் ஏற்றி மகிழ்கின்றனர். வ.உ.சியைச் 'செயற்கரிய செய்த பெரியார்' என்று வருணித்த வரதராசனார், 'ஒரு நாடு உரிமையோடு விளங்க வேண்டுமானால் முதலாவதாக அதன் பொருளாதாரச் சுரண்டலைத் தடுக்க வேண்டும்; இரண்டாவதாகத் தாய் மொழியின் வாயிலாக அறிவை வளர்க்க வேண்டும். இந்த இரண்டும் எல்லா நாடுகளுக்கும் பொதுவான உண்மை. இதை நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே நன்றாக உணர்ந்து வாழ்க்கையில் காட்டித் தொண்டு செய்தவர் வ.உ.சிதம்பரம்பிள்ளை' என வரைந்தார்.

பிள்ளையின் பெருமை என்று பேசுகிற நாவலர் திரு. சோமசுந்தர பாரதியார் சொல்லுகின்ற சொல் இது: 'தென்னாட்டுத் திலகர்' எனப் புகழ்ப்பேர் பூண்ட, காலஞ்சென்ற திரு. வ.உ. சிதம்பரப்பிள்ளையவர்களைப் புதிய இந்தியாமுழுவதும் அறியும். குடிமையறமும் உரிமையும் துறந்து மக்கள் 'அடிமை மோகத்தில்' ஆழ்ந்து மடிந்து இருந்த காலத்தில், தாய்நாடு முற்றுரிமை பெற்றுயர முதலில் முயன்ற பெருந்தலைவருள் ஒருவர் இப் பெரியார்; தென்னிந்திய உரிமைப்போர் மறவருள் முதல்வர்.

செய்ந்நன்றி மறவா செம்மல் என்று போற்றி 'வந்தே மாதரம்' பிள்ளை என வாழ்ந்த பரலி திரு. சு. சண்முகசுந்தரம் பிள்ளையவர்கள், 'சிதம்பரனார் ஒரு வழக்கறிஞர்; வீரவாழ்க்கை நடாத்திய வீரர்; சிறந்த தமிழ்ப் புலவர்; பேச்சில் பெரு நாவலர்; முதன் முதல் கப்பல் ஓட்டிய உத்தமர்; சாதி சமயங்கடந்த தேசபக்தர்; செய்ந்நன்றி மறவாச் செம்மல்,'' என்று பரவி நிறைவு பெறுகிறார். மேலும் சண்முகசுந்தரனார் அவர்கள் குறிப்பிடுகையில், 'இன்னும் சிதம்பரனார், கோவைச் சிறைக்கோட்டத்தில் இருந்த காலத்தில் அன்னாருக்கு ஆர்வம் நிறைந்த துணைவராகயிருந்து உதவி புரிந்த உத்தமர், வழக்கறிஞரான திருவாளர் சி.கே. சுப்பிரமணிய முதலியார் என்னும் சிறந்த தமிழ் அறிஞராவார். பலவகையாலும் தமிழுக்கு அரிய தொண்டாற்றிவரும்

அன்னாரின் பெயரைத் தமது மூன்றாவது குமாரனுக்குச்சூட்டித் தமது நன்றியைச் செலுத்துவாராயினர். எனது இளவல் பரலி சு. நெல்லையப்பர், சிதம்பரனார் கோவைச் சிறையில் தவங் கிடந்த காலத்தில் அங்குச் சென்று கோவை வழக்கறிஞர் ஆதரவு கொண்டு சிதம்பரனாருக்கு உதவி புரிந்ததும் அவர் வேண்டு கோட்படி சிதம்பரனார் தமது வாழ்க்கை வரலாற்றை அகவலாகப் பாடி நெல்லையப்பருக்கு அளித்ததையும் இங்குக் குறிப்பிடாமலிருக்க முடியவில்லை' என்று நினைவு கூர்கிறார்.

## வரலாற்று நாடகம்

ப.க. மன்னர் மன்னன் என்பவர், 'செக்கிழுத்த சிதம்பரனார்' என்ற ஒரு வரலாற்று நாடகத்தைப் படைத்தார் 1955-ஆம் ஆண்டு. அந்நூலின் எண்ணமென அவர் சொல்லிய ஏக்கம்- 'எண்ணினேன், ஏக்கமுற்றேன், சிலபல நாட்கள் ஏற்றவிடை கிடைக்கவில்லை. சுதந்திரத்திற்காகச் செக்கிழுத்துச் சீர்குலைந்து செத்த சிதம்பரனாருக்கு ஏன் ஒரு சிலை படைக்கவில்லை இந்த நாடு? அவர் வாழ்ந்த காலத்தில் தான் அன்னியர் அடக்கு முறைக்கு அடங்கிக் கிடந்தார்கள் என்றால் இப்போதுமா அப்படி? அப்பெரியாரை உரிய முறையில் மக்கள் அறியவேண்டும் அன்னாருக்கு உரிய மரியாதையைச் செய்யவேண்டும் என்று எண்ணியதன் விளைவே இந்நாடகம்.'' அதனையே இந்நூலின் காணிக்கை என்று வரைந்த இரா. உலகநாதன் பின்கண்டவாறு எதிரொலிக்கின்றார். ''ஆனால் நம் நாட்டிலே சுதந்திரத்திற் காகத் தம் சுக வாழ்வை மறந்து அன்னியரை எதிர்த்துக் கப்பலோட்டிய தமிழனை, தொழிலாளர் தொண்டனை, சுதந்திரச் சூரியனை, தலைமறைவாய்த் தனிமையிலும், தவறியும் 'வந்தே மாதரம்' என்று வாய்விட்டு வாழ்த்த அஞ்சிய காலத்தில், வெள்ளைக் கலெக்டர் விஞ்சுவின் முன் ''வந்தே மாதரம்'' என்று வாயார வாழ்த்திய வயிர நெஞ்சனை, செக்கிழுத்த செம்மலைச் சிந்திப்பார் இல்லை. ஒரு சிலை வைப்பாரில்லை. மறைந்த மறையோனை—மக்கள் மறந்த மன்னனை நாடும் நாட்டு மக்களும் நல்ல முறையில் அறிய வேண்டும். அன்னாருக்கு நன்றி செலுத்த வேண்டும் என்றே அவர் தம் வாழ்க்கை வரலாற்றை நாடக உருவில் நடமாட விடுகிறோம்'' என முடிக்கின்றார்.

இந்த ஏக்கத்தின் ஒலி தமிழ்மகனின் தலைவனாம் முருகனின் காதினில் விழுந்ததாலோ என்னவோ, உலகத் தமிழ் மாநாடு கொண்டாடப்படுகின்ற நேரத்தில் வ.உ.சி. சிலையில் வடிக்கப் பெற்றுச் சென்னை துறைமுகத்தின் நுழைவாயிலில் அமையப் பெற்றார், அவனருளால்.

**சுடர்**

1966-ஆம் ஆண்டு டெல்லித் தமிழ்ச் சங்கம் 'சுடர்' என்ற இதழை வ.உ.சி. மலராக வெளியிட்டது. அந்த இதழ் முழுக்க முழுக்க வ.உ.சிக்காகவே காணிக்கையாகச் செலுத்தப்பட்டது. அவ்விதழில் 'சிங்கம் சிதம்பரனார்' என்று சித்திரிக்கிறார், கி.வா.ஜ.

''பின்னாளில் சிறைசெல்லல் மிகஎளிதா யாகிவிட்ட
பெற்றி கண்டோம்;
அந்நாளில் சிறைசெல்ல விரும்புவார் யாருமிலை;
அன்னை நாட்டின்
இன்னாமை போக்குதற்குச் சிறைசென்று செக்கிழுத்தான்
என்றால் அன்னோன்
முன்னோன்என் றுரைசெய்யின் அதை மறுத்துப் பொய்
யென்று மொழிவாருண்டோ.''

''சிதம்பரனார் பஞ்சகம்'' பாடிய பரலி. சு. நெல்லையப்பர்;

''நாட்டினில் வணிகம் ஓங்கி நல்வாழ்வு பெருகு மாறே
ஓட்டினார் நாவாய் அந்நாள் உறுதியும் திறனும் கொண்டே
போட்டியில் எதிர்த்து நின்றாய் புன்மையோர் சூழ்ச்சியாலே
வாட்டியே சிறையில் இட்டும் மனம் தளராது நின்றாய்
ஊக்கமும் வலியும் குன்றி ஒளியிழந் துலகில் நீண்ட
தூக்கத்தில் வீழ்ந்த நாட்டைத் துயில் எழுச் செய்தாய்
ஐய.'
பாக்கியம் பெருகி நாட்டார் பாரினில் ஓங்குமாறு
தூக்கிய வினைகள் செய்தாய் துணிவுமிக் குடைய
கோவே''

எனப் பாடுகின்றார்.

'வீர வணக்கம்' என்று வணங்கி அன்றைய அமைச்சராக இருந்த திரு. சி. சுப்பிரமணியம் கூறியதாவது: ''அன்னியனைப் போராட்டத்தின் மூலமாக மட்டுமன்றி ஆக்க வேலைத் திட்டங்களின் வாயிலாகவும் முறியடிக்கலாம்' என்பதைக் காந்தியடிகள் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார். அக்கொள்கைக்கு ஏற்ப நமது வ. உ. சி யும் சுதேசிக் கப்பல் மூலம் வாணிகம் நடத்தி எதிரிகளின் வளத்தைக் குறைத்து நம்முடைய நாட்டின் வளத்தைப் பெருக்க முயன்றார். அந்தப் போராட்டத்தின் போது அவர் அடைந்த இன்னல்கள் அளவற்றன. ஆனால் அவைகளைக் கண்டு அவர் சிறிதும் கலங்காமல்,

'சொந்த நாட்டில் பரர்க்கடிமை செய்தே
துஞ்சிடோம்; இனி அஞ்சிடோம்'

என்று முழங்கினார்.''

வக்கீல் தொழிலைப் பற்றி வ. உ. சி. சொன்னதை, ''சில நினைவுச் சுடர்கள்'' என்று குறிப்பில் கூறலந்த பி. ஸ்ரீ. கீழ்க் கண்ட நிகழ்ச்சியை நம்கண்முன் நிறுத்துகிறார்.

'ஒரு சமயம் ராவணனுடைய கிங்கரர்கள் அனுமனால் வதம் செய்யப்பட்டதை வருணிக்கும் காட்சியைப்பிரசங்கத்தினிடையே குறிப்பிட நேர்ந்தது. 'அவர்கள் கூட்டங்கூட்டமாக அவிந்து போனார்கள்' என்பதற்குக் கவிஞன் உபமானம் காட்டுகிறான். ஒரு நீதிமன்றம். அங்கே சாட்சிக் கூண்டில் நிற்கிறான் ஒருவன். அஞ்சாமல் நெஞ்சறியப் பொய் சொல்கிறான். ஏதோ, லாபம் கிடைத்துவிடும் என்று. ஆனால் கிடைப்பதென்ன? 'ஐயோ வம்சம் நாசமாகப் போகிறானே!' என்பது இக் காட்சியை அகக் கண்முன் காட்டி, அப்படிக் கூட்டங் கூட்டமாக அவிந்து போகிறார்கள், போர்க்களத்திலே கிங்கரர்கள் என்பதை உணர்த்துகிறான் கவிஞன். இப்பாட்டை நான் விளக்க முயன்றதும் திரு. சிதம்பரம் பிள்ளை மாலை மாலையாகக் கண்ணீர் வடித்தார்.

நானும் மற்றவர்களும் அதிசயமாக அவரை உற்று நோக்கினோம். தழதழத்த குரலில் அவர் எங்களை நோக்கி 'சாட்சிகள் மட்டுமா? வக்கீல்களாகிய நாங்களும் அப்படித் தானே சில சமயங்களில் நெஞ்சாரப் பொய் சொல்லவும் துணிகிறோம், நீதிக் கோயிலிலே, என்று சொன்னார். 'என்ன தங்கமான இதயம்' என்று நான் திகைத்து, 'இன்று இவரைப் புதிதாக அறிந்து கொண்டோம்' என்று எண்ணமிடலானேன்.''

## வில்லுப்பாட்டில் வாழ்க்கை வரலாறு

வ. உ. சியின் வாழ்க்கைதனை வில்லுப்பாட்டாக, கொழும்பில் இருந்த புலவர் ஜே. எம். விக்டோரியா என்பார் 1966-ஆம் ஆண்டு இயற்றினார். அதனைக் கொழும்பு நடிகவேள் லடிஸ் வீரமணி குழுவினர் 28-9-1966 அன்று கொழும்பு கமலா மோடி மண்டபத்தில் அரங்கேற்றம் செய்தனர். அந்தப் பாட்டில் நீதி மன்றத்தைப் பற்றிக் குறிப்பு வருகின்ற இடத்திலே சிதம்பரனாரும் அவரது தந்தையும் ஒருவருக்கொருவர் எதிர் வழக்காடியதுமுண்டு என்ற பகுதி:

''வாதி வக்கீல் பிரதிவாதி வக்கீல் என்றே
மன்றமிசை இருவருமே ஏறி நின்று
தாதையென்றோ தனயனென்றோ எண்ணம்இன்றித்
தன்கட்சி செயம் கொள்ள வேண்டும் என்றும்

சாதனையால் உணர்ச்சிவச மாகி அங்கு
சரமாரியாக அனல்பறக்கும் வண் ணம்
வாதிட்டு வார்த்தைகளால் தாக்கிப் பேசி
வழக்கதனை விளக்கமுற வுரைக் கலானார்.''

என்று நவீன்றிருப்பதைக் காணலாம்.

## நூற்றாண்டு விழா

அடுத்து வ. உ. சியின் நூற்றாண்டு விழா 1972-ஆம் ஆண்டு கொண்டாடப்பட்டது. அது போது, இந்தியப் பேரரசு தலைமை அமைச்சர் இந்திராகாந்தியம்மையார் தூத்துக்குடியில் கப்ப லோட்டிய வீரப் பெருமகனார் திருப் பெயரை அந்நகரிற்புதிதாக அன்று அமைக்கப் பெற்றுவந்த துறைமுகத்திற்குச் சூட்டியதும், அவர்களின் திருவுருவச் சிலையைத் திறந்து வைத்ததும், அவர் களின் திருவுருவம் பொறிக்கப் பெற்ற அஞ்சற்றலையினை வெளி யிட்டதும், வ. உ. சி. கல்லூரியின் வெள்ளி விழாவிலே தலைமை தாங்கியதும் பொதுவாக இந்திய மக்களுக்கும் சிறப்பாகத் தமிழ் மக்களுக்கும் எல்லையில்லா இன்பம் தருகின்றன. செந்தமிழ்ச் செல்வி என்ற திங்கள் வெளியீட்டினை நாற்பத்தேழாஞ்சிலம்பின் முதற்பரல், வ. உ. சிதம்பரனார் நூற்றாண்டு விழா மலராகவே வெளியிடப் பெற்றது, தமிழகம் பெறுதற்கரிய பெரும்பேறே யாகும். திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தார், திரு வ. சுப்பையா அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளியிடுகின்ற 'செந்தமிழ்ச் செல்வி' என்ற கழக இதழில், நாமக்கல் கவிஞர் நற்காதையும் கவிமணியின் கண்ணீர்ப் பாட்டும் கனகமணியெனக் காட்டப்பட்டது.

''எல்லாரும் தேசபக்தர் இந்த நாளில்
எத்தனையோ சிறைவாசம் இனிதாய்க் காண்போர்
சொல்லாலும் எழுத்தாலும் விளக்க வொண்ணாத்
துன்பமெல்லாம் சிறைவாசம் அந்த நாளில்
வல்லாளன் சிதம்பரனார் சிறையிற்பட்ட
வருத்தமெல்லாம்விரித்துரைத்தால் வாய்விட்டேங்கிக்
கல்லான மனத்தவர்க்கும் கண்ணீர்க் கொட்டக்
கனல்பட்ட வெண்ணெயெனக் கரைவார் இல்லை''

என நாமக்கல் கவிஞரும்,

''கைநோவக் கால் நோவப் கல்லுடைத்துச் செக்கிழுத்து
மெய்சோர்ந்தும் ஊக்கம் விடாது நின்ற — ஐயன்
சிதம்பரம் அன்றுசிறை சென்றிலனேல் இன்று
சுதந்திரம் காண்பாயோ சொல்'

எனக் கவிமணியும் பாடுகிறார்கள்.

சிதம்பரனாரின் செந்தமிழ்ப் பணிகள் குறித்து சிந்தனை ஓட்டம் தந்த பேராசிரியர் எழில் முதல்வன் வள்ளுவரின் குறள் ஒன்றிற்குச் சிதம்பரனார் வழங்கிய உரையினைப் பாராட்டிப் பேசுகின்றார்.

'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனைச்
சான்றோன் எனக் கேட்ட தாய்'

என்ற குறளின் அகலவுரையில் சிதம்பரனார் கீழ்க்கண்டவாறு எழுதுகிறார்:

''இன்'' என்றமையால் தன் மகனைச் சான்றோனாகத் தான் கண்ட பொழுது உளதாம் உவப்புத் தான் அவனை ஈன்ற பொழுது அடைந்த உவப்பினும் பெரிதென்பதும் பெரிது, என்றமையால் அதனினும் தம்மகனைச் சான்றோர் எனப்பிறர் கேட்ட பொழுது உளதாம் உவப்பு பெரிதென்பதும் பெறப்பட்டன. உவகை உள்ளக் களிப்பு. 'பெண்ணியல்பால்' தானாக அறியாமையின் கேட்டதாயெனக் கூறினார்' என்று உரைப் பாரும் உளர். பெண்ணின் இயல்பு தானாக அறியாமை என்பது அறிவிலார் கூற்றென அவ்வுரையை மறுக்க.''

திருக்குறளில் உள்ள முதல் மூன்று அதிகாரங்கள் திருவள்ளுவரால் எழுதப்பட்டிருக்க முடியாது என்பது சிதம்பரனார்கருத்து. அவர் இதற்கான காரணங்களையும் நுட்பமாக விரித்துக் காட்டியுள்ளார். சிதம்பரனாரின் செய்யுட் திறத்துக்குச் சான்றாகக் கீழ்வரும் பகுதியைக் காட்டுகிறார்.

மனமெனும் நினைப்பே நமையாக்கியது
நினைப்பால் நாம்நம் நிலைமையை உற்றனம்
ஒருவன் நினைப்புக் கருமறம் பற்றிடின்
தன்னிழல் போல மன்னும் இன்பமே.

மேலும் தமிழில் எழுந்த முதல் வாழ்க்கை வரலாற்று நூல்—செய்யுளால் அமைந்த முழுமைபெற்ற தன் வரலாற்று நூல் சிதம்பரனாரின் சுயசரிதமே என்று ஏற்றி மகிழ்கிறார், எழில் முதல்வன்.

வ.உ.சியின் இலக்கணப் பதிப்புப் பணி பற்றிச் சொல்லுகின்ற பேராசிரியர் அறவாணன் வ.உ.சி. பதிப்பித்த தொல்காப்பியம்- இளம்பூரணத்தைப் பற்றிப் புகழ்ந்து கூறுகையில் பின்வருமாறு பேசுகிறார்.

'ஏடுகளைப் படித்துப் பொருள் புரிந்து, மேற்கோட் செய்யுள்களின் நூற்பெயர்முதலியவற்றைத் துலக்குதல் எளிய பணியன்று. இத்துறையில் வ.உ.சி. முப்பதாண்டுகள் உழைத்திருக்கிறார்.'

"This book represents the fruitful results of his arduous labours in this field carried on for more than three decades". என்பது தொல்காப்பியப் பதிப்புக்களை வெளியிட்ட திரு.வி. வெங்கடேசுவர சாஸ்துருலு அவர்களது முன்னுரை.

சிதம்பரனாரிடம் கண்ட ஈகை உள்ளம் பற்றிச் சைவ சித்தாந்தக் கழகத்தின் கண்ணான தலைவர் வ. சுப்பையாப் பிள்ளையவர்கள் கூறியுள்ள நிகழ்ச்சி இங்கு நினைவு கூரத்தக்கது.

"1934-ஆம் ஆண்டில் செம்மல் சிதம்பரனார் தூத்துக்குடியில் தெற்குத் தேர்த் தெருவில் குடியிருந்த பொழுது அவர்கட்குப் போதிய வருவாயில்லாமல் துயருழந்த காலம். ஒருநாள் காலை நேரத்தில் தம் வீட்டு முன் கூடத்தில் ஏதோ சிந்தனையில் உலாவிக் கொண்டிருந்தார்களாம். அப்போது பார்ப்பனர்ஒருவர் தம் மகள் திருமணத்திற்குப் பொருளுதவி கேட்டு வந்தனராம். அந்த நேரத்தில் தாம் புத்தகங்களைக் கட்டுப் பேற்றஞ்சலில் (வி. பி. பி.) அனுப்பிய வகையில் அஞ்சற்காரர் ரூவா. 52 செலுத்தினராம். அத் தொகையினைப் பெற்ற சிதம்பரனார், உதவி கேட்டு வந்த அப் பார்ப்பனரிடம் அதனை அப்படியே மனமுவந்து கொடுத்தனர் என்று தூத்துக்குடி சைவ சித்தாந்த சபைத் தலைவர் சித்தாந்தப் பேராசிரியர் பி. சிவகுருநாத பிள்ளையவர்கள் தெரிவித்ததும்,

> இன்மையாற் சென்றிரந்தார்க் கில்லை
> யென்னாது ஈந்துவக்குந் தன்மையார்

என்று திருஞான சம்பந்தர் திரு ஆக்கூர்த் தேவாரப் பதிகத்தில் வேளாளர் நன்மக்களின் ஈகை யுள்ளதைப் போற்றுந் திருவாக்கு என்னுள்ளத்திலே தோன்றி எல்லையில் இன்பமளித்தது.'"

வ. உ. சி. தனித்தமிழ் மீது தனியாத ஆர்வம் கொண்டவர். தமிழில் பிறமொழிச் சொற்களைக் கலவாது எழுதவேண்டும் என்ற இயக்கம் இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலேயே தொடங்கி விட்டது. இதற்கு முன்நின்றவர் சுப்பிரமணிய சிவா. துணை நின்றவர் வ.உ.சி. சிவா தான் நடத்தி வந்த 'ஞானபானு' என்ற இதழில் கூடியவரையில் பிறமொழிச் சொற்களைக் கலக்காது எழுதினார். அதனால் அவருக்கும் 'சுதேசமித்திரன்' இதழுக்கும் கடுமையான கருத்துப் போர் நடைபெற்றது. 'மித்திரன்' தனித்தமிழ் நடையைச் சாடியது. அதற்காதரவான கடிதங்களைத் தன் இதழ்களில் வெளியிட்டது. அதில் ஒரு கடிதம் 'பாரதப் புத்திரன்' என்ற பெயரில், 'தமிழ்ப் பாஷையும் சுதேச மித்திரனும்' என்ற தலைப்பில் 1915 புரட்டாசி 16 இதழில்

தனித்தமிழ் நடையை எதிர்த்து வெளியிடப் பெற்றது. அக் கடிதத்திற்கு வ. உ. சி. எழுதிய மறுப்பு, 'சுதேசமித்திரன்' 29-10-1915 இதழில் வெளிவந்தது.

அந்த விவாதத்தின் முடிவாக வ. உ. சி. கூறுகிறார்:

"குறித்த பொருளைச் சரியானபடிக் குறிப்பிக்க நம் பாஷையில் பதங்களில்லை என்று தமிழ்ப் பாஷை இலக்கண இலக்கியங்களைக் கற்றவர் எவரும் கூறார். யான் தமிழ் இலக்கண இலக்கியங்களில் ஒரு சிலவே கற்றுள்ளேன். அவ்வாறிருந்தும், யான் அறிந்துள்ள அந்தப் பாஷையின் எந்த மொழியையும் நம் தமிழ் மக்களில் எவரும் எளிதில் அறியுமாறு (சமஸ்கிருத சொற்களின் கலப்பேயில்லாத) தனித்த தமிழில் மொழி பெயர்த்துக் கொடுக்கத்தக்க திறமையையுடையேனென்றால், என்னினும் அதிகமாகத் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுள்ளவர்கள் அவ்வாறு செய்யத்தக்க திறமையையுடையவர்களாயிருப்பார்களென்பதை யான் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை." இவ்வாசகத்தில் இவரின் அடக்கம் எழிலாகின்றது.

வீரச் சிதம்பரம் பிள்ளை என்று அவரை வருணித்த கவிஞர் சுத்தானந்த பாரதியார் அவரைப் பற்றிக் கூறுகின்ற கருத்துக்கள் நமக்குப் பரவசமூட்டுகின்றன.

'1909 முதல் சிதம்பரம் பிள்ளையை அறிவேன். சுதேசிக் கப்பலுக்குப் பிடியரிசிக் கலயம் வைத்துப் பணந்திரட்டி அளித்தேன். எனது சிலம்பம், வாள் வீச்சுக்களை அவர் 'சவாசு பாண்டியா' என்று போற்றினார். எனது இசைப் பாடல், யோக சித்தி, பாரதசக்தி—அனைத்தையும் படித்துப் புகழ்ந்தார் தூத்துக்குடி வட்டக் கிணற்றில் அவர் தலைமையில் பலமுறை பேசியதுண்டு. அவர் நெட்டான வீரத் திருவாளர்; முறுக்கு மீசையழகர்; திருக்குறளை மூச்சுப் போல் ஒப்பித்துப் பேசுவார். விடுதலை மேடையில் வீரரின் இடிமுழக்கம் எங்களுக்குப் புத்துணர்ச்சி தருவது வழக்கம்' என்பதே அச்சொல்.

மனைவிக்கு ஒரு நூல் அமைத்ததை மனம் மகிழ்ந்து மயக்குக் காதையில் இசையோடு மீட்டுகிறார் கவிஞர் ஆனந்தம். அந்தக் காதை இதோ:—

'இல்லறத்தில் ஈடுபட்டு வலிமை சேர்த்தோர்
எழில்மனைவி தனக்கொருநூல் இயற்றினரா?
வல்லவராம் இவர்தந்த வள்ளியம்மை
வரலாறும் உரைநூலும் அரிய செல்வம்!

எல்லையில்லா மொழிப்பற்றுக் கொண்ட தாலே
எத்தனைநூல் முதன் முதலாய் பதிப்பித்துள்ளார்!
'நல்ல'வர்கள் இருந்தாரே இவர்போற் உற்ற
நண்பர்தமை வறுமையிலும் காத்தோர் யாரே?'

சீரிய கொள்கை சிதம்பரப் பதிகம் என்று பாடிய தமிழ் முழு ஞாயிறு தேவநேயப் பாவாணர், சிதம்பரனாரின் சிறப்பினைச் செந்தமிழில் சீர் தூக்கி வைக்கிறார்.

மாடுபோற் செக்கிழுத்து மட்டிபோற் கல்லுடைத்து
வேடுபோற் கேடா யுடையுடுத்துப்—பாடுபட்டான்
கேழ்வரகுக் கூழுண்டு கீழ்விலங்கிற் கீழ்விலங்கின்
தாழ்வுறுதற்கே சிதம்பரம்.

தொல்காப் பியப்பகுதித் தொல்லுரையும் ஒண்குறளின்
மல்கா வுரையொன்றும் மாண்டமிழ்க்கே—அல்காத
இன்னிலைப் புத்துரையும் ஏனைப் பதிப்புகளும்
துன்னிய வ. உ. சி. தொண்டு.

**பல்கலைக் கழக மலர்**

சென்னைப் பல்கலைக் கழகம் தனதுத் தமிழ்த்துறை சார்பில் வ.உ.சி.யின் முதல் நூற்றாண்டு விழாவினை ஒரு சிறந்த கருத்தரங்கு விழாவாகக் கொண்டாடியது முற்றிலும் பொருத்தமே. அந்தக் கருத்தரங்கில் ''இந்திய விடுதலையியக் கத்தில் வ.உ.சியின் பங்கு'' என்று எடுத்துக் கூறிய வரலாற்றுத் துறைப் பேராசிரியர் சி. ஈ. இராமச்சந்திரன் அவர்கள்,

''நமக்கெனச் சில கொள்கைகளை வகுத்துக் கொண்டு அவற்றின் வழியே நடந்த கடமை வீரர் இவர். 'பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும் நற்றவ வானினும் நனிசிறந்ததெனக்' கொண்ட செயல் வீரர், நாட்டுப் பற்றிலே தம் வீட்டு நலன் களைத் துறந்த தியாகச் செம்மல். வறியார்க்கு வழங்கிய இல்லோர் செம்மல், நாட்டின் விடுதலைக்காகத் தம் சொந்த வாழ்க்கையைப் பணயம் வைத்து அரசியல் விடுதலைத் தீயில் தம்மைச் சிறிது சிறிதாக மாய்த்துக் கொண்ட வள்ளல்'', என்று வ. உ. சியைப் போற்றி மகிழ்கின்றார். பொருளியல் துறைத் தலைவரான வேதகிரிசண்முகசுந்தரம்' சிதம்பரம், பிள்ளையின் அரசியல்பற்றினைக் கூறும் காலத்து, புலவர் இளம் வழுதியின் 'வாராய் சிதம்பரமே வா' என்ற கலிவெண்பாவை நினைவு கூர்கின்றார்.

''வீறுடனே அந்நாளில் வீர சிதம்பரனார்
சீறிப் பரங்கியர்க்குத் தீயாகி நின்றதுவும்

ஆர்க்குங் கடலிடத்தே ஆங்கிலேயர் தாம்பதற
நெருக்கு நேர்க்கப்பல் சீர்பெறவே விட்டதுவும்
தூத்துக் குடியதனில் துன்புற்ற ஏழையர்தம்
மூத்த வறுமை முறிய நெசவாலை
நாட்டி எளியோரின் நண்பனாய் நின்றதுவும்''

நாடறியும் என்ற பாடலைப் போற்றி மகிழ்கிறார்.

''1972-ஆம் ஆண்டு இந்தியக் கப்பல்களின் எண்ணிக்கைப் படி உலக நாடுகளில் 17ஆவதாக உள்ளது என்பதனைச் சுட்டிக் காட்டி, அந்தக் கப்பல் வணிகம் மேலும் மேலும் வளரவேண்டும் என்று ஆசை தெரிவித்து இதற்கெல்லாம் முதன் முதலில் வித்திட்டவர் வ. உ. சி.'' என்று பாராட்டுகின்றார்.

''வ. உ. சி. அவர்கள் இந்தியப் பொருளாதாரத்திற்குச் செய்த சீரிய தொண்டு சுதேசிக் கப்பல்கள் ஆரம்பிக்கும் வாயிலாகச் சுதேசித் தொழில்கள் மறுமலர்ச்சி அடைய வழி கோலியதாகும். வெற்றிநடைபோடும் இந்தியக் கப்பல்துறையின் ஒவ்வொரு கட்டத்திலும் வ. உ. சியை நினைவு கூர்ந்தே ஆக வேண்டும்'' என வந்தனை கூறுகின்றார்.

''சமூக சீர்திருத்தப் பணிகளுக்கு வ. உ. சியின் தொண்டு'' என்ன என்று கூறவந்த அரசியல் ஆட்சியியல் துறைத் தலைவர் பெருமாள் 'தீவிரவாதியின் தீவிர செயலுக்கு வித்திட்டவரும் அவரே' எனவும், 'குற்றம் குற்றமே' என இறுதி வரை போராடும் குணம் உடையவர் எனவும் 'அரசியலில் தீவிரவாதியான சிதம்பரனார் சமுதாயச் சீர்த்திருத்தங்களிலும் சமுதாயச் சேவைகளிலும் முன் நின்றார்; சாதி வெறி தலைதூக்கி ஆடிக் கொண்டிருந்த அந்தக் காலத்தில் தீண்டாமையை ஒழிக்க அரும் பாடுபட்டார். சாதியினால் உண்டான உயர்வு தாழ்வையும் தீண்டாமையையும் அறவே வெறுத்தார்' எனவும் சுட்டிக்காட்டி வீரர் சிதம்பரனாரின் அரசியல் பணியையும் சமுதாயத் தொண்டினையும் சரிவர நாளேடுகளும் வரலாற்று நூல்களும் குறிப்பிடவில்லை'' என ஆதங்கப்படுகிறார்.

**''சுரதா'' தந்த மலர்**

சிறையிலிருந்த புலவர்களை வரிசைப் படுத்திக் குறிப்பு ஒன்று தருகிறார் வ. உ. சியின் நூற்றாண்டு மலர் ஒன்று வெளியிட்ட கவிஞர் சுரதா. 'கழுமலப் போரிலே' சோழன் செங்கணானிடம் தோல்வியுற்றுக் குடவாயிற் கோட்டத்துச் சிறையிலிருந்த பொழுது சேரமான் கணைக்காலிரும்பொறை உன் ஆட்சியைக் கட்டாயம் கவிழ்த்தே தீருவேன்'என்று வெஞ்சினம் சொன்னான்

கி. பி. 50இல். ஏழாம் நூற்றாண்டில் பாடலிபுத்திரச் சிறையில் மன்னன் மகேந்திரவர்ம பல்லவனால் சுண்ணாம்புக் காளவாயில் இடப்பட்ட நேரத்தில், 'மாசில் வீணையும் மாலை மதியமும்' என்று பாடியவர் திருநாவுக்கரசர். 13ஆம் நூற்றாண்டில் சோணாட்டுச் சிறையில் ஒட்டக்கூத்தர் பாடலை வெட்டிப் பாடினார் புகழேந்திப்புலவர். திருநெல்வேலியில் ஆட்சி புரிந்த வடமலையப்பன் என்ற சிற்றரசன் சமய வெறுப்பின் காரண மாகக் குருகையூர் வைணவப் புலவர் ஒருவரைச் சிறையிலிட்ட பொழுது 'வேற்படை முருக என் தலை கொய்து எனக்கு இரங்கி ஆட்கொள்ளவேண்டும்' என்று பாடினார். 18ஆம் நூற்றாண்டில் திருமலைத் தேவர் என்பவரால் கிளிக் கூண்டுச் சிறையில் சிவ கங்கையில் அடைக்கப்பட்ட படிக்காசுப் புலவர் 'பாட்டில் சிறந்த படிக்காசன் என்னும் ஓர் பைங்கிளியை கூட்டில் அடைத்து வைத்தாய்' என்று பாடினவர். 20ஆம் நூற்றாண்டில் காந்தியும் நேருவும் கவிதை வடிவில் எவருக்கும் மடல் வரைந்த தாக வரலாறு இல்லை. ஆனால் வ. உ. சி. அவர்களோ பெரும் பாலும் கவிதை வடிவிலேயே பிறருக்குக் கடிதம் எழுதி வந்தார். இவர் கண்ணனூர்ச் சிறையிலிருந்த பொழுது தம் தந்தைக்குக் கவிதை வடிவில் எழுதிய கடிதம் இது:

''சுவாமியே! தந்தையே! தூயற்ற பெரியோய்!
அவாவியே வந்தெனை ஆண்டருள் ஈசா!
மூன்றிரு திங்கள் முரண்சிறை இருந்தேன்,
இந்தவாரம் எடுத்த நிறுவையில்
ஐந்தி லொன்றாக அருகிய தென்னுடல்.
அரிசி உணவுக்கு அளித்தனர் அனுமதி
பெரியவன்; மற்றவன் பேசான் என்னோடு.
சீரிய நின்னடி சிரமேற்கொண்டு யான்
பாரிய என்னுளப் பாரதத் தாய்க்கும்
உரிமையொடு பெற்றெனை உவப்பொடு வளர்த்த
பெருமைசேர் அன்னைக்கும் பிறர்க்கும் எனது
மெய்மன வாக்கால் விரும்பிஇன் றளித்தேன்
தெய்வ வணக்கமும் சீர்தரும் வாழ்த்துமே''

அந்த நூற்றாண்டு மலரிலிருந்து வேறு சில சுவையான சேதிகள் தெரிய வருகின்றன. தூத்துக்குடியில் இருந்து வந்த வ. உ. சியின் ஆருயிர் நண்பரான சங்கர நாராயணபிள்ளை என்பவர் வ. உ. சி. சிறையிலிருந்து விடுதலையாகி வெளிவந்த போது அவரை முதன் முதலில் வரவேற்றார். அதுபோல, முதன் முதல் வ. உ. சி யின் வரலாற்றை எழுதியவர், பரலி சு. நெல்லையப்பர்.

'போலிகள் புகழப்படும்போது, அறிஞர்களின் புகழ், மறைவில் இருந்து கொண்டு அழுகிறது'—என்பதற்கு எத்தனையோ பேருடைய தியாகம் நமக்கு எடுத்துக்காட்டாக இருக்கிறது. பழம் பெரும் தேச பக்தரான பரலி. சு. நெல்லையப்பர் அவர்கள் வறுமையோடு போராடிக் கொண்டே வார ஏடொன்று நடத்தினார். சிறைக்குச் செல்ல அஞ்சிய அந்தக் காலத்திலேயே அவர் துணிந்து சிறை சென்றார். எழுத்தாளர்களும் அவரை மறந்துவிட்டனர். அரசியல்வாதிகளும் அவரை அடியோடு மறந்துவிட்டனர். நாட்டுக்குப் பாடுபட்ட அந்த நல்லவரே வ. உ. சியின் வாழ்க்கை வரலாற்றை முதன் முதலில் எழுதி வெளியிட்டவர்.

முதன் முதலாக வ. உ. சியின் நினைவாக விடுமுறை விட்டவர் தோழர் ஈ. இராம. அரங்கசாமி அவர்கள். முதன் முதலாக வ. உ. சியாக நாடகத்தில் நடித்தவர், அவ்வை தி. க. சண்முகம் அவர்கள். கப்பலோட்டிய தமிழன் வ. உ.சியின் வரலாற்றை முதன் முதல் திரைப்படமாக்கியவர் பி.ஆர். பந்துலு. கப்பலோட்டிய தமிழனாக முதன் முதலில் திரைப்படத்தில் நடித்தவர் நடிப்பின் கருவூலமாம் சிவாஜி கணேசன் அவர்கள்.

மற்றுமொரு சேதி, 1906ஆம் ஆண்டுக்கு முன்பு சென்னையில் தமிழர்கள் வாழ்ந்த பகுதியைப் 'பிளாக் டவுன்' என்று குறிப்பிட்டார்கள். பின்பு சுதேசமித்திரன் உதவியாசிரியர் சி. வி. சுவாமிநாதய்யர் அவர்களின் இடைவிடாத முயற்சியின் காரணமாகப் 'பிளாக் டவுன்' என்ற பெயர் 'ஜார்ஜ் டவுன்' என்று 1906ஆம் ஆண்டு மாற்றப்பட்டது. இன்று பிளாக் டவுன் என்றும், 'ஜார்ஜ் டவுன்' என்றும் அழைக்கப்பட்டுவந்த அந்தப் பகுதி தமிழக அரசின் ஆணைப்படி ''வ. உ. சி. நகர்'' என்று வழங்கப்படுகிறது.

அரசியலில் ஓர் அரிச்சந்திரன் என்று வ.உ. சியைப் பாராட்டி உவமைக் கவிஞர் சுரதா தனக்கே உரித்தான பொன் வரிகளில் வடிக்கிறார்.

'அரிச்சந்திரன் பொய் சொல்லாத
அரசனாய் வாழ்ந்தான் என்பர்
அரசியல் தலைவர் தம்மில்
அரிச்சந்திர னாக வாழ்ந்த
பெருமையைக் காந்தி இங்கே
பெறுமுன்னர் இவரே பெற்றார்
ஒருமுறை பிறந்து வாழ்வில்
ஒரேஒரு முறைதான் செத்தார்'

'மலர்களிலே அவர் மல்லிகை' என்று அவர் புகழினைப் பாடி முடிக்கின்றார் கவிஞர் சுரதா அவர்கள். 'கொடியில் பிறந்து மங்கையர் கூந்தலில் குடியேறும் மல்லிகைப் பூவினால், கபம் நீங்கும், கண்மயக்கம் தீரும்; உடற் சூடு தணியும்! அது போல் வ. உ. சி. அவர்களின் அரிய கருத்துக்களால் தன்னலம் என்னும் கபம் நீங்கும்;மக்கள் தலைவன் நான் ஒருவனே என்னும் மயக்கம் தீரும்; அரசியலின் அதிகாரச் சூடும் தணியும். ஆகவே அவர் மலர்களிலே மல்லிகையைப் போன்றவர்.

# முடிவுரை

மக்கட்பிறவி கிடைத்தற்கரியது. அது மற்றைப் பிறவிகளி லிருந்தும் அறிவு மிக்கது. அந்தப் பிறவியில் பேரருள் பெற்றவனே இந்த உலகிலே பெயர் பெற்றவனாகிறான். வாழினும் சாவினும் வருந்தினும் போய் வீழினும் இறைவன் கழல் விடாது, வாழ்வோனே சிறப்பானவனாக வாழ்கிறான். அந்தச்சிறப்பினை அடைதற்குச் செய்கின்ற செயல்கள் அத்தனையும் பிறருக்காக வாழுகின்ற செயல்களாக அமைந்து விடுதல் பெருமையாகும்.

நெல்லை மண்ணில் பிறந்து, எல்லையில்லாத் தமிழைத் தமதாக்கி, வெள்ளைக்காரனின் அடிமைத்தளை விட்டொழிய, மேலைக்கடலில் நாவாய் ஒட்டி, சொல்லைத் தொழிலாக்கி, ஏழைகளின் துயர் துடைத்து, நாட்டில் தேசிய வெள்ளம் ஓட வீட்டின் சுகம் மறந்து, வாட்டும் சிறை புகுந்து செக்கிழுத்துச் செம்மலாகி, செந்தமிழில் கம்பனாகி, கலைஞனாகி, காவிய நாயகனாகி, இறுதிக் காலத்தில் வறுமையினை வரவேற்றுத் தழுவி வானுலகு சென்ற வ.உ.சியின் வரலாறு வாழ்தமிழர் ஒவ்வொருவரும் உய்த்து உணர்ந்து போற்றப்பட வேண்டிய ஒன்றாகும். அந்தப் பெருமகனாரின் திருவரலாற்றினைத் தமிழன்னை தனது மெல்லிய காலடி ஓரத்தில் காணிக்கையாக்க எனக்கு ஆதரவு காட்டிப் பணிசெய்ய வைத்துப் பயன்பெற வைத்த தமிழன்பர் அனைவருக்கும் என் பணிவார்ந்த நன்றி. தென்றிசைத் தமிழை உலகத் தமிழாக்க உழைத்து நிற்கும் இயக்குநர் முனைவர் ச.வே. சுப்பிரமணியம் அவர்கட்குத் தனி நன்றி. வந்திருந்து கேட்டோர்க்கும் வாழ்த்தும் உள்ளங்களுக்கும் வற்றாத நன்றி.

## இந்நூலில் எடுத்தாளப்பட்ட நூல்கள்


1. வ.உ.சிதம்பரனாரின் கடிதங்கள்.
2. வள்ளியம்மை சரித்திரம் வ.உ.சிதம்பரம் பிள்ளை 1915 இந்தியா பிரிண்டிங் வொர்க்ஸ், சென்னை.
3. மெய்யறிவு - வ.உ.சிதம்பரம்பிள்ளை, 1915 – பாரிநிலையம் சென்னை.
4. திருக்குறள் (அறத்துப்பால்) மணக்குடவருரை - வ.உ. சிதம்பரம்பிள்ளை 1917 - கே. ஆர். பிரஸ், சென்னை.
5. மனம்போல வாழ்வு - வ.உ.சிதம்பரனார் - 1920- சரஸ்வதி அச்சியந்திரசாலை, சென்னை.
6. தொல்காப்பியம் இளம்பூரணம் - பொருளதிகாரம் - வ.உ.சிதம்பரம்பிள்ளை - 1928 - வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி.
7. அகமே புறம் - வ.உ.சிதம்பரனார், 1928 - புரோகிரஸிவ் பிரஸ், சென்னை.
8. மெய்யறம் - வ.உ.சிதம்பரனார், 1930, கலாரத்நாகர அச்சியந்திர சாலை, சென்னை.
9. திருப்பொய்கையார் இன்னிலை, வ.உ.சிதம்பரம்பிள்ளை, 1930 – அகஸ்தியர் அச்சுக்கூடம், அம்பாசமுத்திரம்.
10. வலிமைக்கு மார்க்கம் - வ.உ.சிதம்பரனார் - 1930 - வி. இராமஸ்வாமி சாஸ்துருலு அண்ட் ஸன்ஸ்.
11. சாந்திக்கு மார்க்கம்- வ.உ.சிதம்பரனார் -1934-வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி.
12. சிவஞான போதம் - வ.உ.சிதம்பரனார், 1935 - அய்யனார் பிரஸ், தூத்துக்குடி,
13. தேசாபிமான வ.உ.சிதம்பரம்பிள்ளையவர்களைப் பற்றிய பாடற்றிரட்டு -1935 பி. வேலாயுதம்பிள்ளை, தூத்துக்குடி.
14. தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் - இளம்பூரணம் - வ.உ.சிதம்பரம்பிள்ளை - 1941 - விக்டோரியா பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி.
15. சுய சரிதை - வ.உ.சி. - வ.உ.சி. சுப்பிரமணியம் - 1946 முல்லைப்பதிப்பகம் சென்னை.
16. கப்பலோட்டிய தமிழன் (வ.உ.சிதம்பரனார் வரலாறு) ம.பொ.சிவஞானம் - 1947 - சரஸ்வதி விலாசம் பிரஸ் 'கதம்பம்' வெளியீடு.

17. நம்நாட்டுத் தலைவர்கள் - புலவர் அரசு 1970 - திருநெல் வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை.

18. வ.உ.சிதம்பரம் பிள்ளை மலர் - 1951 - பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தார், மாதுங்கா.

19. செக்கிழுத்த சிதம்பரனார் (வரலாற்று நாடகம்)-ப.க. மன்னர் மன்னன் 1955 - ப.மு.க. வெளியீடு, காவேரிப் பட்டினம்.

20. சுடர் - வ.உ.சி. மலர் - தில்லித் தமிழ்ச் சங்கத்தார் - 1964 - தில்லித் தமிழ்ச் சங்கம்.

21. வீரத்தமிழன் வ.உ.சிதம்பரம் பிள்ளை வில்லுப்பாட்டு - புலவர் ஜே.எம். விக்டோரியா - 1966-தமிழர் முன்னேற்றக் கலாமன்றம், கொழும்பு.

22. கப்பலோட்டிய தமிழன் - ம.பொ.சிவஞானம், 1972- இன்ப நிலையம், சென்னை.

23. வ.உ.சி.யும் மதுவிலக்கும் - கல்கி-செப்டம்பர் 3, 1972 - கல்கி பிரஸ்.

24. வ.உ.சி. நூற்றாண்டு விழா மலர் - செப்டம்பர் 1972-செந் தமிழ்ச் செல்வி திங்கள் வெளியீடு,

52. வ.உ.சிதம்பரனார் நூற்றாண்டு மலர் - கவிஞர் சுரதா - 1972

26. கப்பலோட்டிய தமிழர் - வ.உ.சிதம்பரனார் நூற்றாண்டு விழாக் கருத்தரங்கு - 1972 - சென்னைப்பல்கலைக் கழகம் தமிழாய்வு-தொகுதி 2.

27. விடுதலை வீரர் வ.உ.சி. வாழ்வும் இலக்கியமும் - புலவர் மணியன் - 1976-மாப்பிள்ளை பதிப்பகம். சென்னை.

# சிறப்புப் பெயரகராதி

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | தமிழில் விடுகதைகள் | .... ரூ. 12-00 |
| 2. | உலகத் தமிழ் எழுத்தாளர் யார்? எவர்? | .... ரூ. 6-00 |
| 3. | தமிழர் தோற்கருவிகள் | .... ரூ. 10-00 |
| 4. | தமிழும் தமிழரும் | .... ரூ. 5-00 |
| 5. | தமிழர் இசை | .... ரூ. 70-00 |
| 6. | ம. பொ. சி.யின் இலக்கிய நூல்கள்-ஓர் மதிப்பீடு | .... ரூ. 20-00 |
| 7. | இளங்கோவின் இலக்கிய உத்திகள் | .... ரூ. 12-00 |
| 8. | திராவிட மொழி இலக்கியங்கள் | .... ரூ. 35-00 |
| 9. | தமிழ் இலக்கியக் கொள்கை - 8 | .... ரூ. 20-00 |
| 10. | தமிழ் இலக்கியக் கொள்கை - 9 | .... ரூ. 20-00 |
| 11. | தொல்காப்பியம் - புணரியல் | .... ரூ. 10-00 |
| 12. | தொல்காப்பியம் வேற்றுமை மயங்கியல் | .... ரூ. 12-00 |
| 13. | தொல்காப்பியம் - விளிமரபு | .... ரூ. 6-00 |
| 14. | தொல்காப்பியம் - பெயரியல் | .... ரூ. 12-00 |
| 15. | தொல்காப்பியம் - வினையியல் | .... ரூ. 20-00 |
| 16. | பிரபந்த தீபிகை | .... ரூ. 12-00 |
| 17. | கண் மருத்துவம் | .... ரூ. 50-00 |
| 18. | வர்ம சூத்திரம் | .... ரூ. 10-00 |
| 19. | தன்வந்திரி குழந்தை வாகடம் | .... ரூ. 14-00 |
| 20. | வெள்ளைக்காரன் கதை | .... ரூ. 7-00 |
| 21. | மெய்க்கீர்த்திகள் | .... ரூ. 20-00 |
| 22. | சிந்து இலக்கியம் | .... ரூ. 8-00 |
| 23. | தமிழ்ச் சுவடிகள் அட்டவணை | .... ரூ. 6-00 |
| 24. | தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் | .... ரூ. 12-00 |
| 25. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - 1 | .... ரூ. 12-00 |
| 26. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - 2 | .... ரூ. 22-00 |
| 27. | இஸ்லாம் வளர்த்த தமிழ் | .... ரூ. 15-00 |
| 28. | உ. வே. சா. சங்க இலக்கியப் பதிப்புகள் | .... ரூ. 10-00 |
| 29. | டாக்டர் உ. வே. சா. காப்பியப் பதிப்புகள் | .... ரூ. 10-00 |
| 30. | தமிழரின் தாயகம் | .... ரூ. 10-00 |
| 31. | பாவாணரும் தனித்தமிழும் | .... ரூ. 12-00 |
| 32. | தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வு | .... ரூ. 10-00 |
| 33. | விவிலியம் - திருக்குறள் - சைவ சித்தாந்தம் | .... ரூ. 20-00 |
| 34. | செங்கை மாவட்ட ஊர்ப் பெயர்கள் | .... ரூ. 25-00 |
| 35. | மொழி பெயர்ப்பியல் | .... ரூ. 10-00 |
| 36. | தமிழர் திருமணம் | ... ரூ. 25-00 |
| 37. | தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம் | ... ரூ. 35-00 |
| 38. | தமிழ் நாவல்கள் (அகர வரிசை) | ... ரூ. 40-00 |
| 39. | எண்பத்திரண்டில் தமிழ் | ... ரூ. 90-00 |
| 40. | அகலமும் ஆழமும் | ... ரூ. 12-00 |
| 56. | மருந்து செய் முறைகள் | ... ரூ. 45-00 |
| 41. | Siddha Medicine (Heritage of the Tamils) | .... Rs. 45-00 |
| 42. | Cultural Heritage of the Tamils | .... Rs. 20-00 |
| 43. | Literary Heritage of the Tamils | ... Rs. 50-00 |
| 44 | Papers on Tamil Studies | ... Rs. 15-00 |
| 45. | Tamil Drama | ... Rs 20-00 |
| 46. | Dr. Mu. Va. | ... Rs. 20-00 |
| 47. | Thiru Murugan | ... Rs. 5-00 |
| 48. | A Study of the Perunkatai | ... Rs 12-00 |
| 49. | Tamil Writers Directory | ... Rs. 10-00 |
| 50. | Dissertations on Tamilology | ... Rs. 10-00 |
| 51. | Tamil-Text (An-Auto Instructional Course) | ... Rs. 25-00 |
| 52. | Siddha Medical Manuscripts in Tamil | ... Rs. 8-00 |
| 53. | Karaikkal Ammaiyar | ... Rs. 6-00 |
| 54. | Heritage of the Tamils-Temple Arts | ... Rs. 50-00 |
| 55. | Tolkāppiyam | ... Rs. 25-00 |